# பெரியபுராண ஆராய்ச்சி

இது கருவூர் அறிவுதயக் கழகத் தலைவரும், 'இந்து மதமும் தமிழரும்' என்னும் நூலின் ஆசிரியரும், முன்னாள்-இந்தி எதிர்ப்புத் தனி ஆணையாளரும் (சர்வாதிகாரியும்) தமிழ்த் தொண்டருமான

**கருவூர், ஈழத்து அடிகளால்**

இயற்றப்பட்டது

பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, திருச்சி-17.

விலை : ] *1973* [ ரூ. *1-00*

# பெரியபுராண ஆராய்ச்சி

இது கருவூர் அறிவுநயக் கழகத் தலைவரும், 'இந்து மதமும் தமிழரும்' என்னும் நூலின் ஆசிரியரும், முன்னாள் - இந்தி எதிர்ப்புத் தனி ஆணையாளரும் (சர்வாதிகாரியும்), தமிழ்த் தொண்டருமான

**கருவூர், ஈழத்து அடிகளால்**

இயற்றப்பட்டது

பெரியார் சுயமரியாதைப் பிரச்சார
நிறுவன வெளியீடு, திருச்சி-17.

# பொருளடக்கம்

# முன்னுரை

நமது தாய்மொழியாந் தமிழ்மொழி இயற்கை அமைப்பும் இனிமைச் செறிவும் வாய்ந்த ஒரு உயர்தனிச் செம்மொழியாகும். இதனை ஒப்பதும் மிக்கதுமான ஒரு மொழி உலகின் எப்பகுதியிலும் இல்லை என்று கூறின், அது மிகையாகாது. இயற்கை அமைப்பும் இனிமையும் பெற்றுள்ள இதன்கட் செயற்கையும் புனைவும கனைப்பும் புகவிடுதல் அடாது. பண்டைத் தமிழ்ப்புலவர் செயற்கையும் புனைவுமாகிய மாசுகள் தமிழ் மொழியை அணுகாது பாது காத்து வந்தனர். உண்மையாக நடவாதனவும், இயற்கைக்கு மாறானவும், பகுத்தறிவிற்குப் பொருந்தாதனவுமான எதனையும் பண்டைத் தமிழ் நூற்களிற் காண்டல் அரிது. ஆரியர் நம்மிடையே வந்து கலந்த பின்னர் தான், பகுத்தறிவிற்கும், இயறகைக்கும் மாறான பல புனைவுரைகள் தமிழிற் புகுவவாயின. ஆரியர், தங்கள் பிழைப்பிற்காக, இல்லாதனவும் நடவாதனவுமான பல பொய்க்கதைகளைத் தங்கள் வடமொழியில் எழுதிவைத்ததுமின்றி, அவை எல்லாம் கடவுளரைப்பற்றிய புதுமை வரலாறுகள் என்றுங் கூறி அக்காலத் தமிழரசரின் உதவியைப் பெற்றுத் தமிழ் மக்களை ஏமாற்றிவிட்டனர். பொய்யும் வழுவுந் தோன்றாத பண்டைக்காலத்தில் வாழ்ந்துபோந்த கவடற்ற தமிழ்மக்கள், தங்களைப் போலவே பிறரையும் எண்ணும் இயல் பினராதலால், ஆரிய மக்கள் கூறிய புரட்டுக் கதைகள் எல்லாம் மெய்யானவை என்றே நம்பினார்கள். அதனால், அக்கதைகள் எல்லாம் வடமொழியுந் தமிழ்மொழியுங் கலந்த மணிப்பவள நடையில் மொழி பெயர்க்கப்பட்டுத், தமிழ்

மக்களிடையே இயற்கைக்கு மாறான 'கடவுள் நம்பிக்கை' என்ற ஒரு புதிய உணர்ச்சி உண்டாவதாயிற்று. கடவுள் என்ற ஒரு தனிப்பொருள் எங்கோ இருந்து கொண்டு இவ்வுலகத்தை இயக்கிக் கொண்டிருக்கிறதென்ற ஒரு இயற்கைக்கு மாறான உணர்ச்சி தமிழ்மக்களிடையே உண்டாக்கப் பட்ட பின்னர் தான், கடவுளரைப்பற்றிய புதுமைக்கதைகள் பல தோன்றி மக்களுக்கு அடிமை உணர்ச்சியையும் மூட நம்பிக்கையையும் உண்டாக்குவவாயின. கடைக் கழக காலத்திலிருந்தே இவ் வேண்டாக் கடவுள் நம்பிக்கையும், அது காரணமாக ஏற்பட்ட தன்னையே தான் நம்பா மனப் பான்மையுந் தமிழ்மக்களுக்கு ஏற்பட்டு விட்டதென்பதற்குக் கடைக் கழக காலத்தில் முந்திய இடை-தலைக் கழக காலங் களில் இயற்றப்பெற்ற தமிழ் இலக்கியங்களையும், கடைக் கழக காலத்தில் இயற்றப்பெற்ற தமிழ் இலக்கியங்களையும் ஒப்பு நோக்கிப் பார்ப்பவர்க்கு யாம் கூறும் இவ்வுண்மை நன்கு புலனாகும்.

கடைக் கழக காலத்திற்கும் இவ்விருபதாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட 2000 ஆண்டுகளில் தான் பல்வேறு மதங்களும், அவற்றிற்கேற்பப் பல்வேறு கடவுளரும், அவர்க் கேற்பப் பல்வேறு மத நூல்களுந் தோன்றி மதச்சண்டைகள் ஏற்படுவவாயின. இக்காலத்திலே தான் புத்தம்-சமணம்-சைவம்-வைணவம் முதலான மதங்கள் தமிழ் நாட்டிலே தோன்றி ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக் கலாம் விளைத்தன. புத்தம் சமணம் முதலான மதங்களை ஒழிப்ப தற்காகச் சைவ மதமும் அதன் தலைவர்களான சம்பந்தர் மாணிக்கவாசகர் முதலான சமயாச்சாரியர்களுந் தோன்றினர். இவர்கள் தாம் சமணர்களையும் புத்தர் களையுங் கழுவில் ஏற்றியும், 'புத்தனார் தலை தத்தெனத் தத்துமே' என்ற பாடலைப் பாடி மண்டையில் அடித்துங் கொன்றழிக்குங் கொடுமையைச் செய்து, அக்காலத் தமிழரசரின் உதவியால் ஆரிய மதமான சைவ மதத்தைத் தமிழ்நாட்டில் நிலைபெறச் செய்தவராவர். அதன் பின்னர் தான், வடநாட்டிலே சடகோபர்-முனிபாணர்-யாவணாச் சாரி முதலியோரால் ஏற்படுத்தப்பட்ட வைணவ மதம், நம்போலும் மக்களினத்தாரில் ஒருவரான இறந்துபோன

இராமன் என்னும் அயோத்தி மன்னனைக் கடவுளாகக் கொண்டு, இராமானுசர் என்பவரால் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டுச், சைவத்திற்கும் வைணவத்திற்கும் மதப்போர் நிகழ்வதாயிற்று. அஞ்ஞான்று தமிழ்நாட்டிலே சைவந் தலை தூக்கி நின்ற காலமாதலால், வைணவத்தால் சைவத்தை வெல்ல முடியாது போயிற்று. என்றாலும், வைணவத்தைத் தமிழ்நாட்டில் பரவ விடாதபடி தடுக்கக் கூடிய அத்துணை ஆற்றல் சைவத்தினிடமும் இல்லாது போயிற்று. போகவே, சைவமும் வைணவமும் ஒன்றுக் கொன்று போட்டி போட்டுக்கொண்டே தமிழ்நாட்டில் நிலைபெறுவவாயின. (இன்றைக்குஞ் சைவ வைணவ உயர்வு-தாழ்வுப் போட்டிப் பந்தயங்கள் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன.)

இந்த நிலையில்தான், வைணவத்திற்கு உயிர்ப்பிச்சை அளிக்கும் 'பத்தவிசயம்' என்னுங் கதை நூலும், சைவத் திற்கு உயிர்ப்பிச்சை அளிக்கும் 'பெரிய புராணம்' என்னுங் கதை நூலும் முறையே வைணவர்களாலுஞ் சைவர்களாலும் உண்டாக்கப்பட்டன. இவ்விரண்டு புராணங்களும் ஒன்றுக் கொன்று போட்டி போட்டு எழுதப் பெற்ற கற்பனைக் கதைகள் என்பதற்கு அவற்றில்வரும் வரலாறுகளே சான்று பகர்கின்றன. பத்தவிசயத்தில் ஒரு கோராக்கும்பர் என்னுங் குயவர் கதை இருப்பது போலவே, பெரிய புராணத்திலும் ஒரு திருநீலகண்டர் என்னுங் குயவர் கதையும், பத்தவிசயத்தில் ஒரு திருப்பாணாழ்வார் என்னும் புலையர் கதை இருப்பது போலவே பெரியபுராணத்திலும் ஒரு திருநாளைப்போவார் (நந்தனார்) என்னும் புலையர் கதையும் எழுதப்பட்டிருக்கிறது. இங்ஙனமே அவ்விரண்டு புராணங்களிலும் பேசப்படும் மற்றைக் கதைகளும் ஒன்றை ஒன்று பார்த்துப் படி (நகல்) எடுக்கப்பட்டவையாகவே காணப்படுகின்றன. எனவே, திருமாலுக்கும் அவர் திருவிறக்கங் (அவதாரங்) கள் என்று சொல்லப்படும் இராமன்-கிருட்டிணன் முதலானவர்கட்குங் கடவுட்டன்மை கற்பிப்பதற்காகப் பத்தவிசயம்-பாகவதம்-இராமாயணம்-பாரதம்-கீதை முதலான புராண இதிகாசங்களும்; சிவனுக்கும் அவர் புதல்வர்கள் என்று சொல்லப்படும்

பிள்ளையார்-முருகன் முதலானவர்கட்குங் கடவுட்டன்மை கற்பிப்பதற்காகப் பெரியபுராணம்-விநாயக புராணம்-சிவ ஞான போதம் முதலான புராண-சித்தாந்தங்களும் எழுதப் பட்டன வென்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

அன்றியுஞ், சைவசமயாசிரியர்கள் காலத்தில் ஒழிக்கப் பட்ட சமணமதம், அநபாய சோழன் காலத்தில் மீண்டுந் தலைதூக்கியதையும், அதனால் அநபாயன் என்ற சோழ மன்னன் 'சீவகசிந்தாமணி' என்ற சமண மத நூலையே முதன்மையாகக் கருதிப் படித்து வந்ததையும், அதனாற் சைவமும் அதனைத் தங்கள் பிழைப்பிற்குக் கருவியாக வைத்துக்கொண்டிருந்த பார்ப்பனர் செல்வாக்கும் குறைந்து வருதலையும் அறிந்தே, அக்காலத்துப் பார்ப்பனர்கள் சேக்கிழாரைத் தங்கள் கையாளாக வைத்துக்கொண்டு, சைவத்திற்கும் பார்ப்பனருக்கும் உயர்வு கற்பிக்கும் பெரிய புராணத்தைப் பாடும்படி செய்து, அநபாயன் என்ற சோழ மன்னனையுந் தம்வயப் படுத்தினர் என்பதும் பெரிய புராணம் பாடியதற்குப் பிறிதொரு முதன்மையான காரண மாகும். இனிப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார், சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையின் வழி நூலான திருவந்தாதியை ஆதாரமாகக் கொண்டு பெரிய புராணத்தைப் பாடியதாகப் பின்னர் சொல்லப்பட்டது. ஆனால், திருத்தொண்டத் தொகை சுந்தரராற் பாடப்பட்ட தல்ல வென்பதற்கு இந்நூலின்கண் தக்க சான்றுகள் காட்டியுள்ளேனாதலால், உண்மை இது வென்பது தெற்றெனப் புலனாகும்.

இனி, பார்ப்பனருக்கு உயர்வு கற்பித்து நன்மதிப்புக் கொடுப்பதற்காகவும், தமிழ் மக்களுக்குத் தாழ்வு கற்பித்து இழிவுபடுத்துவதற்காகவுமே பெரியபுராணம் பாடப்பட்ட தென்பது அதிற் பேசப்படுங் கதைகளின் போக்கால் நன்கு தெளிவாகின்றது. எப்படியென்றால், பெரியபுராணத் திலுள்ள அடியவர்களின் அன்புப் பெருக்கைச் சோதித்து அவர்களை ஆட்கொள்ள வந்ததாகச் சொல்லப்படுஞ் சிவன், பார்ப்பன வடிவத்திலேயே வந்தார் என்று சொல்லப் பட்டிருக்கிறது. பெரியபுராணத்தில் வரும் அடியவர்கள்

பல்வேறு வகுப்பினராய் இருந்தும், அவர்களிடம் வந்த சிவன், அந்தந்த வகுப்பினர்க்குரிய வடிவத்தை எடுத்து வராமல், எல்லாரிடமும் பார்ப்பன வடிவத்திலேயே வந்த தாகச் சொல்லப்படுவது எதைக் காட்டுகின்றது? பார்ப்பன வடிவமல்லாத வேறு வடிவத்தை எடுப்பது சிவனுக்கு இழி வாகும் என்பதையே காட்டுகின்றது. அற்றேல் குயவரான திருநீலகண்டரிடம் வந்த சிவன் ஒரு குயவனாகவும், வண்ணானரான திருக்குறிப்புத் தொண்டரிடம் வந்த சிவன் ஒரு வண்ணானாகவும், செட்டியான இயற்பகையிடம் வந்து அவர் மனைவியைத் தமக்கு மனைவியாகப் பெற்றுக் கொண்டு போன சிவன் ஒரு செட்டியாகவும், இன்னும் ஏனைஅடியவர்களிடம் வந்த சிவன், அவரவர் வகுப்பிற்குரிய வடிவமுடையவராகவும் அன்றோ வந்திருத்தல் வேண்டும். அன்றியும், திருநீலகண்டரிடம் வந்த சிவன் ஒரு துறவியைப் போல் வடிவந் தாங்கி வந்தார் என்று புராணத்திற் காணப் படுகின்றதுமின்றி, அந்தத்துறவியின் மார்பில் பார்ப்பனருக் குரிய பூணூல் இருந்ததாகவும் பேசப்படுகின்றது. துறவின் இலக்கணத்தைக் கூறும் இந்துமத நூல்கள், சாதியைக் குறிக்கும் எவ்வித அடையாளங்களையும் துறவிகள் கைக் கொள்ளப்படாதென்று கூறுகின்றன. ஆனால், திருநீல கண்டரிடம் வந்த சிவத்துறவியின் மார்பில் பூணூல் இருந்த தாகச் சொல்லப்படுவதை நோக்கும்போது, சாதிமதங் கடந்த தனிப்பெரும் பொருள் என்று சைவர்களாற் பறை சாற்றப்படுஞ் சிவன், தாம் ஒரு பார்ப்பனக் கடவுள் என்ப தற்கு அறிகுறியாகவே, பூணூல் வேண்டப்படாத துறவு நிலையிலும் அதனை அணிந்து கொண்டு வந்தார் என்பது பெறப்படுகின்றது. அன்றியும், தமிழ்மக்கள் தமக்குரிய எதை இழந்தாலும், உயிரினும் மேலானதாகக் கருதி ஓம்பப்படுந் தங்கள் மானத்தை மட்டும் எந்த நிலையிலும் எத்தகைய துன்பங்கள் நேரிடினும் இழக்க ஒருப்படார் என்பது போலவே, பார்ப்பனர்களுந் தமக்குரிய அனைத் தையும் இழந்தாலும், தங்கள் சாதியின் உயர்வைக்குறிக்கும் பூணூலை மட்டும் எந்த நிலையிலும் கைவிட மாட்டார் என்பதும் இதனால் நன்கு தெளிவாகின்றது. எனவே, பார்ப்பனரைத் தவிர மற்றையவர்கள் எப்படிப்பட்டவர் களாய் இருந்தாலும், அவர்களுக்கு உயர்வும் மதிப்புங்

கொடுத்தல் ஆரிய மதமான சைவத்திற்கும், அதன் கடவுளான சிவனுக்கும் இழுக்காம் என்பதனைப் பெரிய புராணம் நன்கு தெளிவுபடுத்திக் காட்டுகின்றது.

அதோடு, மனுதரும நூலாகிய ஆரியமிருதியில் வகுக்கப்பட்டுள்ள சாதிப்பாகுபாடுகள் எல்லாம், உண்மையும் இன்றியமையாமையும் என்பதனையும் பெரியபுராணம் நன்கு வலியுறுத்தி நிலைநாட்டியிருப்பதுமன்றி, தமிழ் மக்களைச் 'சூத்திரர்' அதாவது, தாசிமக்கள்-விலைக்கு வாங்கப்பட்டவர்கள்-அடிமைகள் என்பதனையும் ஒப்புக் கொண்டிருக்கிறது. அம்மட்டோ! தமிழர் கடவுள் என்று பேசப்படுஞ் சிவன்கோயில்கள் எதிலும் தமிழ்மக்கள் நுழைந்து, அங்குள்ள சிவவடிவங்களைத் தொடக்கூடாதென்ற ஆரியக் கொள்கையையும் பெரியபுராணம் ஒப்புக் கொண்டு, நந்தனாரை நெருப்பிலிட்டுப் பொசுக்கிப் பார்ப்பானாக்கிய கொடிய நிகழ்ச்சியையுந் தன்னுள் அடக்கிக்கொண்டதுமன்றி, சிவன் கோயில்களில் நடைபெறும் பூசைமுறைகளும்-திருவிழா நிகழ்ச்சிகளும் ஆரியக் கொள்கையின்படி. வடமொழி மந்திரங்களாலேயே-பார்ப்பனரைக்கொண்டே நடத்தப்படுதல் வேண்டுமென்னுஞ் சிவாகமக் கொள்கையையும் பெரியபுராணம் ஒப்புக் கொண்டிருக்கிறது. இங்ஙனம் வடிகட்டிய ஆரியக் கொள்கைகள் எங்குப் பார்த்தாலும் விரவிக் காணப்படும் இப்பெரிய புராணத்தைத் தமிழ் மக்கள் தங்களதாகக் கொள்வது எத்துணை அறியாமையும் இழிவும் என்பதை இனிமேலாவது எண்ணிப்பார்க்கவேண்டும் என்பதற்காகவே இவ்வாராய்ச்சி நூலை எழுத முற்பட்டேன்.

இனி, சைவர்களாற் கொண்டாடப்படுந் தேவாரத் திருவாசகங்கள் எல்லாம், சிவனருளைப் பெற்ற சைவ சமயாசிரியர்களால் - சிவனைப் போற்றியும் - புகழ்ந்தும் - வாழ்த்தியும் பாடப்பெற்ற பாடல்களாம் என்றுஞ் சொல்லப் படுகிறது. ஆனால், இந்தப் பாடல்கள் எல்லாம் பண்டாரப் பாட்டுக்கள் என்றும், அவற்றைச் சிவன் கோயில்களில் நடைபெறும் பூசை-விழாக் காலங்களில் பாடக்கூடாதென்றும் பார்ப்பனர் ஏற்படுத்தியுள்ள ஆரியக்

கொள்கை இன்றுந் தமிழ்நாட்டிலுள்ள எல்லாச் சிவன் கோயில்களிலும் நடைமுறையில் இருந்துவருவதோடு, வட மொழி மந்திரங்களைக்கொண்டே சிவனுடைய காரியங்கள் எல்லாம் நடைபெற்றும் வருகின்றன. உண்மையாகவே சிவன் தமிழர் கடவுளும்-தமிழ்மொழியில் விருப்பமும் உடையவராய் இருந்தால், தம்முடைய அருளினாலே-தாமே அடியெடுத்துக்கொடுத்து-தம்மையே புகழ்ந்துபாடப் பெற்ற தேவாரத் திருவாசகங்களைத் தம்முடைய முன்னிலையிற் பாடக்கூடாதென்ற ஆரியக்கொள்கையின் அடிவயிற்றில் நெருப்பிட்டு, வடமொழி மந்திரங்களின் மண்டையில் அடித்து, தமிழ்மக்களைக்கொண்டே-தமிழ் மொழியிலேயே தம்முடைய காரியங்கள் எல்லாம் நடை பெறும்படி செய்திருக்கவேண்டும். இவ்வாறு செய்திருந் தால், 'எங்கள் சிவன்,' 'எங்கள் சைவம்' என்று பிதற்றித் திரியும் சில தமிழ்ப் பெரியார்களின் மானமாவது ஒருவாறு காப்பாற்றப்படும். அன்றியும், வடமொழி வழங்காத தமிழ் நாட்டிலுள்ள கோயில்களில் தமிழ்மக்களுக்குப் புரியாத வட மொழி மந்திரங்களைக்கொண்டு சிவனுடைய காரியங்கள் எல்லாம் நடைபெற வேண்டுமானால், அக்கடவுள் வட மொழியாளர்க்குரிய கடவுளாவரேயன்றி, தமிழ் பேசுந் தமிழ் மக்களுக்குரிய கடவுளாகார் என்பதனையாவது சைவத்திற்காகவுஞ் சிவனுக்காகவும் பரிந்து பேசுந் தமிழ்ப் பெரியார்கள் எண்ணிப்பார்ப்பதில்லை. அதுவேயுமன்றி, தமிழ்நாட்டிலுள்ள கோயில்கள் எல்லாம் தமிழ்மக்களுடைய பணத்தைக்கொண்டே அமைக்கப்பெற்றன வென்பதும், அங்கெல்லாம் நடைபெறும் பூசை-விழாச் செலவுகள் எல்லாந் தமிழ்மக்களுடைய பணத்தினாலேயே நடைபெறு கின்றனவென்பதும், இங்ஙனம் தமிழ்மக்களுடைய செலவில் எல்லாக் காரியங்களும் நடைபெறுங் கோயில்கள் எதிலும் தமிழ்மக்கள் நுழையவோ அன்றித் தமிழ்மொழியிற் காரியங்களை நடத்தவோ முடியாமல் இருப்பதன் காரணத்தையாவது சைவத தமிழ்ப் பெரியார் எவரும் ஒரு தினைத்துணையேனும் தம் அறிவுக்கு வேலைகொடுத்துப் பார்ப்பதில்லை. வறிதே, வடமொழியைத் தேனெனப் பருகி-ஆரியக் கொள்கையைக் கற்கண்டெனச் சுவைத்து-தமிழ்மக்களைச் சூத்திரராக்கி மகிழ்ந்து நிற்குஞ் சிவனைத்

தங்கள் கடவுள் என மானங்கெட்டுச் சொல்லித் திரிவதால், தமிழறிஞர் சிலருக்கு ஏற்படும் பயன் யாதோ, யாம் அறிகிலேம். ஆரிய மதங்களாலும், ஆரியமொழியாலும் தமிழர்க்குந் தமிழுக்கும் ஏற்பட்ட கொடுமைகளையும் கெடுதல்களையும் அறிந்திருந்தும், இன்னும் இவர்களுக்கு அறிவுந் - தன்மதிப்புந் - தமிழன் என்ற உணர்ச்சியும உண்டாகவில்லையே என்றுதான் நாம் வருந்துகின்றோம. இன்றைக்கு அறுபத்தைந்து ஆண்டுகட்குமுன் இருந்தவரான **வடலூர் இராமலிங்க அடிகள்** என்ற தமிழ்ப் பெரியார், சிதம்பரத்திலுள்ள நடராசர் கோயிலுள் நுழைய முயன்ற போது, தில்லைப் பார்ப்பனர் அவர் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டனர். அதுகண்டு மனந்தாழாத அடிகள், 'இங்குள்ள நடராசரை நான் இருக்கும் இடத்திற்கு வரவழைத்துக்கொள்கிறேன்' என்று ஆணைகூறி வடலூருக்குச் சென்று, அங்கே 'வடலூர்ச் சிற்றம்பலம்' என்ற பெயரால் ஒரு கோயிலைக் உண்டாக்கினார். அதுமுதல் அவர் அங்கிருந்துகொண்டு மக்கள் மனத்தைக் கவரும் பல உருக்கமான பாடல்களையும் 'செத்தவர் எழுவார் என்று கைத்தாளம் கொட்டடி' என்பன போன்ற புதுமையான பாடல்களையும் பாடிக்கொண்டு, நடராசரின் அருள் அந்தக் கோயிலில் இருக்கின்றதென்று பலரும் நம்பும்படி செய்து கொண்டு இருந்தார். இஃதிங்ஙனமாக, தங்கள் கணவன் மாரையும், தங்கள் புதல்வர்களையும் இழந்த பல இளம் பெண்கள், அவர்களை மீண்டும் அடையலாம் என்ற நம்பிக்கையோடு அங்கே சென்று தங்கித் தவங் கிடந்தனர். இவ்வாறு வடலூரிற் புதிதாய் அமைக்கப்பெற்ற சிற்றம் பலத்திற்குச் செல்வாக்கும் மதிப்பும் உண்டாக்கிவிட்டதை அறிந்த தில்லைப் பார்ப்பனர், 'எங்கள் தில்லைச் சிற்றமபல வனுடைய அருட்பெருமையைக் குறைகக முயன்ற இராம லிங்கனைத் தொலைக்கவேண்டும்' என்று எண்ணியவர் களாய், சில தடியர்களை வடலூருக்கு அனுப்பி இராமலிங்க அடிகளின் மாணாக்கர்களாக நடித்து, அவருடைய பெருமைக்கு இழுக்கு உண்டாக்கும்படி செய்தார்கள். இங்ஙனம் அனுப்பப்பட்ட தடியர்கள் அடிகளாருக்கு ஏற்ற மாணாக்கர்களாகவும் உற்ற நண்பர்களாகவும் நடித்துக் கொண்டிருக்கையில், தங்கள் கணவன்மாரையும் புதல்வர்

களையும் அடைவதற்காக அங்கே தங்கியிருந்த பெண்கள் பலர், இவ்வஞ்சகத் தடியர்களால் மிகவும் இழிந்த முறையில் நடத்தப்பட்டார்கள். வடலூர்ச் சிற்றம்பலத்தில் மறைமுகமாக நடைபெற்ற இக்கொடுமை அடிகளின் செவிக்கும் எட்டுவதாயிற்று. கனவிலும் எதிர்பாராத இக்கொடுமை தம்முடைய இடத்தில் நடந்துவிட்டதே என்பதை அறிந்த அடிகள், இந்தப் பழிக்குக் காரணம் யாதென்பதையும் அறிந்து, இனியும் உயிரோடு இருத்தல் ஒரு உண்மைத் தமிழனுக்கு முறையாகாதென்று எண்ணியவராய், உடனே பாதாள அறையொன்றில் போய் மறைந்துகொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டதோடு, இராமலிங்க அடிகளுக்குப் பழியுஞ் சிறுமையும் இதனால் உண்டாகப்படாதென்று எண்ணிய அவருடைய உண்மையான மாணவர்கள், 'இராமலிங்க அடிகள் சோதியில் மறைந்துவிட்டார்' என்று பலரும் நம்பும்படியுஞ் செய்துவைக்க வேண்டியவர்களானார்கள்.

இங்ஙனமே, **தாயுமான அடிகள்** என்ற தமிழ்ப் பெரியார் இராமநாதபுரத்தில் இருந்த காலத்தில், அவ்வூர்ப் பார்ப்பன அமைச்சன் ஒருவன், அவர் இருந்த இடத்திற்கு நெருப்புவைத்து அவரைக் கொல்லும்படி செய்ததையும்; திருவண்ணாமலையில் இருந்தவருந் திருப்புகழ் பாடியவருமான **அருணகிரிநாதர்** என்ற தமிழ்மகன், திருவண்ணாமலைக் கோயிற் கோபுரத்தினின்றுங் கீழே தள்ளிக் கொல்லப்பட்டதையும்; சிவன் வடக்கே கைலையில் இருப்பதாகப் பார்ப்பனராற் சொல்லப்பட்டும் எழுதப்பட்டும் இருப்பதை நம்பி, அச்சிவனை நேரிலே பார்ப்பதற்காகச் சென்ற **திருநாவுக்கரசர்** என்ற தமிழ்மகன், பார்ப்பனரால் கேதாரம என்னும் இடத்திலுள்ள ஒரு குளத்தில் தள்ளிக் கொல்லப்பட்டதையும்; **நந்தனார்** என்ற தமிழ்மகன், பார்ப்பனரால் நெருப்பிலிட்டுக் கொலைசெய்யப்பட்டதையும் எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் எமது குருதி கொதிக்கின்றது! நெஞ்சு துடிக்கின்றது! உடல் நடுங்குகின்றது! உளம் வெதும்புகின்றது! ஆனால், இவ்வளவு கொடுமைகளுஞ் சைவத்தின் பேராலும்-புராணங்களின் பேராலுமே நடைபெற்றனவென்பதை உணர்ந்திருந்தும்,

இன்னுஞ் சைவத்தை வளர்த்துக்கொண்டும், புராணங்களுக்கு விரிவுரைகள் நிகழ்த்திக்கொண்டும் காலங்கழிக்கும் உணர்ச்சியற்ற தமிழர் சிலரின் அறியாமை என்னுங் கொடிய நோயை எண்ணும்போதுதான், அதற்கு மாற்று மருந்தாக இத்தகைய ஆராய்ச்சி நூல்களையாவது அவர்கள் முன்னிலையிற் சேர்த்து, ஒரு நல்ல மாற்றம் காணலாமென விரும்புகின்றோம்.

இனி, நடுநிலையான நீதியுடன் அரசாட்சி செய்து வரும் ஆங்கில நன்மக்களின் அரிய பாதுகாப்பும், தன் மதிப்புமுள்ள சில தமிழ்ப்பெரியார்களின் கிளர்ச்சியும் இல்லாதிருந்தால், பார்ப்பனக் கொடுமைகளை விளக்கி, 'அறிவுரைக் கொத்து' என்னும் நூலை எழுதிய தமிழறிஞரான **மறைமலையடிகளாரின்** உடல் புதைக்கப்பட்ட இடத்தில் இன்றைக்குப் புல் முளைத்திருக்கும் என்பதனை எவரே மறுக்கமுடியும்! ஆரியப் பார்ப்பனருக்குத் துணை புரியும் முறையில், அவர்கள் பிழைப்புக்குக் கருவியான சைவத்தை வளர்த்துக்கொண்டிருக்கும் மறைமலையடிகளாரின் நிலையே இங்ஙனமாகுமென்றால், ஆரிய மதமான சைவத்தின் மண்டையில் அடித்து-ஆரியக் கொள்கையை அடியோடு ஒழிக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு, தமிழ்மக்களின் முன்னேறறத்தையும்-தமிழ்மொழியின் தனித்தியங்கும் வாய்ப்பையும் பாதுகாத்தலையே கொள்கையாகக்கொண்டு தொண்டாற்றி வரும் எம்மனோர் நிலை என்னவாகும் என்பதனை எண்ணும்போதுதான், நடுநின்று நீதிவழங்கும் ஆங்கில அரசுமுறை இக்காலத்தில் நமது நாட்டுக்குப் பெரிதும் இன்றியமையாததென்பதை உணரவேண்டியவர்களாகின்றோம்.

தமிழ்நாடு தனியாகப் பிரிக்கப்பட வேண்டுமென்ற கிளர்ச்சியைத் துவக்கி, அதன்பொருட்டு ஓயாது உழைத்து வரும் தமிழ்மக்களின் தன்மதிப்பியக்கத் தலைவரும்-திராவிட மக்கள் அனைவருடையவும் அரசியல் தலைவராயும் இருந்துவருபவரான தோழர் **ஈ. வெ. இராமசாமிப் பெரியார்** அவர்களும், தமிழ்நாடு தனியாகப் பிரிக்கப்பட்ட பின்னர், தமிழ்நாட்டின் தொடர்பு முழுவதும் இங்கிலாந்தி

லுள்ள மன்னர்பிரான் அவைக்குழுவில் இருக்கவேண்டு மென்றும், இந்தியாவிலுள்ள எந்த ஆதிக்கத்தின் கீழும் அது இருக்கக்கூடாதென்றும் தமது அறிக்கையிற் குறிப்பிட்டுள்ளார். இந்திய அரசு முறையோடு தமிழ்நாட்டின் தொடர்பையும் வைத்துக்கொண்டால், ஆரியக் கொடுமையி னின்றுந் தமிழ்மக்கள் தப்பமுடியாதென்பதை நன்குணர்ந்தே அவர் அங்ஙனம் தமது அறிக்கையிற் குறிப்பிட்டுள்ளார். எனவே, தமிழ்நாடு தனியாகப் பிரிக்கப்பட்டாலன்றி, ஆரிய மதக்கொடுமைகளையும்-புராண இதிகாச மூடநம்பிக்கை களையும் முற்றிலும் ஒழிக்கமுடியாதென்பதைத் தமிழ் மக்கள் அனைவருந் தங்கள் கருத்திற் பதித்து ஆவன செய்வது பெரிதும் இன்றியமையாததாகும்.

இனி, வடமொழி உதவியின்றி எவ்விதத்திலும் இயங்கமுடியாத சைவம் முதலான ஆரியமதங்களும், வட மொழியின் துணையின்றி அம்மதங்களை விளக்கமுடியாத மதநூல்களும் தமிழ்நாட்டில் இருக்கும்வரை தமிழ்மொழிக்கு தனித்தியங்கும் வாய்ப்பும்-தமிழ்மக்களுக்கு தன்மதிப்போடு வாழும் இயல்பும் ஏற்படாதென்பதை ஆணையிட்டுக் கூறு கின்றேன். சைவசித்தாந்தத்தை விளக்கிக்கூறும் 'சிவஞான போதம்' முதலாகவுள்ள பதினான்கு நூல்களையும், ஏனைச் சைவசமய நூல்களையும் நன்கு அலசிப் பார்ப்பவருக்கு, **வடமொழி இல்லையேற் சைவம் இல்லை** என்ற மறுக்க முடியாத உண்மை வெள்ளிடை மலைபோற் றெள்ளிதிற் புலனாவதோடு, தமிழ்மொழியின் தனித்தியங்கும் வாய்ப்பும் சைவத்தால் கெட்டழிந்தது-இனியுங் கெட்டழியும் என்ற உண்மையும் அங்கை நெல்லிக்கனியென அறியப்படும். அன்றியுஞ், சைவந் தமிழ்நாட்டில் தலைகாட்டாத பண்டைக் காலத்தில், அதாவது, தொல்காப்பியர் காலம் முதல் திருவள்ளுவர் காலம் வரை இருந்தத் தமிழ்ப் புலவரால் இயற்றப்பெற்ற இலக்கிய-இலக்கண நூல்களில் வட மொழிக் கலப்பு இல்லாதிருத்தலையும், திருவள்ளுவர் காலததிற்குப் பின் இருந்த புலவர்களால் இயற்றப்பெற்ற தமிழ்நூல்களில் வடமொழிக் கலப்பு நிறைந்திருத்தலையும் நடுநின்று ஒப்புநோக்கிப் பார்ப்பவர்க்கு, ஆரியமதமான சைவத்தினால் ஒப்புயர்வற்ற தமிழ்மொழிக்கு ஏற்பட்ட

தீமைகள் எவ்வளவின என்பது நன்கு விளங்கும். இனி, தொல்காப்பியத்திலும் திருக்குறளிலுஞ் சிற்சில வடச் சொற்கள் காணப்படுகின்றனவே, அதற்குக் கூறும் மாற்றம் யாதோவெனின், நன்று வினவினாய்; தொல்காப்பியத் திலுந் திருக்குறளிலும் வரும் நாலைந்து வடச்சொற்கள், ஒரு சமயச் சார்புபற்றிய சொற்கள் அல்லவென்பதூஉம், அவை, வடத்திசைப் பார்ப்பனர் தென்திசைக்கு வந்து, இங்குள்ள தமிழ்மக்களோடு வைத்துக்கொண்ட பேச்சு வழக்கினால் ஏற்பட்ட 'திசைச் சொற்களே' யாம் என்பதூஉம தெளிந்தறிய வல்லார்க்கு, அவை ஒரு சமயச் சார்பு பற்றிய சொற்களல்லவென்பது நன்கு புலனாகும். இனி, சைவமும் அதன் தலைவனான சிவனும் தொல்காப் பியர் காலத்திலோ அன்றித் திருவள்ளுவர் காலத்திலோ இருந்திருக்குமானால், சைவத்தைப் பற்றியுஞ் சிவனைப் பற்றியும் தொல்காப்பியத்திலுந் திருக்குறளிலும் பேசப் பட்டிருக்குமன்றோ! 'சிவன்' 'சைவம்' என்ற சொற்களே தொல்காப்பியத்திலோ அன்றித் திருக்குறளிலோ இல்லாமல் இருக்கும்போது, அவற்றுட் காணப்படும் வட சொற்களைச் சைவத்தைக் குறிக்குஞ் சொற்கள் என்று எவரேனும் கூறுவரேல், அத்தகையினரின் அறிவு, மத மெனுங் கொடிய பித்தத்தால் குழப்பம் அடைந்துவிட்ட தென்றே மெய்யறிவுடையோர் கொள்வர். இனி, திருவள்ளுவர் 'கடவுள் வாழ்த்து'க் கூறியிருக்கிறாரே, அதற்கு விடை யாதெனக் கடாவுவார்க்கும் இந்நூலின்கண் தக்க விடை தந்துள்ளேன், படித்துணரட்டும். அல்லது காலஞ்சென்ற வழக்கறிஞர் **வ. உ. சிதம்பரம் பிள்ளை** அவர்கள் எழுதியுள்ள திருக்குறள் அறத்துப்பால் முகவுரை யைக் கற்றுத் தெளியட்டும். அதிலுந் தெளிவடைய மாட்டாதார், ஆரியக்குட்டையிலே விழுந்து-சைவமாகிய சேற்றிலே புதைந்து தன்மதிப்பற்றுக் கிடக்கட்டும. அவர் களைப்பற்றி எவருங் கவலைப்பட வேண்டியதில்லை. பகுத்தறிவைப் பயன்படுத்தி உண்மையறிந்து, மானங் கெடாமல் வாழவேண்டுமென்ற விருப்பமும் உணர்ச்சியும உள்ள தமிழ்மக்களின் நன்மையையும், தமிழ்மொழியின் செம்மையையுங் கருதியே இத்தகைய ஆராய்ச்சி நூல்களை எழுதுகின்றோம். அன்றியும், 'பழையனவெல்லாம்

உண்மை'—'புதியனவெல்லாம் தப்பு' என்ற கொள்கைகளிற் படிந்து அறிவைப் பாழாக்காமல், காலப்போக்கிற்கும்—உலக இயற்கைக்கும்—பகுத்தறிவிற்கும் பொருந்தத் தங்கள் வாழ்க்கை முறைகளை அமைத்து, மக்கள் மக்களாகவே வாழவேண்டுமென்ற ஆர்வம் எதிர்காலத் தமிழ்மக்களுக்கு ஏற்படவேண்டுமென்பதிற் கருத்துக் கொண்டே இத்தகைய நூல்களை எழுதுகின்றேன் என்பதையும் ஈண்டுத் தாழ்மையோடு தெரிவித்துக் கொள்ளவேண்டியவனாய் இருக்கிறேன். அதுவேயுமன்றி, நமது நாட்டிலுள்ள பொருட் செல்வர் பெரும்பாலும், 'உலகம் எப்படி இருந்தாலும் அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை' என்று வறிதே சோம்பிக் கிடத்தலையும், மதத் தலைவர்கள் எல்லாம், 'நமது பிழைப்பு ஒழுங்காக நடந்தால் போதும், மற்றவர்களைப்பற்றிய கவலை நமக்கு ஏன்' என்று பகுத்தறிவற்றுக் கிடத்தலையும், ஏழை எளிய மக்கள் மதம்-கடவுள்-புராணம்-மோட்சம்-நரகம் என்பன வற்றிற்கு அடிமைகளாய்த் தங்கள் உரிமைகளை இழந்து அச்சப்பட்டுக் கிடத்தலையும் எண்ணிப் பார்க்கும்போது தான், இத்தகைய ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டு மக்களிடையே ஒரு மாறுதலையும்-புதிய உணர்ச்சியையும் உண்டாக்குவது பெரிதும் இன்றியமையாததென்ற ஆர்வம் என்பால் எழுந்ததே, இந்நூலை எழுத முற்பட்டதற்குப் பிறிதொரு காரணமுமாகும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எனவே, புராண இதிகாசங்களிற் கலைச்செல்வம் நிரம்பிக் கிடக்கின்றது-நாட்டுச் சிறப்பும் நகரச் சிறப்பும் பொலிந்துகிடக்கின்றது-கவிநயம் கரையயற்றுக் கிடக்கின்றது - பொருளாழம் பொதிந்துகிடக்கின்றது - சொல்வன்மை சோர்வற்று மிளிர்கின்றது-தமிழர் மாண்பு ததும்பி வழிகின்றது. ஆகையால், புராணங்களைப் புறக்கணிக்கலாமா? இதிகாசங்களை இழிவுபடுத்தலாமா? சைவத்தைச் சாகடிக்கலாமா? வைணவத்தை வையலாமா? சிவனைச் சினக்கலாமா? திருமாலைத் திட்டலாமா? நாயன்மார்களை நாக்கடிக்கப் பேசலாமா? ஆழ்வாராதிகள் மேல் அழும்பு சொல்லலாமா? சேக்கிழாரைச் சிறுமைப்

படுத்தலாமா? கம்பரைக் கசடன் என்னலாமா? என்றெல்லாம் கேள்விகள் கேட்டு எம்மீது சரந்தொடுக்க முயலும் அன்பர்கள், முதலில், புராண இதிகாசங்களையும் ஏனைச் சைவ வைணவ மத நூல்களையும், **பகுத்தறிவென்னும் விளக்கை ஏற்றிவைத்துத்-தன்மதிப்பென்னும் பீடத்தில் அமர்ந்து-மானம், உணர்ச்சி என்னும் இரு கண்களினாலும் பார்த்துத்-தாங்கள் தமிழ்மக்கள் என்பதை நினைவில் வைத்துப்** படித்துணர்வார்களானால், பின்னர் எம்மீது சீறிச் சினந்து சரந்தொடுக்கமாட்டார்கள் என்பது ஒருதலை. எப்படியென்றால், புராண இதிகாசங்களில் தான், தமிழ்மக்களைத் தேவடியாள் பெற்ற பிள்ளைகள் என்பது முதல்-பார்ப்பனனுடைய கால்களைக் கழுவின தண்ணீரைத் தமிழ்மக்கள் குடிக்கவேண்டும் என்பது வரை உள்ள மானக்கேடுகள் நிறைந்துகிடக்கின்றன. 'அத்திப் பழத்தைப் பிட்டுப் பார்த்தால் அத்தனையும் புழுமயம்' என்பதுபோல, புராண இதிகாசங்களில் உள்ள பாட்டுகள் ஒவ்வொன்றையுந் துருவிப் பார்த்தால், அங்கெல்லாந் தமிழ் மக்களை இழிவுபடுத்துஞ் சொற்களும், இயற்கைக்கும் பகுத்தறிவிற்கும் பொருந்தாத செய்திகளுமே காணப்படுகின்றன. இனி, அங்கொன்றும் இங்கொன்றுமாக யாதாயினும் இரண்டொரு சொற்கள்-சொற்றொடர்கள் தமிழைப் பற்றியுந்-தமிழ்மக்களைப்பற்றியும் உயர்வாகச் சொல்லப் பட்டிருந்தால், அவை, புராண இதிகாசங்களைப் பாடியவர் களையும் அறியாமல் அமைந்த தவிர்க்கமுடியாத இயற்கை அமைப்பின்பாற்பட்டவையாய் இருக்குமேயன்றி, உண்மை யாகவே தமிழ்மொழியினுடையவுந்-தமிழ்மக்களுடையவும் உயர்வைக் குறிக்கும் எண்ணத்தோடு அவை அமைக்கப் பட்டவை ஆகா.

இனி, உண்மையாகவே தமிழ்மக்களின் உயர்வைக காட்டும் முறையிற் புராண இதிகாசங்கள் பாடப்பெற்றிருந் தால், ஒரு தமிழனான இயற்பகை என்பவர் தன்னுடைய மனைவியை ஒரு பார்ப்பானுக்குக் கூட்டிக்கொடுத்தார் என்றும், ஒரு தமிழன் தனது மரபிலுள்ள ஒரு பெண்ணைத் திருமணஞ் செய்துகொள்ள விழைந்ததைக் குற்றமாக எண்ணி, அவனையும் அவனைச் சார்ந்தோரையுஞ் சிவன்

கொன்றார் என்றும், ஒரு தமிழனான நந்தனாரைப் புனித மாக்குவதற்காக நெருப்பிலிட்டுப் பொசுக்கப்பட்டதென்றும், ஒரு தமிழனான சேரமானுக்கு மோட்ச விடுதியில் இடங் கிடைக்கவில்லை என்றும், சைவசமயாசிரியர் நால்வருள், தமிழனான திருநாவுக்கரசருக்கும் மோட்ச விடுதியில் இடங் கிடைக்கவில்லை என்றும், தமிழனான திருநாவுக்கரசர் ஒன்பது பாடல்கள் பாடியும் மறைக்காட்டி(வேதாரணியத்தி) லுள்ள கோயிற் கதவு திறக்கப்படவில்லையென்றும், பார்ப்பனனான சம்பந்தர் ஒரு பாடல் பாடுவதற்குள்ளேயே கதவு பூட்டப்பட்டுவிட்டதென்றும், திருநாவுக்கரசர் தமிழ னானதால், அவருக்குக் கோயில்களிற் குப்பை கூட்டும் வேலையும்-புல் செதுக்கும் வேலையும் கொடுக்கப்பட்ட தென்றும், சம்பந்தர் பார்ப்பனனானதால், அவருக்கு முத்துச்சிவிகையும் முத்துப் பந்தரும் கொடுக்கப்பட்ட தென்றும், திருநாவுக்கரசர் தமிழனானதால், அவர் சம்பந்தரின் பல்லக்கைச் சுமந்து திரிந்தார் என்றும், சுந்தரர் பார்ப்பனனானதால், அவருக்குக் கைலையில் இருந்து வெள்ளை யானை வந்து அவரை ஏற்றிக்கொண்டு போயிற் றென்றும், சேரமான் தமிழனானதால், அவர் கைலையி னின்றும் தள்ளப்பட்டார் என்றும், திருநாவுக்கரசர் தமிழ னானதால், தீட்டுக்கழிய அவருடைய தோளிலே சூலத்தாற் சுடப்பட்டதென்றும், இன்னும் இவைபோன்ற எண்ணத் தொலையாத செய்திகள், பார்ப்பனருக்கு உயர்வும்-தமிழ் மக்களுக்கு இழிவும் கற்பிக்கும் முறையில் தமிழர் புராணம் என்று சொல்லப்படும் பெரியபுராணத்தில் எழுதப் பட்டிருக்குமா என்பதனைச் சைவத்தைக் கட்டியழுந் தமிழ் மக்கள் எண்ணிப்பார்க்க வேண்டுமன்றோ! இனி, ஏதோ இரண்டொரு நிகழ்ச்சிகள் தமிழ் மக்களுக்கு உயர்வு காண்பிக்கும் முறையில் பெரியபுராணத்தில் இருப்பதால், அதனைத் தமிழ்மக்கள் ஆதரிக்கவேண்டியதுதான் என்று எவரேனுங் கூறுவாரேல், அக்கூற்று, 'ஒரு குடம் நிறைய வுள்ள நஞ்சில் ஒரு துளி பாலைப் பெய்து, இதில் பால் கலந்திருக்கிறது; ஆதலால் இதை நீ சாப்பிடு; உனக்கு ஒரு கெடுதலும் உண்டாகாது' என்று ஒருவன் சொல்லுதல் போலவே இருக்கும். சம்பந்தர், பாணர் என்ற ஒரு இழி குலத்தானை ஒரு பார்ப்பனனுடைய நடுவீட்டில் இருக்கும்

படிச் செய்யவில்லையா? அப்பூதியடிகள் என்ற பார்ப்பனர் தமிழனான திருநாவுக்கரசரோடு உடனிருந்து உண்ண வில்லையா? என்பன போன்ற சில கேள்விகளைக் கேட்டு எம்மை மடக்கமுயல்வார் சிலர் இல்லாதொழியார் என்று கருதியே இந்நூலின் முன்னுரையைச் சிறிது விரிவாகவும் விளக்கமாகவும் எழுத நேர்ந்தது.

இனி, இப்பெரியபுராணம், வடமொழிப் புராணமான 'உபமன்னியு பக்த விலாசம்' என்னும் நூலின் மொழி பெயர்ப்பாம் என்று வழக்காடும் ஒரு கூட்டத்தாரும் இருக் கின்றனர். ஆனால், பெரிய புராண நிகழ்ச்சிகள் முழுவதும் தமிழ்மக்களின் கொள்கைக்கு மாறுபட்டதென்பது அய்யுறவுக்கு இடமின்றித் தெளிவாக உணரப்படுகின்ற தாகையால், அது வடமொழி நூலின் மொழி பெயர்ப்பாய் இருந்தாலும், அன்றித் தமிழ் மொழியில் புதிதாக ஆக்கப் பட்டதாய் இருந்தாலும் அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. ஆனால், தமிழ்மொழியிற் காணப்படும் எந்த நூலையும் (சங்க நூற்கள் சில நீங்கலாக) அது வடமொழியி னின்றும் மொழிபெயர்க்கப் பட்டதாம் என்று கூறிப் பெருமை கொள்வது பார்ப்பனரின் வழக்கமாயினும், தமிழ் மக்களிற் சிலரும் அறியாமை காரணமாக அக்கூற்றை ஒப்புக்கொள்ளுகின்றனர். ஆனால், பெரியபுராணம் தமிழ் நூலாதலால், அதனைத் தமிழ்மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற சட்டம் எதுவும் எவரும் உண்டாக்க முடியாது. தமிழ்மக்களின் கொள்கைக்கு மாறான எவை யாயினும், அவை, எம்மொழியில் எழுதப்பட்டிருந்தாலும், அவை எல்லாம் தமிழ்மக்களால் ஒதுக்கித் தள்ளப்பட வேண்டியனவேயாம். நெற்றிக்கண்ணைக் காட்டி மிரட்டினாலும், 'தம்பி உன் சரக்கு இங்கே விற்பனையா காது, போய் வா' என்ற மிடுக்கோடுள்ள தமிழ்மக்கள் முன்னிலையில் இத்தகைய பூச்சாண்டி மிரட்டல்கள் எல்லாம் என்ன செய்துவிட முடியும்? என்றாலும், ஆரியர் களின் 'சூழ்ச்சி' என்னும் கொடிய வலையில் விழாமல் தப்பித்துக் கொள்வதில் மட்டும் தமிழ்மக்கள் மிகவும் விழிப்பாய் இருத்தல் வேண்டும்.

இனி, பெரியபுராணத்தில் வரும் கதைகளிலுள்ள புனைந்துரைகளும் புளுகுரைகளும் ஆராய்ச்சி முறையால் நன்கு விளக்கப்பட்டு, உண்மை நிகழ்ச்சிகள் இவை என்பது இந்நூலின்கண் நன்கு தெளிவாக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால், புராணங்களை நம்புவதால் ஏற்படும் அறியாமையும்-அடிமையுணர்ச்சியும் ஆன மூட இயல்புகள், இந் நூலைக் கற்றுத் தெளிவதால், தமிழ்மக்கள்பால் இல்லா தொழிந்துமாயும் என்னுந் துணிபுடையேன்.

இந்நூலின்கண் உள்ள சில தலைப்புக்களின் கீழ்வரும் அதனதன் முதன்மைப் பொருள்கள், அந்தந்தத் தலைப்புக் களிலேயே முடிவுபெறாமல், இடையறுந்து அகன்றுபோய்ப் பின் இன்னொரு தலைப்பின் கீழ் வந்து முடிவு பெற்றுள்ளன வாதலால், படிப்பவர்கள் கருத்தூன்றிப் படித்து அந்தந்த முதன்மைப் பொருள்களின் முடிவுகண்டு சுவைக்குமாறு வேண்டிக் கொள்ளுகின்றேன். இவ்வாறு ஒன்றன் முதன்மைப் பொருள் இடை அறுந்து போதலும், அதனையடுத்து வேறுபொருள் பற்றிப் பேசப்படுதலும், அதன் பின்னர், முன் இடையறுந்து நின்ற பொருள் வந்து பேசப்பட்டு முடிவடைதலும் தமிழ் இலக்கண முறைப்படி தவறாகாது. இங்ஙனம் ஒன்றன் முதன்மைப் பொருள் இடையறுந்து அகன்று போய்ப் பொருந்துதலை **'மாட்டு'** எனத் தொல்காப்பியர் வகுத்துள்ளார்.

பெரியபுராண ஆராய்ச்சி என்னும் இந்நூல் படிப்பவர் கட்கு எளிதாகப் பக்கங்கள் குறைந்த சிறிய அளவினதாய் இருத்தல் நலமெனப் பல நண்பர்கள் விரும்பியதால், இதன் கண் சுந்தரர், விறன்மிண்டர், இயற்பகை, கலிக்காமர், திருநாளைப்போவார் ஆகிய அய்வர் வரலாறுகளை மட்டுமே ஆராய்ந்து, **வடமொழிக் கலப்பற்ற தனித் தமிழ் நடையில்** இதனை முதற்பாகமாக வெளியிடுகின்றேன். இதன் இரண்டாம்-மூன்றாம்-நான்காம் பாகங்கள் பின்னர் தனித் தனி நூலாக வெளியிடப்படும். எனவே, புராணங்கள் பேராலும், அவற்றிற் பேசப்படும் கடவுளர் பேராலும் தமிழ்மக்களுக்கு ஏற்படும் மூடநம்பிக்கையையும்-பொருள்

அழிவையும்-இழிவையும் நீக்குவதற்குக் கருவியாகவுள்ள இது போன்ற ஆராய்ச்சி நூல்கள் பல வெளிவருவதற்குத் தமிழ்ப் பெருமக்களின் தளரா ஊக்கமும் குறையா உதவியும் பெரிதும் இன்றியமையாததாகும்.

இந்நூலை அச்சிட வேண்டுமென்று நான் விரும்பிய பொழுது, எனக்கு முதன் முதல் ஊக்கமளித்துப் பேருதவி புரிந்த காஞ்சிவரம் தோழர் **T. P. S. பொன்னப்பா** அவர்களுக்கும்; பயன் கருதாது இந்நூலை அச்சிட்டுத் தந்தவர்களான கோயமுத்தூர் **U. M. S.** ஊர்தி நிலையச் சொந்தக்காரரும்-மின்சாரப் பொறிநிலைய அமைப்பாளரும்-ஊர்தி (மோட்டார்) மன்னர் எனப் போற்றப்படுவருமான தோழர் **G. D. நாயுடு** அவர்களுக்கும், **V. M. S.** ஊர்தி நிலையச் சொந்தக்காரரான தோழர் **L. R. G. நாயுடு** அவர்களுக்கும் எனது உளம் நிறைந்த நன்றி உரியதாகும். இந்நூலை அச்சிடுங் காலத்தில் எனக்குப் பலவகையிலும் உதவி புரிந்து ஊக்கமளித்தவர்களான கோயமுத்தூர்த் தோழர் **A. கிருட்டினசாமிச் செட்டியார் B. A.** அவர்களுக்கும், திருப்பூர்த் தோழர்கள் **S. R. சுப்பிரமணியம்** அவர்களுக்கும், **குரு. இராமலிங்கம்** அவர்களுக்கும், மற்றும் இந்நூலுக்கு ஆதரவு காட்டியுதவிய தோழர்களுக்கும், இந்நூலை அழகாக அச்சிடுவதில் தமது கருத்தைச் செலுத்தி அத்துறையில் உதவி புரிந்த விசயலக்குமி அச்சுக்கூட மேற்பார்வையாளரான (மேனேஜர்) தோழர் **A. D. சாமி** அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும். வாழ்க தமிழ்! தழைக தமிழர் நெறி! ஒழிக மூடநம்பிக்கை.

**The Enlightenment Society,**
**Karur,**
**20—2-1941,**

**ஈழத்து அடிகள்.**

# பெரியபுராண ஆராய்ச்சி

## தோற்றுவாய்

தமிழ்நாட்டில், ஆரிய மதத்தின் ஒரு பிரிவான சைவ சமயத்தை நிலைநாட்ட எழுந்த நூல்கள் பலவாகும். அவற்றுட் பெரியபுராணம் என்பதும் ஒன்று. இது, சைவ சமய குரவர் நால்வருள் ஒருவரான சுந்தர மூர்த்தி நாயனார் என்பவரால் பாடப்பெற்ற திருத்தொண்டத் தொகை என்னுந் தேவாரப் பதிகத்தை ஆதாரமாகக் கொண்டு, திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்னும் பார்ப்பனர் ஒருவர், திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் சொல்லிய படி, கலித்துறைத் திருவந்தாதியாகப் பாடினார் என்பதும், பின்னர் அவ்வந்தாதியை ஆதாரமாக வைத்துக் குன்றத்தூர்ச் சேக்கிழார் என்னும் வேளாளர் ஒருவராற் செய்யுள்வடிவிற் பாடப்பெற்று, அதற்குத் திருத்தொண்டர் புராணம் எனப் பெயர் சூட்டப் பட்ட தென்பதும், இப் புராணந் தோன்றுதற்குக் காரணமாயும் உதவியாயும் நின்றவர் சோழ மன்னருள் ஒருவரான அநபாய சோழன் ஆவார் என்பதும் இந்நூலைப் பற்றிச் சொல்லப்படும் வரலாறுகளாகும்.

எனவே, திருத்தொண்டத் தொகையைப் பற்றிய வரலாற்றை நம்பியாண்டார் நம்பிக்குத் திருநாரையூரிலுள்ள பொல்லாப்பிள்ளையார் சொன்னதாகச் சொல்லப்படுகிறது. பொல்லாப்பிள்ளையார் என்றால், பொல்லாத அதாவது

கெட்டபிள்ளையார் என்று பொருள் கொள்ளக் கூடாது. பொள்ளா என்பது பொல்லா என மருவிற்று. பொள்ளா என்றால் உளி முதலியவற்றாற் போழ்ந்து செதுக்கப் படாதது என்பது கருத்து. எனவே தானாய் உண்டான தென்பது பொருள். ஈண்டுக் கூறப்படும் பிள்ளையார் தானாய் உண்டானார் என்பது பற்றி எவரும் வியப்படைய வேண்டியதில்லை. ஏனென்றால், இஞ்ஞான்றுங்கூட இத்தகைய புதுமை நிகழ்ச்சிகள் பல ஆங்காங்கு நிகழ்வதை நாம் அடிக்கடி கேள்விப்படுகின்றோம். கடவுளரின் வடிவங்கள் செதுக்கப்பெற்ற கற்களை மக்களின் நடமாட்ட மில்லாத புதர்களிலும் புற்றுக்களிலும் புதைத்து வைத்து விட்டுச் சில காலஞ் சென்றபின், அவற்றைப் புதைத்து வைத்தவர்கள், தங்களுக்கு மருள் வந்ததாகப் பாசாங்கு செய்து, அந்த இடங்களுக்குப் போய் அவற்றை எல்லாருக்குங் காண்பித்து, மக்களை ஏமாற்றிப் பிழைப் பதை நாம் கண்கூடாகக் காண்கின்றோமாகையால், புராணத்திற் பேசப்படும் பிள்ளையாரின் வரலாற்லைப் பற்றி எவரும் தம்மை மறந்து வியப்படைய வேண்டிய தில்லை. ஆனால், திருத்தொண்டத் தொகையைப் பற்றிய வரலாற்றைப் பொல்லாப்பிள்ளையார் என்ற கல்வடிவம் நம்பியாண்டார் நம்பிக்குச் சொன்னதாகக் கூறப்படுவது தான் வியக்கத்தக்கதாயும் வெறுக்கத்தக்கதாயும் இருக் கின்றது.

மக்களுக்குக் கடவுள்நம்பிக்கையை உண்டாக்க எண்ணுகின்றவர்கள், தங்களாற் கூறப்படுங் கடவுட் கதைகள் எல்லாம் கடவுளாலேயே சொல்லப்படுவன என்று எழுதிவைப்பது அவர்களின் வழக்கமாய் வந்துவிட்டது. தங்கள் பிழைப்புக்காகக் கூறப்படுங் கதைகள் எல்லாம். கடவுளாற் சொல்லப்பட்டனவென்று எழுதி வையாவிடின், மக்கள் அவற்றை நம்பமாட்டார்கள் என்றும், ஆகவே தங்கள் பிழைப்புக்கு வழி ஏற்படாதென்றுங் கருதியே அங்ஙனம் எழுதிவைப்பாராயினர். இங்ஙனம் பொய்ப் பெயரிட்டுக் கதைகள் எழுதி மக்களை ஏமாற்றுகின்றவர் களை அக்காலத்து அரசர் தண்டித்ததாகவுந் தெரிகிறது. எடுத்துக்காட்டாக ஈண்டு ஒரு நிகழ்ச்சியை மட்டுங்

குறிப்பிடுவாம். மார்க்கண்டேய புராணம் முதலான கதை களை எழுதிய சைவர்கள், அவற்றைக் கடவுளரும் முனிவரும் எழுதியதாகப் பொய்ப் பெயரிட்டு வழங்கியதை அறிந்த போசராசன் அவர்கள் கைகளை வெட்டித் தண்டனையளித்து, இனிமேல் அங்ஙனஞ் செய்தல் கூடா தென்று எச்சரிக்கை செய்ததாகப் போசராசனாற் செய்யப் பட்ட 'சஞ்சீவினி' என்னும் நூலிற் காணப்படுகின்றது. எனவே, கடவுள் பெயரை வைத்துக் கதைகள் எழுதுவது. மக்களை ஏமாற்றிப் பிழைப்பதற்காக ஒரு சிலராற் கையாளப்படும் முறை என்பது இதனால் புலனாகின்றது. ஆகவே, நம்பியாண்டார்நம்பியாகிய பார்ப்பனர் கையாண்ட முறையும் இதுபற்றியே எனக் கொள்க.

இனி, பெரியபுராணம் பாடிய ஆசிரியர் அடிமையான சேக்கிழாரும் இந்த முறையையே கையாண்டதாகத் தெரிகிறது. எப்படியென்றால், அநபாயன் என்ற சோழ மன்னன் ஒருவன் 'சீவகசிந்தாமணி' என்று சொல்லப்படும் அறிவுநூல் ஒன்றைப் படித்து வந்ததைக் கண்ட சேக்கிழார் என்பார் தாமாகவோ அல்லது பிறரின் தூண்டுதலினாலோ அம்மன்னனை அணுகிப் பெரியபுராணக் கதைகளைச் சொல்லி, பின்னர் அம்மன்னன் வேண்டுகோட்படி அதனைச் செய்யுள் வடிவிற் பாடினார் என்றும், அங்ஙனம் பாடுவதற் கும் சிவனே, 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்' என்று அடியெடுத்துக் கொடுத்தாரென்றுஞ் சொல்லப்படுகிறது. ஆகையால், இதுவும் அதுவேயெனக் கொள்க. ஆனால், தமிழ்நூல்களும் தமிழர் நூல்களுமான சங்கநூற்களை மட்டும் இக்கடவுள் நோய் பிடித்துத் துன்புறுத்தவில்லை. அவையெல்லாம் அறிவின் மிக்க சான்றோர்களால் மக்களின் வாழ்க்கை முன்னேற்றம் ஒன்றையே கருதி, கடவுள் அடியெடுத்துக் கொடுக்காமலும், நேரில் வந்து திருவாய்மலர்ந்தருளிச் செய்யாமலும், அவர்கள் தாமாகவே தம்முடைய அறிவைக்கொண்டு அவ்வப்போது பாடினார்கள். அன்றியும், குடிமக்களாயினும் அல்லது அவர்களை ஆளும் அரசராயினுந் தம் வாழ்க்கையில் தவறுபட நடப்பார் களாயின், அவர்களைத் திருத்தி நல்வழிப்படுத்துதற் காகவே சங்கநூற் பாக்கள் பெரும்பாலும் பாடப்பட்டன

வாகவுந் தெரிகிறது. இத்தகைய அறிவை விளக்குஞ் சங்க நூற்கள்தாம் இன்றைக்குந் தமிழ்மக்களின் மானத்தை ஓரளவு காப்பாற்றிவருகின்றன.

---

# சுந்தரர் வரலாறு

இனி, பெரியபுராணம் என்னும் நூல் ஒன்று எழுவதற்கு அடிப்படையாய் நின்றது, சுந்தரமூர்த்தி நாயனாராற் பாடப்பெற்ற திருத்தொண்டத்தொகை யென்னுந் தேவாரம் பதிகமாதலாற், சுந்தரரைப்பற்றிய வரலாற்றை முதற்கண் ஆராய்வாம்.

"பழமறை முழுதுணர் அந்தணர்
பலர்தொழ நடமுயல்கின்றவர்
மழுவுழை கரமிசை கொண்டு
இடமருவிய கௌரி மகிழ்ந்திட
விழைதரும் இரசித பொங்கொளிவிடும்
உயர்கைலை விலங்கலின்
அழகுறு தமனிய மண்டபம்
அதனிடை அருள்கொடு இருந்தனர்."

என்று திருவாதவூரர் புராணத்திற் கூறியபடி, விரும்பத் தகுந்த வெள்ளிபோலும் ஒளியை வீசுகின்ற கைலைமலை யின்கண் அமைக்கப்பெற்ற பொன்மண்டபத்தின் நடுவே, சிவபெருமான், தமது கைகளில் மழுவையும் மான்கன்றையுந் தாங்கிக்கொண்டு, இடது பக்கத்தில் வீற்றிருக்கின்ற அவரது மனைவியரான உமையம்மையார் மகிழவும், பழைய வேதங்களை நன்குணர்ந்த அந்தணர் கூட்டம் வணங்கவு மாகத் தம்முடைய திருக்கூத்தைப் புரிந்துகொண்டு அருள் சுரந்த முகத்தோடும் இருப்பர். இங்ஙனம் இருக்கும்

நாளிலே, ஒருநாள், சிவபெருமான் தம்மை நன்றாக அழகு பெற ஒப்பனை செய்துகொண்டு, தம்முடைய வடிவத்தை அப்பொன்மண்டபத்தின்கண் பதிக்கப்பெற்ற நிலைக் கண்ணாடி ஒன்றில் பார்த்து மகிழ்ந்தாராம். கண்ணாடியில் தோன்றிய அவருடைய அழகானது ஒப்பதும் மிக்கதும் இல்லாத ஒரு பெரும் பொலிவுடன் திகழ்ந்ததாம். உடனே சிவனார் அவ்வடிவத்தை நோக்கி, 'சுந்தரா, இங்கே வா' என்று அழைத்தாராம். கண்ணாடியில் தோன்றிய அச்சிவ வடிவம் உடனே உயிரோடு கூடிய உடம்பைப் பெற்றுச் சிவனார் பக்கலில் வந்து நின்றதாம். சிவனார் அவரைச் சுந்தரர் என்று அழைத்தமையால், அதுவே அவர் பெயராய் வழங்க, அவர் சிவனடியார் கூட்டத்துள் ஒருவராய் நின்று, சிவனாருக்கு மலர் பறித்து மாலை தொடுத்து அணியும் பணியை மேற்கொண்டு அக்கைலையிலேயே இருந்து வந்தாராம், என்ற இப்பகுதியிற் போந்த நிகழ்ச்சிகள் எத்துணை உண்மை என்பன பற்றி முதற்கண் ஆராய்ந்து மேற்சொல்வாம்.

தேவர்களாலும் அறியப்படாத கைலைமலையிலே வீற்றிருக்கின்ற சிவன், தம்முடைய வடிவத்தை ஒரு நிலைக் கண்ணாடி வாயிலாகப் பார்த்த பின்பே தம்முடைய அழகின் ஒப்புயர்வற்ற தன்மையைத் தெரிந்துகொண்டனர் என்றால், அவரை எல்லாம் வல்ல முழுமுதற் பெருங் கடவுளாக வைத்து எண்ணுவதற்கு மாறாக, அவரை ஒரு சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய ஒன்றாகவன்றோ எண்ணுதல்வேண்டும். அன்றியும், ஒன்றன் தன்மையை அறிதற்காகப் பிற உதவியை நாடுபவரை, இயற்கை அறிவும் எல்லாந் தாமாகவே அறியும் ஆற்றலும் வாய்ந்த கடவுள் என்று கூறுவதும் பொருந்தாதன்றோ !

இனி, சிவன் தம்முடைய வடிவத்தை நிலைக் கண்ணாடி ஒன்றிற் பார்த்து, அதில் தோன்றிய நிழலையே ஒரு உயிருள்ள வடிவமாக ஆக்கினார் என்பது எவ்வளவு பெரும் புளுகாய் இருக்கின்றது, பாருங்கள் அன்பர்களே ! ஒரு உயிருள்ள உடம்பு உண்டாவதற்கு, ஆண் பெண் ஆகிய இருபாலாரின் சேர்க்கை ஏற்பட்டு, மண், புனல்,

அனல் காற்று, விசும்பு என்று சொல்லப்படும் அய்ந்து பருப்பொருள்களும் ஒன்றுசேர்ந்து கருத்தரித்துக் குறிப்பிட்ட காலங் கழிந்த பின்னரே முடியுமென்பது உயிர் நூற்றுணிபாகும். ஆனால், இங்கே ஒரு கண்ணாடி மகப்பேற்றை உண்டாக்கிற்றென்று சொல்லப்படுகின்றது. ஒரு கண்ணாடி வாயிலாகக் கடவுள் தாம் நினைத்த வடிவத்தைப் படைத்து உயிர்கொடுக்க முடியுமானால், பெண் உலகம் அத்தகைய முறையை வரவேற்றுத் தங்களுக்கு ஓய்வு கொடுத்ததற்காகக் கடவுளை வாயார மனமாரப் போற்றி வாழ்த்துவார்கள். 'பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம்' என்றபடி, பெண்பாலார் தாம் குழந்தைகளைப் பெற்றெடுக்கும் வரை எவ்வளவு துன்பங்களுக்கு ஆளாகின்றனர் என்பது அவர்களுக்கே தெரியும்; அன்றிப் பிள்ளைப் பெறாப் பேதையர் அறிவரோ! பிள்ளைப் பேற்றிற் பெண்களுக்குக் கணக்கற்ற துன்பங்களைக் கொடுக்குங் கடவுள், தாம் நினைத்தபோது மட்டும் கண்ணாடியிலிருந்தும் பிற பொருள்களிலிருந்தும் பிள்ளைப்பேற்றை நடாத்துவாரானால், அவரை அன்பு வடிவான சிவம் அல்லது பேரின்ப வடிவான கடவுள் என்று அழைப்பது யாங்ஙனம் பொருந்தும்?

இனி, கந்தபுராணத்திற் போந்த முருகக் கடவுளைச் சிவன் தமது நெற்றியினின்றுந் தோற்றுவித்தார் என்றும், உமையம்மையார் தமது உடம்பிலுள்ள அழுக்கைத் திரட்டி ஒரு உருண்டையாக்கி அதினின்றும் மூத்த கடவுளாகிய பிள்ளையாரைத் தோற்றுவித்தார் என்றுஞ் சொல்லப்படுகிறது. இங்ஙனமே பிள்ளையாருடையவும் முருகனுடையவும் பிறப்பு முறைகளைபபற்றி இன்னும் பல கதைகளில் வெவ்வேறு முறையாகவும் பேசப்படுகின்றன. அவை தம்மையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும். எனவே, கண்ணாடி, நெற்றி, அழுக்கு முதலியனவற்றிலிருந்து உயிர்களையும் அவைக்குரிய உடம்புகளையும் உண்டாக்க முடியுமானால், சிவன், பிள்ளைப்பேற்றிற்காக உயிர்களிடம் அமைந்திருக்குங் கருவிகளை அங்ஙனமல்லாமல், அவை சிறுநீர் கழிப்பதற்கு மட்டும் பயன்படக்கூடிய முறையில் அமைத்து, உயிர்கள் அதனால் அடையுந்

துன்பத்தினின்றும் விலக்கியிருக்கலாம். அன்றியும், உயிர்களுக்குப் புணர்ச்சி இன்பம் இன்றியமையாததென்றால், அத்தகைய புணர்ச்சியின் பயனாகக் கருவுண்டாகாத முறையையாவது வகுத்திருத்தல்வேண்டும். அங்ஙனமன்றிப் பிள்ளைபெறும் முறையைத் தமக்கு ஒரு வகையாகவும், மற்றை உயிர்களுக்கு இன்னொரு வகையாயும் நிகழவிடுவது கடவுட்டன்மைக்கு மாறாய் இருப்பதுமன்றிப் பகுத்தறிவுக்குப் பொருந்தாததாகவும் இருக்கிறது. ஆகவே, இவற்றாற் பெறப்படுவது என்னவென்றால், சைவர்களால் வழிபடப்பட்டு வருஞ்சிவன் ஒரு கண்கட்டு மாயக்காரனே யன்றித் தமிழ்மக்களாற் கொண்டாடப்படும் அன்பு அல்லது அறிவுக் கடவுளாகார் என்பதேயாம். யாம்கூறும் இவ்வுண்மையைத் தமிழ்மக்கள் தங்கள் கருத்திற் பதித்து இந்நூலைப் படித்து உண்மை காண விரும்புகின்றோம்.

---

# சுந்தரர் ஆலாலசுந்தரர் ஆன வரலாறு

இனி, திருப்பாற் கடலிலுள்ள சாவாமருந் (அமிர்தத்) தை எடுத்து உண்டு சாவாமல் இருப்பதற்காகத் தேவர்களும் அசுரர்களுஞ் சேர்ந்து, மேருமலையை மத்தாகவும் ஆதிசேடன் என்னும் பாம்பைக் கயிறாகவும் பயன்படுத்தித் திருப்பாற் கடலைக் கடைந்தார்களாம். அப்போது ஆதிசேடன் துன்பந் தாங்கமுடியாது தன்னிடமிருந்த நஞ்சை (விஷத்தை) த் திருப்பாற்கடலிற் கக்கிற்றாம். அதனைக்கண்ட தேவர்கள் சிவனை நோக்கி, 'இந்நஞ்சு சாவாமருந்துடன் கலவாமற் காப்பாற்றியருளும்' என்று வேண்டிக்கொண்டனராம். சிவன் தமது பக்கத்தில் நின்ற சுந்தரரை ஏவி அந்நஞ்சை எடுத்துவரும்படி கட்டளையிட்டனராம். சுந்தரரும் அப்பெரும் பணியை ஏற்றுத் திருப்பாற்கடலுட் குதித்து அந்நஞ்சைத் தம்கையில் தாங்கிக் கொண்டு வந்து சிவனிடம் கொடுக்க, அதனை அவர் பெற்றுத் தம் வாயிற் போட்டுக்கொண்டாராம். இதனைப் பார்த்துக்கொண்டிருந்த உமையம்மையார் மிகுந்த பரபரப்

போடும் ஓடிவந்து, தமது கணவனுடைய கழுத்தை இறுகப் பிடித்துக்கொண்டு, 'என்செய்தீர் எம்பெருமானே! நீர் நஞ்சுண்டிறந்தால், நான் என் செய்வது? உம்மைப் பிரிந்து நான் உயிர்வாழ்தல் முடியுமோ? உண்ட நஞ்சை நீர் கக்கி விடுதலே செயற்பாலது' என்று வேண்டிக்கொண்டனளாம். இருதலைக்கொள்ளியின் நடுவே அகப்பட்ட எறும்பின் நிலையை அடைந்த நஞ்சுண்ட சிவன், உமையம்மையையுந் தேவர்களையுங் காப்பாற்ற எண்ணி, தாம் உண்ட நஞ்சை உள்ளுக்கு விழுங்காமலும் வெளியிற் கக்காமலுந் தமது கண்டத்திலேயே வைத்துக்கொண்டனராம். திருப்பாற் கடலில் ஆதிசேடனாற் கக்கப்பெற்ற நஞ்சை (ஆலகால விஷத்தை)ச் சுந்தரர் தம் கையில் தாங்கிக்கொண்டு வந்து கொடுத்ததால், சிவன் அவரை ஆலாலசுந்தரர் எனப் பெயரிட்டு அழைத்தனராம். அன்றுமுதற் சுந்தரர், ஆலால சுந்தரராகி அரவணையானுககு அரும்பணி ஆற்றிவந்தனர் என்ற இப்பகுதியும் ஆராய்ச்சிக்குரியதாம்.

ஆதிசேடனாற் கக்கப்பெற்ற நஞ்சைச் சுந்தரர் தமது உள்ளங்கையில் தாங்கிக்கொண்டுவந்து சிவனாரிடம் கொடுத்தாராம். என்னே விந்தை! ஆதிசேடன், நஞ்சைப் பாற்கடலிற் கக்கியவுடனே அதன் நச்சு வெப்பந் தாங்க முடியாமல் தேவர்கள் எல்லாரும் மிரண்டு ஓடிப்போய்ச் சிவனாரிடம் முறையிட்டார்கள் என்றும், அழகிய சிவந்த நிறத்தைப் பெற்றிருந்த திருமாலின் உடம்பு அந்நச்சு வெப்பந் தாக்கியதாற் பச்சை நிறமாக மாறிற்றென்றும் கதைகளிற் காணப்படும்போது, அத்தகைய கொடிய நஞ்சைத் தம் கையில் அடக்கிக்கொண்டுவந்த சுந்தரரை அந் நஞ்சு தாக்காதிருந்தது வியப்பினும் வியப்பாகவன்றோ இருக்கிறது. அன்றியும், ஆதிசேடனாற் கக்கப்பெற்ற நஞ்சு அப்பாற்கடல் நீரோடு கலந்துபோகாமல் ஒரு தனிக் கட்டிப்பொருளாய் அக்கடலில் மிதந்துகொண்டு இருந்தா லன்றோ அதனைச் சுந்தரர் எடுத்துத் தமது கையில் வைத்துக்கொள்ள முடியும்! பாம்புகளிடம் காணப்படும் நஞ்சானது நீர்த்தன்மை வாய்ந்ததென்றும், அந்நச்சுநீர் பாம்புகளின் வாயின் ஒரு பகுதியில் உள்ள நச்சுப்பையில் தங்கிககிடக்கிறதென்றும், பாம்பு மக்களைத் தீண்டியவுடன்

அந்நச்சுநீர் பாம்பின் பற்களின் வாயிலாக வெளிப்பட்டுக் கடிவாயிற் காணப்படுங் குருதியோ (இரத்தத்தோ)டு கலந்துவிடுகின்றதென்றும் சொல்லப்படும்போது, ஆதி சேடனாற் கடலிற் கக்கப்பட்ட நஞ்சைச் சுந்தரர் எங்ஙனம் எடுத்துவந்திருக்க முடியுமென்பதை இக்கதைகளை அப்படியே நம்பி மகிழுஞ் சைவ அன்பர்கள் எண்ணிப் பார்த்தல் வேண்டாமா?

இனி, திருப்பாற்கடல் என்பது பால் நிறைந்த ஒரு கடற்பரப்பா? அல்லது இயல்பாகவுள்ள கடலின் ஒரு பகுதிக்கு இட்ட சிறப்புப் பெயரா? என்பது விளங்க வில்லை. பாற்கடலாயின், அது எப் பால் கொண்டு நிரப்பப் பெற்றதென்பதுந் தெரியவில்லை. காமதேனுவின் பாலா? உமையம்மையின் ஞானப் பாலா? பசுவின் பாலா? எருமையின் பாலா? மரத்தின் பாலா? இவற்றுள் எதுவெனத் துணிதற்குப் புராணத்திற் கருவியில்லை. கடலின் ஒரு பகுதியிலுள்ள நீர்ப்பரப்பிற் சாவா மருந்து இருந்தமை பற்றியே அதற்குப் பாற்கடல் என்ற சிறப்புப் பெயர் எழுந்ததென்பதை உண்மையாக வைத்துப் பார்த் தாலும், அதன்கண் சாவா மருந்து எங்ஙனம் உண்டாயிற் றென்று கேள்வி எழுகின்றது. கடற்சிப்பியில் முத்து இருப்பது போலச் சாவா மருந்தும் கடலில் இருக்கிற தென்பதை உண்மையெனக்கொண்டு பார்த்தாலும், அதன் கண் இருந்த சாவா மருந்தைக் கடைந்தெடுப்பதற்கு மேரு மலையை மத்தாகவும் ஆதிசேடனைக் கயிறாகவும் பயன் படுத்தினார்கள் என்பது ஒரு சிறிதும் அறிவுக்குப் பொருந்துவதாயில்லை. மேரு மலை என்பது, நிலத்தின் வேறுபடாத ஒரு உயர்ந்த மேடேயன்றி, அது ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குத்தூக்கிச் செல்லக் கூடிய ஒரு அசை பொருள் அன்று. அங்ஙனமிருக்க, அது ஒரு மத்தாகப் பயன்பட்டதென்பது எத்துணைப் பெரும் பொய்யாக இருக்கின்றது. இனி, மலைகள் எல்லாம் ஒரு காலத்தில் பறந்து திரியும் வாய்ப்புப் பெற்றிருந்தன வென்றும், பின்னர் இந்திரன் தனது குசலிப்படையால் அவற்றின் இறகுகளை வெட்டி வீழ்த்தினான் என்றும், அது முதற்கொண்டு அவை பறக்க முடியாது நிலத்திற்

கிடக்கின்றன வென்றும், அவற்றுள்ளும் மைனாக பர்வதம் எனப்பெயர் பூண்ட ஒரு மலை இந்திரனுடைய குசலிப் படைக்குத் தப்பிக் கடலிற் போய் ஒளிந்து கொண்ட தென்றும், இன்றும் அந்த மலை கடலுக்குள்ளேயே அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருக்கிற தென்றும் புராணங்களில் ஒரு பெரும் புளுகும் காணப்படுகின்றது. இங்ஙனம் மலைகள் பறந்து திரிந்தன வென்பதை உண்மையெனக் கொண்டு பார்த்தாலும், பறக்கும் இயல்பு பெற்றிருந்த மேருமலைக்குத் தானாகவேசுழலும் வாய்ப்பும் இருந்திருக்கு மன்றோ! பறவைகள் பறப்பதையும் வட்டமிட்டுச் சுழல் வதையும் நாம் இன்றும் பார்க்கின்றோம். இதுபோலவே, மேருமலையுந் தான் மத்தாகப் பயன்பட்ட போது ஆதிசேடனுடைய உதவியின்றித் தானாகவே சுழன்றிருக்க லாம். ஆனால், திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் மலைகள் எல்லாம் பறக்குந் தொழில் அற்றுக் கிடந்தன வாதலால், மேருமலையைச் சுழற்றுவதற்குக் கயிறாக ஆதிசேடனைப் பயன்படுத்த வேண்டியிருந்ததென்றால், ஆதிசேடன் தனது ஆயிரம் தலைகளினாலும் இந்நிலப் பரப்பைத் தாங்கிக் கொண்டிருக்கிறதாகவும் ஒரு அண்டப் புளுகு புராணங்களிற் காணப்படுகின்றதே! நிலத்தைத் தாங்கிக் கொண்டிருந்த ஆதிசேடன் மத்தின் கயிறாக வந்து வேலை செய்தபோது, நிலத்தை யார் தாங்கிக் கொண்டிருந் தனர் என்பதுதெரியவில்லை. ஆதிசேடன் உமையம்மையின் கைச் சிறுவிரலுக்கு மோதிரமாகப் பயன்பட்டுள்ளதென்றும் ஒரு கதையுண்டு.

இனி, ஆதிசேடன் என்னும் பாம்பு விட்டுணு என்று சொல்லப்படும் நாராயணனுக்குப் படுக்கையாகப் பயன் படுவதாகவும் ஒரு கதை உளது. ஆனால், நாராயணன் முதல் எல்லாத் தேவர்களுமே சாவாமருந்தை உண்பதற்காக ஆண்டு வந்து குழுமி இருந்தனராதலால், அவருடைய படுக்கையாகிய ஆதிசேடனும் அவர்கூடவே வந்திருக்க லாம். ஏனென்றால், சாவா மருந்தை உண்டு என்றைக்குஞ் சாவாதிருப்பதற்காக வந்த நாராயணனுக்கு, அவர் படுக்கை யாய்ப் பயன்படும் ஆதிசேடனும் சாவாமருந்தை உண்டால் தானே முடியும். ஆனால், ஆதிசேடனுக்குத் தேவர்கள்

சாவாமருந்தைப் பங்கிட்டுக்கொடுத்தார்களோ இல்லையோ, அது தெரியவில்லை.

இனி, திருப்பாற்கடலிலிருந்த சாவா மருந்தை உண்டதனால் தேவர்கள் எல்லாரும் இன்றும் உயிரோடு இருக்கின்றனர் என்றும் நம்புவதற்கில்லை. ஏனென்றால்,

" நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்
ஈறிலாத நல்ஈசன் ஒருவனே."

என்று சைவ சமய குரவர் நால்வருள் ஒருவரான திருநாவுக்கரசர் பாடியிருக்கின்றார். ஆயின், இந்தக் கணக்கு இன்றைக்கு 1330 ஆண்டுகட்கு முன் இருந்த திருநாவுக்கரசருக்கு எப்படிக் கிடைத்ததென்பது தெரியவில்லை. பிரமாவின் ஆயுட்காலம் 1577,880,000,000 நாட்கள் என்று சிலர் கணக்கிட்டிருக்கின்றனர். அதாவது, பிரமாவின் ஒரு நாளில் ஒரு மனிதன் 1461 முறை பிறந்து இறக்கின்றான் என்பது. இந்தக் கணக்கின்படி ஒரு பிரமாவின் ஆயுட்காலம் 432 கோடி மனித ஆண்டுகளாகின்றன. ஒரு பிரமாவுக்கு இத்தனை கோடி ஆண்டுகளாயின், திருநாவுக்கரசர் கூறும் நூறு கோடி பிரமர்களுக்கு எத்தனை-எத்தனை-எத்தனை நூறுகோடி கணக்கான ஆண்டுகள் கழிந்திருக்க வேண்டுமென்பதனையும், இவ்வுலகந்தொன்றி எத்தனை ஆயிரங்கோடி ஆண்டுகள் கழிந்திருக்கவேண்டும் என்பதனையும் எண்ணிப் பார்க்கும்போது அவை கணக்கில் அடங்குவனவாயில்லை

ஆனால், இக்காலத்து ஆராய்ச்சியாளர், உலகந் தோன்றி 5,50,000 ஆண்டுகள் தானென்றும், அதிலும், மக்கள் சிறிது நாகரிகம் அடைந்தவர்களாகக் காணப்பட்ட காலம் 50,000 ஆண்டுகட்கு முன்னேதான் என்றுங் கூறுகின்றனர். இவ்வாரய்ச்சி, கடவுளின் அருளைப்பெற்ற பெரும் பிறவிகளால் (அவதாரங்களால்) சொல்லப்படாமல்,

பகுத்தறிவோடு கூடிய நம் போலும் மக்களினத்தாரால், அவர்களுடைய முயற்சியும் அறிவும் பயன்படுத்தப்பட்டு, ஆராய்ந்து கண்ட முடிவாதலால் இதனையே நாமும் ஒருவாறு மெய்யெனக் கொள்ளவேண்டும். வேண்டவே, மேற்சொல்லப்பட்ட கணக்குகளும் பொய்யாகப் போய் முடியும். அவையும் பொய்யாகப் போகவே, அதற்கு மேற் சொன்ன திருப்பாற்கடல் கடைந்த கதையும் புளுகாய் முடியும் என்று துணிக.

என்றாலும், மக்களின் அறிவை மயக்கி, அவர்கள் பாடுபட்டுத் தேடிய பொருள்களைப் பறிப்பதற்காக ஒரு சாரார் இத்தகைய கதைகளை எழுதி வைத்தனர் என்பது மட்டும் மறுக்கமுடியாத உண்மையாகும். இக்காலத்தில், பித்தளைக்குஞ் செம்புக்குந் தங்கமுலாம் பூசி மக்களை ஏமாற்றிப் பிழைக்கும் ஒருகூட்டத்தார் இருப்பது போலவே, அக்காலத்திலும், கதைகளுக்குக் கடவுள் முலாம் பூசி மக்களை ஏறாற்றிப் பிழைக்கும் ஒரு கூட்டத்தார் இருந்தனர்-இன்றும் இருக்கின்றனர். பித்தளைக்குஞ் செம்புக்குந் தங்கமுலாம் பூசி மக்களை ஏமாற்றுகின்றவர்களை அறிந்து மன்னன் தண்டிப்பது போலவே, கதைகளுக்குக் கடவுள் முலாம் பூசி மக்களை ஏமாற்றிப் பிழைக்குஞ் சோம்பேறிகளையும் மன்னன் அறிந்து தண்டிக்கும் முறை ஏற்படுதல் வேண்டும்.

---

# சிவன் நஞ்சுண்டு பிழைத்த வரலாறு

இனி, அக்கதையிற் போந்த சிவன் நஞ்சுண்டு பிழைத்தமையையும் ஒரு சிறிது ஆராய்வாம். ஆதிசேடனாற் கக்கப் பெற்ற நஞ்சைச் சுந்தரர் தம் கையில் தாங்கிக் கொண்டு வந்து சிவனாரிடம் கொடுக்க, அதனை அவர் வாங்கித் தம் வாயிற் போட்டுக்கொண்டதைக் கண்ட உமையம்மையார் ஓடோடியும் வந்து தடுத்தனளாம். என்னே, விந்தை! நஞ்சையும் அமுதாகக் கொள்ளக்கூடிய

ஆற்றல் வாய்ந்தவர் கடவுள் என்று சொல்லப்பட்டிருப்பவும், அதனையறியாது உமையம்மை தடுத்தனளென்றால், அதை விட நகைப்புக்கிடமான செய்தி வேறொன்றுளதோ! ஒன்று, உமையம்மைக்குத் தமது கணவனாகிய சிவனின் ஆற்றல் தெரியாதிருக்க வேண்டும், அல்லது சிவனுக்கு அந்நஞ்சை உட்கொண்டு சமாளிக்கும் ஆற்றல் இல்லாதிருக்க வேண்டும். நச்சுப் பாம்பினால் தீண்டப் பெற்று இறந்த மக்களைச் சிவன் பேரைச் சொல்லி உயிர்ப்பித்த மக்களும், உணவுடன் கலந்து கொடுத்த நஞ்சைச் சிவன் பேரைச் சொல்லி உண்டுபிழைத்த மக்களும் உயிரோடு இருந்ததாகச் சொல்லப்படும் போது, நஞ்சை உண்பதனால் அத்தகைய சிவனே இறந்துபடுவர் என்ற அச்சம் பாதிக் கடவுளாகிய உமையம்மைக்கு எழுந்ததென்றால், 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்'

"பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்றாற்போல்
அந்நிறம் அண்ணலும் அம்பிகையும்—செந்நிறத்தள்
எந்நிறத்தளாய் இருப்பள் எங்கள் சிவபதியும்
அந்நிறத்தனாய் இருப்பன் ஆங்கு."

என்ற சைவ சமயக் கருத்துக்களைத் தமிழ்மக்கள் யாங்ஙனம் நம்ப முடியும்?

அன்றியும், உயிர்களுக்குப் பசுத்தன்மையை நீக்கிச் சிவத்தன்மையை விளக்குவதற்கண் உளதாகிய இரக்கம், முதல்வனாகிய சிவனுக்கு அன்றேயுள்ளது. அதுவே 'சத்தி' அல்லது 'உமை' என்று சொல்லப்படும் என்ற சிவஞானபோதம் முதலான சைவ சித்தாந்த நூற்கருத்துக் களுக்கும் மாறுபட, சத்தியாகிய உமையம்மை தமது கணவனாய் நீக்கமற நிற்குஞ் சிவனின் ஆற்றலை அறியாது அங்ஙனம் மயக்கவுணர்வு மேலிட்டு அச்சப்பட்டது சிவத் தன்மைக்குப் பெரும் இழுக்கன்றோ! அதுவேயுமன்றி, சிவன் நஞ்சை உண்ணுதல் கண்ட உமையம்மை அவரை அங்ஙனம் உண்ணவிடாது தடுத்தபொழுது, அச்சிவனாவது

'நான் இந்த நஞ்சை உண்பதனால் இறந்துபட மாட்டேன், நீ அஞ்சுதல் வேண்டாம்' என்று சொல்லி அந்நஞ்சை உண்டு தமதாற்றலை உமைக்கும் உலகுக்குங் காட்டி யிருத்தல்வேண்டும். அற்றன்று, சிவன் நஞ்சைக் கழுத்தில் வைத்துக்கொண்டதனால்தான் அவரது ஆற்றலை உலகம் அறியும்படி ஏற்பட்டதென்றும், அதனாலேதான் அவருக்கு 'நீலமிடற்றோன்,' 'காளகண்டன்,' 'கறைக் கழுத்தன்' என்ற சிறப்புப் பெயர்கள் வந்தனவென்றும் கொள்வதாயின், அது, அவரின் விருப்பு வெறுப்பற்ற சிவத்தன்மையை மாற்றி, அவரை ஒரு தற்புகழ்ச்சி விருப்புடையவன் என்ற நிலைக்கே கொண்டுவந்துவிடும். மிடற்றிலிருக்கும் நஞ்சு வயிற்றிலிருப்பதாற் சிவனுடைய பெருமைக்கு வந்த இழுக் கென்னை? நீலமிடற்றோன் என்னாமல் நீலவயிற்றோன் என்பதாற் சிவனுக்குப் போந்த குறை என்னை? ஆனால், "மாடு நினைத்த இடத்தில் தொழுவம் கட்டுவார்களா?" என்றாற்போல், ஒவ்வொருவர் எண்ணுகின்ற எண்ணப்படி யெல்லாம் சிவன் நடப்பதென்றால்,

" மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்தது
என்னும் மறையின் இயல் மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணான் சிவன் அசத்தை யின்று."

என்ற சிவஞானபோதக் கருத்துப்படி, 'சிவனுடைய முழு முதற் றன்மையையும், அவருடைய கடைக்கண் பார்வையி லேயே இவ்வுலகம் இயங்குகின்றதென்பதையும் அறியாத சில பேதைமையினோர் சிவன்பால் குற்றங்கண்டு குறைகூற முயல்வர். அவர் கூற்றுக்கு எவரும் செவிசாய்த்தல் ஆகாது' என்று எவரேனுங் கூறுவரேல், சிவன், தாம் நஞ்சை உண்டபோது, அதனைத் தமது கண்டத்தில்தானே வைத்துக்கொள்வது என்ற எண்ணமும், அங்ஙனம் கண்டத்தில் வைத்துக்கொண்டால்தான் உலகம் தம்முடைய ஆற்றலை அறிந்துகொள்ள முடியுமென்ற நினைவும் அவருக்கு உண்டாகவில்லையன்றோ! உமையம்மை தடுத்த ஒரு காரணம் பற்றியே சிவன், தாம் உண்ண விரும்பிய

நஞ்சைக் கண்டத்தில் வைத்துக்கொண்டார். இங்ஙனம் உமையம்மையின் வேண்டுகோளுக்கு இசைந்த சிவன், தாம் விழுங்கிய நஞ்சைத் தமது கண்டத்தில் வைத்துக் கொண்டார் என்பதும் எத்துணைப் பொருத்தமற்ற புளுகாய் இருக்கின்றது பாருங்கள்! பாம்புகளுக்கு இருப்பதுபோன்ற ஒரு தனி நச்சுப்பை சிவனாரின் கண்டத்திலும் இருந்தாலன்றி, அந்நஞ்சு கழுத்தில் தங்கி நிற்க முடியாதென்பதைச் சிறு பிள்ளைகள்கூட மிக எளிதாகக் கூறிவிடுவர். ஒருவனால் உட்கொள்ளப்பட்ட எந்தப் பொருளும் கண்டத்தின் வழிச்சென்று அது தங்கி நின்று செரிப்பதற்குரிய இரைப்பையில் தங்குமேயன்றி, அது செல்லும் பாதி வழியாகிய கண்டத்தில் தங்கமுடியாதென் பதைப் பெரியபுராணத்திற்கு விரிவுரை விளக்கவுரை முதலான வெற்றுரைகள் எழுதி அவ்வின்பச் சுவையை நுகர்ந்து மயங்கிக்கிடக்கும் சைவப்பெருமக்கள் தங்கள் பகுத்தறிவுக்கு வேலை கொடுத்துப் பாராதொழிவது ஏனோ! ஆகவே, ஈண்டுப் பேசப்படுஞ் சிவன், பிறரின் உதவியின்றித் தாமாகவே எல்லாவற்றையும் உணரும் இயல்புடையவர் அல்லர் என்பதூஉம், அவரிடம் எல்லாம் வல்ல முழுமுதற்றன்மை உண்டென்பார் கூற்றுப் பொய் யென்பதூஉம், சிவனே இவ்வுலகை இயக்குகின்றார் என்பாருரை எள்ளிநகையாடற்பாலதாம் என்பதூஉம் உய்த்துணர்ந்து, இங்ஙனம் கூறும் மதப்பித்தர்களின் மயக்கத்தைத் தீர்த்து, அவர்கட்கு மக்கட்பண்பு உண்டாகச் செய்வது பெரிதும் இன்றியமையாததாகும்.

---

# சுந்தரருக்குக் காதல்நோய் உண்டான வரலாறு

இனி, ஆலாலசுந்தரர் அக்கைலை மலையிலே இருக்கும் நாளிலே, ஒருநாள் சிவனாருக்குவேண்டிய மலர்களைப்

பறிப்பதற்காக அங்குள்ள பூந்தோட்டத்திற்குச் சென்றார். அப்போது, உமையம்மைக்கு வேண்டிய மலர்களைப் பறிப்பதற்காக அனிந்திதை, கமலினி என்னும் பெயர்களையுடைய பெண்கள் இருவரும் அங்கு வந்து சேர்ந்தார்கள். ஆலாலசுந்தரர் அப்பெண்கள் இருவரையும் பார்த்துக் காமுற்றார். அப்பெண்களும் ஆலாலசுந்தரரைப் பார்த்துக் காமுற்றார்கள். இதனை அறிந்த சிவன் உடனே ஆலாலசுந்தரரை அழைத்து, 'நீ பெண்கள்மேல் இச்சைகொண்டபடியால், நிலவுலகிலே தென்பகுதியாகிய தமிழ்நாட்டிலே போய்ப் பிறந்து அப்பெண்களைப் புணர்ந்து இன்பம் நுகர்வாய்' என்று கட்டளையிட்டார். அதுகேட்ட ஆலாலசுந்தரர் தாம் செய்த பிழைக்காகப் பெரிதும் வருந்தி, சிவனை வணங்கி, 'எம்பெருமானே, உம்மைவிட்டுப் பிரிதற்குக் காரணமாகிய கொடுமையைச் செய்த யான். மயக்கம் பொருந்திய மக்கட் பிறப்பை எடுத்து, செய்ய வேண்டியது இன்னது என்றும் அறியாது உலக வாழ்க்கையிலே கிடந்து மயங்கும்போது, நீர் வெளிப்பட்டு வந்து அடியேனைத் தடுத்து ஆட்கொள்ளுதல் வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, சிவனாரும் அதற்கிசைந்து விடைகொடுத்தனுப்பினார்.

பின்னர் ஆலாலசுந்தரர், தமிழ்நாட்டிலுள்ள திருநாவலூரில் சடையனார் என்னும் ஆதிசைவப் பார்ப்பனருக்கு அவர் மனைவியாரான இசை ஞானியார் வயிற்றிற் கருத்தரித்துப் பிறந்து, நம்பியாரூரர் எனப் பெயர் சூட்டப்பெற்று இருந்தார். நம்பியாரூரரின் அழகைக் கண்ட திருமுனைப் பாடி நாட்டு அரசனான நரசிங்கமுனையர் என்பவர், அப்பிள்ளையைத் தாம் வளர்க்க வேண்டுமென்ற விருப்பங்கொண்டு, அதன் பெற்றோர்களிடமிருந்து பெற்றுக் கொண்டு போய் உரிய காலத்தில் பூணூல் அணிவித்துக் கல்வி கற்பித்து வரும் நாளில், நம்பியாரூரருக்கு மணஞ் செய்து கொள்ளுங் காலம் வந்தது. அதுகண்ட பெற்றோர்கள் தங்கள் மரபிலுள்ள ஒரு பெண்ணைப் பார்த்துப் பேசித் திருமணத்திற்குரிய நாளுங் குறிப்பிட்டு மணம் நடக்கப்போகும் வேளையிற், சிவனார் ஒரு கிழப்பார்ப்பன வடிவந்தாங்கிவந்து மணப் பந்தருட் புகுந்து, நம்பியாரூரரை

நோக்கி, 'நீ எனக்கு அடியவன்' என்றார். அதனைக் கேட்ட நம்பியாரூரர் அய்யரை நோக்கி, 'பார்ப்பனருக்குப் பார்ப்பனர் அடிமையாதல் இன்றைக்கு நீயே சொல்லக் கேட்டோம், நீ பித்தனோ' என்று சொல்ல, அய்யர் 'உன்னுடைய பாட்டன் எழுதிக் கொடுத்த அடிமை ஓலை என்னிடம் இருக்க, நீ மறுப்பது முறையா?' என்றார். நம்பியாரூரர் சினமுற்று அய்யரிடம் இருந்த ஓலையைப் பறித்துக் கிழித்தெறிந்தார். உடனே அய்யர் சுந்தர மூர்த்தியைப் பிடித்துக்கொண்டு 'இது முறையோ' என்று ஓலமிட்டார். சுந்தரரின் திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் அவ்விருவரையும் விலக்கி, 'உலகத்திலே ஒரு காலமும் நடந்திராத ஏற்பாட்டைக் கொண்டு வழக்காடுகின்ற பார்ப்பனரே, நீர் எங்கிருக்கின்றவர் சொல்லும், என்றார்கள். அதற்கு அய்யர், 'நான இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்றவன்' என்றார். அப்படியானால், இந்த வழக்கை அங்கே தானே பேசித் தீர்ப்புச் செய்யலாம் என்று சுந்தரர் சொல்ல, எல்லாருந் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பார்ப்பனர் முன்னிலையிற் போய்ச் சேர்ந்தார்கள். அய்யர் அங்கிருந்த பார்ப்பனர்களை நோக்கி, 'இந்த ஆரூரனுடைய பாட்டன், தானுந் தன் மரபினரும் எனக்கு அடிமை' என்று எழுதித் தந்த மூலவோலை தம்மிடம் இருப்பதாகக் காட்டினார் அவர்கள் அதை வாங்கி அங்கிருந்த ஒருவனிடம் வாசிக்கும் படி கொடுத்தார்கள். அவன் அந்த ஓலையைப் பிரித்து, எல்லோரும் கேட்கக் கூடியதாக, "திருநாவலூரில் இருக்கின்ற ஆதி சைவனாகிய ஆரூரன் என்கின்ற நான் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு நானும் என் வழிவரும் எல்லாரும் தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு, ஆரூரன்" என்று படித்தான். அந்த ஓலையிற் சாட்சிகளாகக் கையெழுத்திட்டவர்களும் தங்கள்கையெழுத் தென்றே ஒத்துக் கொண்டார்கள். சுந்தரரும் அய்யருக்கு அடிமையானார். பின்பு அங்குள்ளவர்கள் அய்யரை நோக்கி, 'இவ்வூரில் உம்முடைய வீடு எங்கே இருக்கிறது, காட்டும்' என்று கேட்க, அவர் அவ்வூரிலுள்ள சிவன் கோயிலைக் காட்டி மறைந்து விட்டார். சுந்தரர் மட்டும்

அவனைப் பின்தொடர்ந்து கோயிலுட் சென்று கூப்பிட்டார். சிவன் உமையம்மையோடும் இடபத்தின் மீது ஏறிவந்து சுந்தரரை நோக்கி, 'நீ முன்னே நமக்குத் தொண்டனாய் இருந்தாய். நீ பெண்கள் மேல் காமுற்றதனால் நம்முடைய கட்டளையின்படி இவ்வுலகிலே வந்து பிறந்தாய். இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற குடும்பக்கட்டானது உன்னைத் தொடராதபடி நாமே வலிய வந்து உன்னைத் தடுத்து ஆட்கொண்டோம். இனி, நீ நம்மைப் பாடிக் கொண்டு இரு' என்று கட்டளையிட்டு மறைந்தருளினார். என்ற இவ்வளவிற் கதையை நிறுத்தி இதன்கண் போந்த வரலாறுகளை ஆராய்ந்து மேற்செல்வாம்.

ஆலாலசுந்தரருக்கும் அனிந்திதை, கமலினி என்ற இருவருக்கும் இடையே காதல் ஏற்பட்டதால், அவர்களுடைய எண்ணம் நிறைவேறுவதற்காக அவர்களை இந் நிலவுலகிலே போய்ப் பிறந்து இன்பம் நுகரும்படி சிவன் கட்டளையிட்டனர் என்றால், அவர்கள் இருந்த, அக்கைலை என்று சொல்லப்படுஞ் சிவ உலகிலேயே அவர்களுக்கு ஏற்பட்ட காதலைத் தணிப்பதற்குச் சிவன் ஏன் இடங்கொடுக்கவில்லை என்பது தெரியவில்லை. ஒருக்கால், அந்த இடம், சிற்றின்பம் என்று சொல்லப்படும் காம இச்சையைத தீர்த்தற்குத் தகுதி வாய்ந்ததல்லவென்றால், அங்கே நெடுங் காலமாக இருந்துவருஞ் சிவனும் உமையும் தங்கள் காம இச்சையைத் தீர்த்துக் கொள்வதற்காக எந்த உலகில் போய்ப் பிறக்கின்றார்கள்? அந்தக் கைலையிலேயே, சிவன் ஆண்யானை வடிவத்தையும், உமை பெண் யானை வடிவத்தையும் எடுத்துப் புணர்ந்து பிள்ளையாரைப் பெற்றதாக ஒரு கதையும்; முருகக் கடவுளைப் பெற்றெடுப்பதற்காகச் சிவனும் உமையும் அந்தக் கைலையிலேயே ஆயிரம் ஆண்டுகள் அதே வேலையாகப் புணர்ந்து கொண்டிருந்தனர் என்ற இன்னொரு கதையும் புராணங்களிற் காணப்படுகின்றனவே. சிவனும் உமையும் அந்தக் கைலை உலகில் இருந்து புணர்ச்சி நடத்தும்போது, அவர்களின் வேலையாட்களான ஆலாலசுந்தரருக்கும் அவராற் காதலிக்கப்பட்ட இரு பெண்களுக்கும் அந்தச் சிவ உலகில் இடங்கிடையாது போனது வியப்பாகவே இருக்

கிறது. சிவன், மற்றவர்களைப் போலும் பொறாமையுங், குறுகிய மனப்பான்மையும், சிற்றறிவுமுடையவராய் இருந்தால், 'நாம் இருந்து புணர்ச்சி செய்தலாகிய இன்பத்தை நுகரும் இடத்தில் வெறொருவர் அதனைச் செய்தல் தகா' தென்று தடுத்திருப்பர். சிவனோ, அப்படிப் பட்டவர் அன்று; பெருந்தன்மையும், பேரறிவும், பேராற்றலும் வாய்ந்து, அழுக்காறும் மனக்காழ்ப்பும் அற்ற ஒரு பெரும்பொருளாய் விளங்குபவர் என்று சொல்லப்படும் போது, அவர்களுக்கு ஏற்பட்ட இச்சையை அந்த உலகத்தில் இருந்தே தீர்த்துக்கொள்ள விடாது, பிறிதொரு உலகிற்கனுப்பியது அவரின் பெந்தன்மைக்குப் பெரும் இழுக்கன்றோ!

அன்றியும், ஆலாலசுந்தரர், மற்றை உயிர்களைப் போலும் இவ்வுலகிலே யோனிவழிப் பிறந்து, நல்வினை தீவினைகளைச் செய்து அவற்றிற்கேற்ப வெவ்வேறு உலகங்களிற் சென்று, அந்தந்த வினைப்பயன்களை அந்தந்த உலகிலே இருந்து நுகர்ந்து மீண்டும் இவ்வுலகில் வந்து பிறப்பவர்கள் போலன்றிச் சிவ உலகத்திலேயே—சிவனுடைய விருப்பத்திற்கே—சிவனுடைய வடிவமே ஓர் வடிவமாகக் கண்ணாடியினின்றும் பிறந்தவராயிற்றே! ஆணவம் மாயை கன்மம் என்று சொல்லப்படும் மும்மலங் களும், இருப்பு வினை (சஞ்சிதம்) நுகர்வினை (பிராரத்தம்) நிகழ்வினை (ஆகாமியம்) என்று சொல்லப்படும் மூவினை களும் சுந்தரருக்கு உண்டென்று சொல்லுதற்கில்லையே! சுந்தரருக்கு இவை உண்டென்றாற் சுந்தரரின் வேறுபடாத சிவனுக்கும் இவை உண்டென்பது பெறப்படும். படவே, சிவனை முழுமுதற் பெருங்கடவுள் என்பார் கொள்கை கழுத்திற் கையிட்டுத் தள்ளி ஒதுக்கப்படும் என்க.

இனி, கண்ணாடியினின்றுந் தோன்றிய சுந்தரர், சிவனுடைய வடிவத்தைப் பெற்ற ஒரு குழந்தையாய் வந்தாரா? அல்லது கண்ணாடி முன் நின்று தம் அழகைப் பார்த்து, சுந்தரா, இங்கே வா' என்று அழைத்த சிவன் எத்தனை ஆண்டு நிரம்பப் பெற்றவராய் நின்றாரோ அத்தனை ஆண்டு நிரம்பப் பெற்ற ஒரு பெரும் ஆளாய்

வந்தாரா ? குழந்தையாய் வந்து பாலுண்டு வளர்ந்து பெரியவனானகதை ஆண்டுப் பேசப்படாததால், பெரியாண் பிள்ளையாகவே தான் வந்தார் என்பது ஓர்ந்துணரப்படும். கண்ணாடியிற் காணப்பட்ட ஒரு ஆளின் நிழல் வடிவத்திற்கு உயிரும் உடம்பும் ஏற்பட்டதென்பதை நம்பும் அன்பர்கள், அவ்வுடம்புக்குத் தக்க அகவையும் பிற உறுப்புக்கள் அமைவும் ஏற்பட்டிருக்குமென்பதையும் நம்பாதொழிவரோ! அன்றியும், ஒருகாலத்தில் சிவன் தமது ஆண்குறியினின்றும் வெளிப்போந்த வெண்ணீரை (சுக்கிலத்தை)த் தமது கையிலே தாங்கி அதனை ஒரு ஆண்பிள்ளையாக்கினார் என்றும், கையிலிருந்து உண்டானதால் அதற்குக் 'கையனார்' எனப் பெயரிட்டு வளர்த்துப் பின் 'அய்யனார்' என்றழைத்து, அதனை ஒரு கடவுளாக்கினார் என்றும் ஒரு கதை புராணத்திற் காணப்படும்போது, நிழலுக்கு உயிர் கொடுத்து ஆளாக்கியதில் என்ன வியப்பிருக்கிறது. வெண்ணீரும் (சுக்கிலம்) செந்நீரும் (சுரோணிதமும்) சேர்ந்து கருவுண்டாகிப் பிள்ளைப்பேறு கிடைப்பது இயற்கையாய் நிகழ, இங்கே வெண்ணீர் ஒன்றன் உதவிகொண்டே சிவன் தம் கையினிடமாகவே அய்யனாரை உண்டாக்கினார் என்று சொல்லப்படுகிறது. பகுத்தறிவுடைய உலகம் இத்தகைய நிகழ்ச்சிகளை ஆழ்ந்தெண்ணிப் பார்த்து, உண்மை கண்டு, உலகுக்கு உரைக்குமாக,

இனி, ஆலாலசுந்தரர் இந்நிலவுலகிற்கு எப்படி வந்தார் என்பது தெரியவில்லை. சிவனுடைய கட்டளை பிறந்த வுடனே அவர் தம்மைத் தாமே தற்கொலை செய்துகொண்டு வந்தாரா ? அல்லது அவரது ஆயுட்காலம் முடியும் வரை கைலையில் இருந்து, இயற்கையாய் இறந்தபின் வந்தாரா ? அன்றிச் சிவ உலகத்தில் தாங்கி நின்ற அதே உடம்போடு இவ்வுலகிற்கு வந்து உயிரை விட்டபின் சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் பிள்ளையாய்ப் பிறந்தாரா ? என்ற இம்மூன்று வகையில் எது நிகழ்ந்ததென்பது தெரியவில்லை. ஆனால், மேற்சொன்ன மூன்று வகையில் பின்னவை இரண்டும் புராணமுறைப்படி நிகழக்கூடியனவல்ல என்பது தெரியக்கிடக்கின்றது. எப்படியென்றால், சிவனுடைய கட்டளை பிறந்த அதே விநாடியிலேயே அக்கட்டளையை

ஏற்று நடக்க வேண்டுமென்பது புராணக் கொள்கையுஞ் சைவ சமயத் துணிபுமாகையால், ஆலாலசுந்தரர் பின்னுஞ் சிலகாலந் தம்முடைய ஆயுள் முடியும்வரை சிவ உலகத்தில் இருந்து இறந்த பின்னரே வந்தார் என்று கொள்ளுதற் கில்லை. இனிச் சிவ உலகத்தில் தாங்கி நிற்கும் வேத உடம்போடு பூத உடம்பைத் தாங்கி வாழும் மக்கள் இருக்கின்ற இவ்வுலகத்திற்கு வருதலும் சைவமுறைப்படிமுடியாத தொன்றாம். எனவே, சிவனுடைய கட்டளையைப்பெற்ற ஆலாலசுந்தரர் தம்மைத்தாமே தற்கொலை செய்துகொண்டு வந்திருக்க வேண்டும். அல்லது ஆங்குள்ள சிவகணங்களாற் கொலை செய்யப்பட்டு உயிர் துறந்து வந்திருக்கவேண்டும். ஏனென்றால், சிவன் இவ்வுலகத்திற்கு, வரவேண்டிய வேலை ஏற்படும் போதெல்லாம், தம்முடைய உண்மை வடிவத்தை மறைத்துப் **பார்ப்பன வடிவந் தாங்கியே** வருவதாகவும், நிலத்திலே இறங்காமல் வான்வெளியி (ஆகாயத்தி)ல் நின்றபடியே தம் வேலையை முடித்துக் கொண்டு போகும்போது மட்டும் தம்முடைய உண்மை வடிவத்தில் வருவதாகவுஞ் சொல்லப்படுவதால் என்க. இனி, ஆலாலசுந்தரரின் பிறப்பு முறையை ஆதாரமாகக் கொண்டு, இதனால் மறுபிறப்புண்மை நிலைபெறுகின்ற தென எவருங் கருதி விடலாகாது. ஈண்டு நாம் ஆராய்வ தெல்லாம் புராணத்திற் போந்த கதையை உள்ளவாறு எடுத்து விளக்குவதேயன்றி, மறுபிறப்பு உண்டா? இல்லையா? என்பது பற்றி ஆராயப்புகுந்தோமில்லை. "இறந்தவன் மறுபடியும் பிறப்பதில்லை; ஆனால், அப்பிறப்பு அவனின் வேறுபட்டதன்று." "Dead man is not re-born; but, not different from him" என்ற உண்மையை வைத்து மறுபிறப்பைப் பற்றி ஈண்டாராயப் புகுந்தால் இது மிக விரியுமென்றஞ்சி விடுத்தனம்.

---

## சுந்தரர் தமிழனன்று

இனி, சுந்தரர் பார்ப்பனனல்லவென்றும், ஆதிசைவ குலத்திற் பிறந்த ஒரு தமிழனே என்றுஞ் சில ஆராய்ச்சி

யற்ற சைவர் கூறுகின்றனர். அவருரை பொய்யாம் என்பதனையும் ஈண்டு விளக்கிக் காட்டுவோம். கைலையி னின்றுங் கீழே வந்த ஆலாலசுந்தரர் திருநாவலூரிலுள்ள ஆதிசைவப் பார்ப்பனரான சடையனாருக்குப் பிள்ளை யாய்ப் பிறந்தார் என்று கதையிற் காணப்படுவதாற், சுந்தரரைத் தமிழன் என்று கொள்வது பொருந்தாது. "பண்டைக்காலத்தில் பார்ப்பார் என்ற சொல் தவத்தினால் தெய்வக் காட்சி பெற்றுப் பொது நன்மைக்காக இறைவனை வழிபடும் பெரியோர்களுக்கே உரியதாய் இருந்தது. பிள்ளையார், முருகன், சிவபிரான், அம்மை, திருமால், ஞாயிறு என்னும் அறு தெய்வங்களைப் பூசிப்போர் அறு வகைப் பார்ப்பனராய் விளங்கினர். ஆதலால் ஆசிரியர் தொல்காப்பியனார் 'அறுவகைப்பட்டபார்ப்பனப் பக்கமும்' என்றார்" என்று தோழர் **கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம். எல்.,** அவர்கள் தாம் எழுதிய 'தமிழர் சமயம்' எனும் நூலிற் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இக்கருத்துத் தமது காம இச்சையைத் தீர்த்துக்கொண்டு போதற்காக இவ்வுலகில் வந்து பிறந்த சுந்தரரைச் சாராது. அன்றியுந் திரு. பிள்ளையவர்கள் கூற்றுப்படி, சுந்தரர் தவத்தினால் தெய்வக் காட்சி பெற்றதாகவோ, பொது நன்மைக்காக இறைவனை வழிபட்டதாகவோ கொள்ளு தற்கும் கருவியில்லை. மற்றுச் சுந்தரர் பெற்ற தெய்வக் காட்சி காம இச்சையின்பாற் பட்டதாயும், அவர் சிவனைப் பாடியனவெல்லாம் பெரும்பாலுந் தந்நலங் கருதியன வாகவுமே காணப்படுகின்றன. இனி, திரு. பிள்ளை யவர்கள் கூறும் பிள்ளையார் முதலான அறுதெய்வங்களில் ஒரு தெய்வத்திற்காவது சுந்தரர் பூசாரியாக அமர்ந்து வேலை பார்த்ததாகவுந் தெரியவில்லை. **அன்றியும், பிள்ளையவர்கள் கூறும் அறுவகைத் தெய்வங்களில் எதுவும் பழந்தமிழர்களால் கடவுள் நிலையில் வைத்து வழிபடப்படவில்லை என்பதும், அச்சொல்லப்பட்ட கடவுளரின் வழிபாட்டு முறை எல்லாம், ஆரியர் நம் மிடையே வந்து கலந்தபின் ஏற்பட்ட ஒரு மூடக் கொள்கை என்பதும் ஈண்டு தமிழ்மக்கள் தங்கள் கருத்தில் இருத்தற்பாலனவாம்.** இனி, தொல்காப்பியர் கூறிய அறுவகைப்பட்ட பார்ப்பனர் பக்கம் என்பது,

அறுவகைத் தொழிலைக் குறிப்பதேயன்றி, அறுவகைக் கடவுளரின் வழிபாட்டைக் குறிப்பதன்று. எனவே, தொல்காப்பியர் கூறிப்போந்த அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கத்தில் சுந்தரர் எப்பக்கத்தையுஞ் சேர்ந்தவரல்லவென்பது அய்யுறவின்றித் துணியப்படும் என்க.

அன்றியும். சடையனார் என்னும் பார்ப்பனருக்குப் பிள்ளையாய்ப் பிறந்த சுந்தரரைத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அரசனாய் இருந்த நரசிங்க முனையர் வளர்த்தார் என்றுங் கதையிற் காணப்படுகின்றது. சுந்தரர் ஒரு பார்ப்பனனேயன்றித் தமிழனல்லவென்பது சுந்தரரை அவ்வரசன் வளர்த்த முறையால் நன்கு புலனாகின்றது. அரசன் அவரை வளர்த்த முறையையும் பெரியபுராணத்திற் கண்டபடியே இங்கே தருகின்றோம். “சுந்தரர் அரசரால் வளர்க்கப்படினும், தமது பார்ப்பன குலத்திற்கு (வருணத்திற்கு) உரிய ஒழுக்கத்தையே உடையவராகி வளர்ந்து, உரிய காலத்திலே பூணூற் சடங்கு (உபநயனம்) செய்யப் பெற்று, வேதங்களை ஓதி எல்லாக் கலைகளிலும் பெரும் புலமையுடையவராய்த், திருமணஞ் செய்யற்குரிய காலத்தை அடைந்தார்” என்பதாகும். சுந்தரர் ஒரு வடிகட்டிய ஆரியப் பார்ப்பனன் என்பது இதனால் யாதொரு அய்யுறவுமின்றித் துணியப்படுகின்றதன்றோ! அற்றேல், தமிழருக்கு உடன்பாடல்லாதனவான பார்ப்பன ஒழுக்கத்தையும், பூணூற் சடங்கையும், வேதம் ஓதுதலையும். ஒரு தமிழ் மன்னன்பால் வளர்ந்த ஒரு தமிழ் மகன் என்று சொல்லப்படுபவர் கையாண்டதாகக் கூறப்படுவது ஏனோ! இனி, ‘ஒழுக்கம்’ என்பது ‘நன்னடக்கை‘ என்றே பொருள் விரிதலால், தமிழரானோர் எல்லாரும் ஒழுக்கத்தை உயிரினும் ஓம்புதல் இன்றியமையாததெனக் கொள்பவர். ஆனால், ஈண்டு ஒழுக்கம் என்றது தமிழருக்கு உரிய ஒழுக்கத்தை அன்று. மற்றுத் தமிழர் தம்மைத் தீண்டக் கூடாது ; தமிழர் அட்ட உணவைத் தாம் தொட்டு உண்ணக் கூடாது. தமிழர் பார்க்கத் தாம் உண்ணக் கூடாது. என்பன போன்ற பார்ப்பன ஒழுக்கங்களையே அரசனால் வளர்க்கப்பெற்ற சுந்தரர் கையாண்டார். அதுபற்றியே பெரியபுராணஞ் செய்த சேக்கிழாரும் அதனைப்

**'பார்ப்பன ஒழுக்கம்'** என்று குறிப்பிடுவாராயினார். தமிழ்மக்களின் ஒழுக்கங்களுள் தலைசிறந்து நிற்பது, மக்களினத்தார் அனைவரும் உடனிருந்து உண்ணுதலாகிய சிறந்த கொள்கையாம் என்பதும் ஈண்டுக் கருதற்பாற்று.

இனி, பூணூற்சடங்கு நிகழ்த்துவதென்பதும் தமிழ் மக்கள்பால் இல்லாத ஒரு வழக்கமாம். இஞ்ஞான்றைத் தமிழர் சிலரும் பூணூற்சடங்கு செய்கின்றனர் என்றால், அது, ஆரியப்பார்ப்பனர் நம் நாட்டுக்கு வந்தபின், அவர் களைப் பார்த்துத் தாமும் அவர்போலாக விரும்பி மேற் கொண்ட பழக்கமேயாம். இதற்கு எடுத்துக்காட்டாக ஆரியக் கலப்பற்ற யாழ்பாணத்துத் தமிழர் எவரும் பூணூல் அணிவதில்லை என்பதை ஈண்டுக் குறிப்பிடுவது இன்றி யமையாததாகும். யாழ்பாணத்திலும் தட்டார், கொல்லர், தச்சர், குயவர், செட்டி முதலான வகுப்பினர் இருக் கின்றனர். ஆனால், அவர்களில் எவரும் இத்தமிழ்நாட்டி லுள்ள தட்டார், கொல்லர், தச்சர், குயவர், செட்டிமாரைப் போலப் பூணூல் அணிவதில்லை. எனவே, ஆரியப் பார்ப்பனர் தமிழ்நாட்டில் வந்து குடியேறுவதற்கு முன் வாழ்ந்துபோந்த பண்டைத் தமிழர் எவரும் பூணூல் அணிய வில்லை என்பது இதனால் நன்கு புலனாகின்றது. இனி, பண்டைக்காலத்தில் கோயிற்பூசை செய்வோராய் ஆதி சைவர் என்னும் பட்டந் தாங்கி நின்ற ஒரு பிரிவினரான தமிழ்மக்கள், தம்மைக் கோயிற்பூசை செய்வார் இவர் எனப் பிறர் அறிந்துகொள்வதற்கும், தூய்மையற்றவர் தம்மைத் தொடாது விலகிப் போதற்கும் ஆகப் பூணூல் அணிந்திருந்தனர் என்ற சில ஆராய்ச்சியாளர் கூற்றும் பொய் என்பதையுங் காட்டுவாம். கோயிற்பூசை செய் பவரும், தமிழ்மக்கட்குத் தீக்கைப்பேறு அளிப்பவர்களுமான ஆதிசைவக் குருக்கண்மார் வேதாரணியம் என்று சொல்லப் படும் மறைக்காட்டிலும், யாழ்ப்பாணத்திலும் இன்றும் இருக்கின்றனர். ஆனால், இவர்கள் எவரும் பூணூல் அணிவதில்லையாகையால், பண்டிருந்த ஆதிசைவக் குருக் கண்மார் பூணூல் அணிந்திருந்தனர் என்று கூறுவாருரையும் பொய்யாம் என்று ஒழிக.

இனி, அவ்வரசன்பால் வளர்ந்த சுந்தரர் வேதங்களை ஓதினார் என்று சொல்லப்படுவதையும் ஆராய்வாம். பண்டிருந்த தமிழ்மக்களால் ஓதப்பட்டு வந்த நான்மறைகள் மிக முற்பட்ட காலத்திலேயே அழிந்துபட்டனவென்றும், அவற்றிற் போந்த உண்மைகளையே திருவள்ளுவர் திருக்குறளாகப் பாடிவைத்தனர் என்றும், அதுவே தமிழ்மறை என்றும் ஆசிரியர் **மறைமலையடிகளார்** போன்ற ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். எனவே, சுந்தரர் தமிழ் மறையாகிய திருக்குறளை ஓதினார் என்று கொள்வதற்கு எவ்வித சான்றுகளுங் காணாமையாற், சுந்தரரால் ஓதப்பட்டவை இருக்கு, எசுர், சாமம், அதர்வம் என்று சொல்லப்படும் ஆரியவேதங்களேயாம் என்பது துணியப்படும். அன்றியும், நால்வர் பாடிய தேவார திருவாசங்களிலாதல், அல்லதவர்களுடைய வரலாறுகளைக் கூறுங் கதைகளிலாதல் திருவள்ளுவரைப்பற்றியோ அல்லதவரால் ஆக்கப்பெற்ற திருக்குறளைப் பற்றியோ குறிப்புக்கள்—மேற்கோள்கள் எதுவுங் காணப்படவில்லை. மற்று, இருக்கு முதலான ஆரிய வேதங்களைப்பற்றியும், அவற்றுட் பேசப்படும் வெறியாட்டு வேள்விகளைப் பற்றியும் குறிப்புக்களும் மேற்கோள்களுந் தாம் தேவார திருவாசகங்களிலும் அவர்தம் வரலாறுகளிலும் மலிந்து காணப்படுகின்றன. ஆனால், இச்சகம் பேசிப் பிச்சை வாங்கும் ஆரியர் மரபில் வந்தவரான சுந்தரர், கொடை வள்ளலாய் விளங்கிய பண்டைத் தமிழ் மன்னனான **பாரியை** மட்டுந் தமது தேவாரத்திற் குறித்துப் பாடியுள்ளார். அதுவுந் தமக்கு வேண்டிய பொருள் கிடையாத நிலையிற் சினம் மேலிட்டு, "கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப்பாரில்லை" பாடியுள்ளார் அவர் இங்ஙனம் பாடியது, தமிழ் மன்னனான பாரியின் பெருமையை எடுத்துக்காட்டுவதற்கன்று. மற்று, அவருக்கு வேண்டிய பொருள் கிடையாது சினமுற்று நின்ற நிலையிற்—யாரைக் கேட்பினும் பொருள் இல்லையென்றே சொல்லும் நிலை ஏற்பட்ட வெறுப்பினால் உளம் நொந்து நின்ற நிலையில்—தமது காமக்கிழத்தியான பரவையாரைக் களிப்படையச் செய்யமுடியாது கலங்கி நின்ற நிலையில்—பொன் வேண்டுமென்றால் இனித் திருடுவதைத் தவிர வேறு வழியில்லையென்று நெஞ்சம்

புண்பட்டு நின்ற நிலையில்—செங்கற்கற்கள் பொற்கற்களாக மாறியதைக் கண்ட களிப்புமிகுதியால் தம்மையும் மறந்து பாரி என்ற சொல்லைக் குறித்துப் பாடிவிட்டார் என்பதே உண்மையாகும். செங்கற்கள் பொற்கற்களான வரலாறு பின்னால் விளக்கப்படும்.

இனி, தமிழ்மறையாகிய திருக்குறள் கடைச்சங்க காலத்தில், திருவள்ளுவரால் இயற்றப்பட்டுப் பல நூற்றாண்டுகளாக எவராலுங் கையாளப்படாமல் ஏட்டுச் சுவடிகளில் மறைந்து கிடந்து, சுந்தரர் காலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்திலேயே நூல்வடிவாய்த் திகழ்ந்து, தமிழ் மக்களுள்ளும் எங்கோ ஆயிரத்துக்கொருவர் இருவரால் தான் கற்கப்பட்டு வந்தது—வருகின்றது. இன்றுங்கூடத் திருக்குறள் என்னும் ஒரு தமிழ்நூல் இருக்கிறதென்பதை அறியாத தமிழ்மக்கள் பல ஆயிரக்கணக்கானவர் இருக்கின்றனர் என்பது கண்கூடு. எனவே, சுந்தரர் ஓதிய தாகச் சொல்லப்படும் வேதங்கள் இருக்கு முதலான ஆரிய வேதங்களேயாம். ஆரிய வேதங்களாகிய இருக்கு முதலானவையே சைவசமயத்தவருக்கும் உரிய வேதங்களாம் என்பதற்கு ஈண்டொரு சான்று காட்டுதும். 'சைவப் பிரகாசனம்' என்னும் நூலுட், 'சைவச் சுருதி நிரூபணம்' என்ற தலைப்பின்கீழ் பின்வருமாறு கூறப்பட்டுளது.

" தோன்றாக் கடவுளாகிய சிவனால் உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு முதற் பெருஞ்சிருட்டித் துவக்க காலத்திலே செய்யப்பட்ட முதல் மறையானது, பொதுச் சிறப்பென்னும் வேறுபாடு பற்றி **'வேதம்' 'ஆகமம்'** என இரண்டு பெரும் பிரிவுகளாய் இருக்கும். அவற்றுள் வேதமானது, இருக்கு, எசுர், சாமம், அதர்வம் என நான்கு பிரிவுகளாம். ஆகமமானது காமிகம் முதல் வாதுளம் ஈறாகவுள்ள இருபத்தெட்டுப் பிரிவுகளாம். அச்சுருதியானது முதற்குருவாகிய சிவனால் முதலில் அறிவிக்கப்பட்டு.........வழி முறையாக இவ்வுலகில் (பூமியில்) வந்து வழங்குகின்றது.........அச்சுருதியில் ஏற்படுத்தப்பட்ட

சொற்பொருள் முறையே சைவசமயம் எனப் படும்.''

எனவே, தமிழ்நாட்டில் வழங்கிவருஞ் சைவசமயமானது இருக்கு முதலான ஆரிய வேதங்களையே அடிப்படை யாகக் கொண்டுள்ளதென்பதும், **தமிழ்மறையாகிய திருக் குறளுக்கும் சைவ சமயத்துக்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்பதும்** இதனால் நன்கு வலியுறுத்தல் காண்க. காணவே **இந்துமதத்தின் ஒரு பிரிவாகிய சைவசமயம் தமிழ்மக்களுக்கு உடன்பாடல்ல** வென்று ஒதுக்கித் தள்ளப்படும் என்று உணர்க. அன்றியும்,

"இருக்கு நான்மறை ஈசனையே தொழும்"

என்று தமிழ்மறையெனச் சில தமிழறியாச் சைவர்களாற் கொண்டாடப் பெறும் தேவாரத்திலும் சொல்லப்பட்டுளது. இங்ஙனமே இருக்கு முதலான ஆரிய வேதங்களைப்பற்றிய வாழ்த்துரைகள் பல தேவார திருவாசகங்களிற் காணக் கிடக்கின்றன. அவை தம்மை எல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இனி, ஆரியக்கொள்கையைப் பின்பற்ற எழுந்த தேவார திருவாசகங்களைத் தமிழ்நாட்டிலுள்ள கோயில் களில் ஓதுவதில்லை என்று கண்ணீர் வடிக்குஞ் சைவத் தமிழறிஞர்கள், தமிழ்மக்களின் அறிவை வளரச் செய்து அவர்களை மேனிலைக்கு உயர்த்தவல்ல திருக்குறளை யாவது, அதன் கருத்தோடொத்த மற்றைச் சங்க நூற் களையாவது கோயில்களிலும் பிற பொதுமன்றங்களிலும் ஓதி உணர்த்தலும், உணரச்செய்தலும் நிகழ்தல் வேண்டு மென்று ஒரு சிறிதும் நினைப்பதுமில்லை பேசுவதுமில்லை. இத்தகையினரிடத்துக் காணப்பெறுந் தமிழ்ப்பற்றும் தமிழர் பற்றும் இருந்தவாறு என்னே! என்னே! திருக்குறள் முதலான அறிவை வளர்க்குஞ் சங்கநூற்களைக் கோயில் களிலும் பிற பொது இடங்களிலும் ஓதும் வழக்கம் ஏற்பட்டால், மக்களிடத்துக் காணப்பெறும் கடவுளைப் பற்றிய மூடநம்பிக்கை அழிந்தொழியும் என்று இவர்கள்

அஞ்சுகின்றனர் போலும்! தமிழ்நாட்டிலுள்ள அறுபத்து மூவர் மடங்களையும் அவற்றில் நடைபெறும் குருபூசை விழாக்களையும் கணக்கிட்டுப் பார்க்கும்போது, திருவள்ளுவருக்கென்று ஒரு மடமாவது, அவர் நாளைக் கொண்டாடுவதற்கு ஒரு பொது இடமாவது இருக்கிறதென்று துணிவதற்கில்லை. இப்போது மூன்று நான்கு ஆண்டுகளாகச் சிற்சில இடங்களில் திருவள்ளுவர் நினைவுநாள் கொண்டாடப்படுகிறதென்றால், அது ஒரு சிலரால் ஒரு நாள் அல்லது இரண்டு நாள் கூட்டப்பெற்றுத் திருவள்ளுவரைப் பற்றி இரண்டொரு சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டு முடிகின்றதேயன்றி, அறுபத்துமூவர் மடங்களுக்கு இருப்பதுபோன்ற நிலையான இடவசதியும் பொருள் வளமும் இல்லையே! அவை அமையும்படி செய்ய முயல்வாரும் இல்லையே! முயன்றாலும் அம்முயற்சி கைகூடிவர ஆதரிப்பாரும் இல்லையே! குருபூசைக்கும் கோயில் மடங்கள் கட்டுவதற்கும் பொருட்குவியலை அள்ளிக் கொடுக்குஞ் செல்வக் கைகள், திருவள்ளுவரென்றால்—ஔவை என்றால்—நக்கீரர் என்றால்—தமிழ் என்றால்—தமிழர் என்றால் முடமாய் விடுகின்றனவே! இவ் இரங்கத்தக்க நிலை ஒழியும் நாள் எந்நாளோ! ஒழிந்து தமிழ்மக்கள் தங்கள் உண்மை நிலையை அறிந்து முன்னேறுவது எக்காலமோ! திருவள்ளுவர் குறளிலன்றோ நம் பண்டைத் தமிழரின் நன்னெறிகள் பொதிந்துகிடக்கின்றன! இது பற்றியன்றோ சங்கப்புலவருள் ஒருவரான கவுணியனார் என்பார் பின்வருமாறு சிறப்பித்துப் பேசினார்.

" சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மா மருந்து—**முந்திய**
**நன்னெறி நாமறிய** நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள் வெண்பா."

இவ்வரிய வெண்பாவினை மேல்நாட்டுப் பேரறிஞரான ரெவரண்டு. ஜி. யூ. போப், எம்.ஏ., டி.டி. (Rev : G.U. Pope, M.A,, D.D) அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலகெலாம் ஓதி உணர்ந்து பயன்பெறும்படி செய்தனர். அம்மொழிபெயர்ப்பும் பின்வருமாறு :—

"Sweet to the thought, sweet to the ear, sweet to the mouth
Great cure for two-fold deed's disease, is *Valluvar's*
Sweet *Kural-Venpa* verse with tongue right eloquent
Setforth, that we the way of good may know."

என்றிங்ஙனம் தமிழ்மறையாகிய திருக்குறளைப் பற்றிச் சிறப்புக்கூற வந்த மேனாட்டுப் பேரறிஞர்கள் அதனோடமையாது, ஆழ்ந்து அகன்ற அரிய கருத்துக்களைப் பொருத்தமான சொற்களிற் சுருக்கமாகக் கூறி விளக்கும் திருக்குறள் போன்ற நூல்களை யாத்தற்குப் பலவகையாலும் இடந்தரும் ஒப்பற்ற தனிமொழியாம் தமிழைப் பற்றியும் எவ்வளவு பெருமைப்படுத்திக் கூறியிருக்கின்றனர் என்பது,

"Nothing certainly in the whole compass of human language can equal the force and terseness of the sententious distichs in which the author conveys the lesson of wisdom he utters"

அதாவது, "இந்நூலாசிரியர் (திருவள்ளுவர்) தாம் கூறி வந்த அறவுரைகளை அழுத்தந் திருத்தமாகச் செய்யுள் நடையில் கூறுவதையொப்ப உள்ள மற்றொரு நூலை மக்களாய்ப் பிறந்தோர் பேசும் வேறு எந்த மொழியிலும் காணல் முடியாது" என்று ரெவரண்டு பர்சிவல் (*Rev: Percival*) என்ற மற்றொரு மேனாட்டுப் பேரறிஞர் கூறியதிலிருந்தும் அறியக்கிடக்கின்றது. ஆனால், நம் நாட்டுப் பேரறிஞர்களிற் பெரும்பாலார் என்ன செய்கின்றனர்? கோயில் கட்டவேண்டும், குடமுழுக்கு நிகழ்த்த வேண்டும், வேதபாடசாலை அமைக்கவேண்டும், தேவார திருவாசகங்களை ஓதவேண்டும், அறுபத்துமூவர் அடிச்சுவட்டைப் பின்பற்றவேண்டும் என்றெல்லாம் பேசிக் காலங்கழிப்பதைத்தான் நாம் கண்களாற் பார்க்கின்றோம்—காதுகளாலும் கேட்கின்றோம். **தேவார திருவாசகங்கள் எல்லாம் தமிழ்நாட்டில் ஆரியக் கொள்கையை நிலைநாட்டவே பாடப்பட்டன**வென்பதை இவர்களிற் பெரும்

பாலார் இன்னும் உணரவில்லை. உணர்ந்தாலும் வெளியே சொல்ல அஞ்சுகின்றனர். இவர்களுக்கிருக்கும் இவ்விரங்கத் தக்க அம்சம் விரைவில் மறைந்தாலன்றி, தமிழ்மக்கள் தங்கள் உண்மை நிலையை அறிந்து முன்னேறுவதென்பது எக்காலத்திலும் முடியாததொன்றாம். என்றிதுகாறும் கூறியதுகொண்டு, சுந்தரர் என்று பெரியபுராணத்துட் பேசப்படும் நம்பியாரூரர் என்பார் ஒரு ஆரியர் வழித் தோன்றிய பார்ப்பனனேயன்றித் தனித்தமிழர் மரபில் தோன்றிய ஒரு உண்மைத் தமிழனன்று என்பது அய்யுற வின்றித் துணியப்படுவதோடு, இஞ்ஞான்றைத் தமிழறி ஞரிற் பெரும்பாலார் தமிழையுந் தமிழ்நூற்களையும் போற்றுவதிற் பின் நிற்கின்றனர் என்பதும் உணரப்படும்.

---

# திருக்குறளும் அதிற் போந்த இடைச் செருகலும்

இனி, தமிழ்மறையாகிய திருக்குறளைப்பற்றியும் ஈண்டுக் குறிப்பிட நேர்ந்ததால், அதன் அமைப்பைப்பற்றியும் ஒருசிறிது ஆராய்ந்து பார்ப்பது இன்றியமையாததாய் இருக்கிறது. திருக்குறளிற் காணப்படும் முதல் அதிகார மான 'கடவுள் வாழ்த்து,' அந்நூலின் பெருமையையே குறைத்துவிட்டதென்று சொல்லலாம். ஏனென்றால், திருக்குறள், எச்சமயத்தையுந் தழுவாத ஒரு பொது நூலாகும். உலகிலுள்ள பலவகைப்பட்ட மக்களுக்கும் நடு நின்று அறிவுகொளுத்த எழுந்த ஒரு பொது நூலில், குறிப் பிட்ட ஒரு மதக்கடவுளைப்பற்றி வாழ்த்துக்கூறுவது அந் நூலுக்கு வேண்டற்பாலதன்று. உலகிற் காணப்படும் ஒவ்வொரு சமயத்தினரும் தத்தம் சமயமே சிறந்த தென்றும், அதிற் பேசப்படுங் கடவுளே உயர்ந்தவர் என்றும் பேசி வழக்காடும் வழக்கம் நமது நாட்டில் மதம் தோன்றிய காலம் முதல் இன்றுவரை இருந்துவருகின்றது. இஃதிங்ஙனமாக, மக்கள் அனைவர்க்கும் பொதுவாகையால்

அறிவை விளக்கவந்த திருவள்ளுவர், ஒரு குறிப்பிட்ட மதக் கடவுளுக்கு வாழ்த்துக்கூறி அவருக்கு உயர்வுகொடுத்தார் என்றால், அது எத்துணைப் பொருத்தமற்றதாய் இருக்கின்றது பாருங்கள்.

கடவுள் வாழ்த்தில் வரும் 'எண்குணத்தான்,' 'தாள்' என்ற சொற்கள் ஒரு மதக் கடவுளை, அதிலும் சிறப்பாக சைவவைணவ மதக் கடவுளரைக் குறிப்பனவேயன்றி, அவை எல்லா மதத்தினர்க்கும் ஒப்பமுடிந்த ஒரு மெய்ப் பொருளின் இயல்பைக் குறிப்பனவாகா. மெய்ப்பொருளுக்கு ஒரு வடிவமோ ஒரு பெயரோ இல்லை என்பது முதறிஞர் முடிபாகும். **மெய்ப்பொருள் என்றும், மெய்யுணர்வென்றும் பேசப்படுவது, மக்களிடத்துக் காணப்படும் பகுத்தறிவையேயாகும்.** ஆனால், ஈண்டுப் பேசப்படும் மெய்ப்பொருளுக்கு ஒரு வடிவம் இருப்பதாகவும், அதனால் அவ்வடிவத்தின் திருவடியை வழிபடவேண்டுமென்றும், அதற்குப் பெயர் இருப்பதாகவும், அதனால் அதற்கு எட்டுக் குணங்கள் உண்டென்றும் பேசப்படுகின்றது. அன்றியுந் திருக்குறளைப்பற்றி,

> ''ஒன்றே பொருள்எனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறுசமயத்தார்—**நன்றென
> எப்பாலவரும் இயைபவே** வள்ளுவனார்
> முப்பான் மொழிந்த மொழி.''

என்று சங்கப்புலவருள் ஒருவரான கல்லாடர் கூறிய கருத்திற்கும் இது மாறாய் இருக்கிறது. இனி, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற தமிழர் நெறிக்கும் இக்கடவுள் வாழ்த்திற் போந்த கருத்துக்கள் மாறுபட்டு நிற்கின்றன. ஆதலால், இதுவும் இதுபோன்ற பிறவும் மத மயக்கம் ஏற்பட்ட சிலரால் புகுத்தப்பட்ட இடைச் செருகலாகும். திருக்குறளிலுள்ள இடைச்செருகல்கள் எல்லாவற்றையும் ஈண்டெடுத்துக் காட்டி விளக்கப் புகின் அதுவே ஒரு நூலாய் முடியுமாகலானும், யாம் எடுத்துக்

கொண்ட பொருள் வேறாகலானும் திருக்குறளைப்பற்றி இன்னும் விரித்தெழுத முடியவில்லை. காலமும் பிற வசதிகளும் வாய்ப்பின் திருக்குறள் ஆராய்ச்சி என்ற ஒரு தனி நூல் எழுத முயல்வோம். என்றாலும், தமிழ் அறிவிலும் ஆராய்ச்சியிலும் பெரும்பொழுது கழிக்குந் தமிழறிஞர்கள், தங்களிடமுள்ள **மதப்பற்றுதலை ஒருபுறம் ஒதுக்கிவிட்டுத்** திருக்குறளுக்கு ஏற்பட்ட மாசைத் துடைத்து அதனை மன்பதையின் பொது நூலாக்கவேண்டுமென்பதும் எமது வேண்டுகோளாகும். ஆனால், சிலர் திருககுறளுக்குச் சிறப்புச் செய்வதாகக் கூறிக்கொண்டு, அதனையும் இதிகாச புராணங்களில் ஒன்றெனக் கருதும் முறையில், அதற்கு இழுக்குத் தேட முயல்கின்றனர். எடுத்துக் காட்டாக, **'திருக்குறட் குமரேச வெண்பா'** என்ற பெயருடன் திருக்குறளைப் பெருக்கி வெளியிட்ட ஒருவர், இராமாயண பாரதக் கதைகளையும், பதினெண் புராணக் கதைகளையும், வேறு பல வடமொழி நூல்களிலுள்ள கதைகளையும் ஒன்றும் விடாமல் ஆராய்ந்தெடுத்து, ஒரு குறளுக்கு ஒரு கதை விழுக்காடு 1330 ஆரியக கதைகளைத் தனித் தமிழ்மறையாகிய திருக்குறட் கருத்துக்களுக்கு ஒப்பிட்டுப் பேசி, திருக்குறளையும் ஆரிய புராணக் குப்பைகளில் ஒன்றாக்குவதில் தமது அறிவைப் பாழிற் பயன் படுத்தியுள்ளார். எனவே, இந்த முறையில் திருக் குறளுக்குப் பணி செய்வதைப் பார்க்கிலும் வாளா இருப்பதே, அத்தகையினர் தமிழுக்குந் தமிழருக்கும் செய்யும் உதவியாகும் என்பதையும் ஈண்டுக் குறிப்பிடுவது பெரிதும் இன்றியமையாததாய் இருக்கிறது. இனி, நாம் எடுத்துக்கொண்ட பொருண்மேற் செல்வாம்.

---

# சுந்தரர் திருமண வரலாறு

இனி, ஆலாலசுந்தரர் சிவ உலகத்தில் இருந்த ஞான்று ஆண்டிருந்த அனிந்திதை கமலினி என்ற இருபெண்கள் மேல் இச்சைகொண்ட காரணத்தால், அதனைத் தீர்த்துக்

கொள்வதற்காகச் சிவனால் அனுப்பப்பட்டார் என்பது உண்மையானால், அதற்குமாறாகச் சுந்தரருக்கும் வேறொரு பெண்ணுக்குந் திருமண நிகழ்ச்சி ஏற்பட்டதென்பது பொய்யாகுமன்றோ! ஆனால், ஆலாலசுந்தரர் கைலையி னின்றும் நீங்கி இவ்வுலகிற்கு வருங்காலத்திற் சிவனை, நோக்கி, 'மயக்கம் பொருந்திய மக்கட் பிறப்பை எடுத்து, யான் செய்ய வேண்டியதும் நீக்க வேண்டியதும் இன்னின்னவை என்று அறியாது உலக வாழ்க்கையிலே கிடந்து மயங்கும் போது, நீர் வெளிப்பட்டு வந்து அடியேனைத் தடுத்து ஆட்கொள்ள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டபடி, சிவன் வந்து தடுத்தாட்கொண்டார் என்பதை ஒப்புக் கொண்டு பார்த்தாலும், அந்நிகழ்ச்சி தமிழர் நெறிக்கு மாறாகவே இருக்கிறது. எப்படியென்றால், சுந்தரருக்கு மனைவியாகப் பேசப்பட்ட சடங்கவி என்னும் பார்ப்பனனுடைய புதல்வி தனது மணந்தவிர்ந்ததினாலே சுந்தரரையே நினைந்து கொண்டிருந்து, சிலகாலஞ் சென்ற பின் இறந்துவிட்டதாகக் கதையிற் காணப்படுகின்றது.

ஆனால், இந்நிகழ்ச்சி ஆரியர் கொள்கைப்படி ஒப்புக் கொள்ளக் கூடியதே. என்றாலும், ஒரு பெண்ணின் இன்ப வாழ்க்கையைக் கெடுத்து, அவளுக்குக் கவலை என்னுந் தாங்கமுடியாத கொடிய நோய் உண்டாகி, அதனால் அப்பெண் இறக்கும்படி செய்தது பொறுத்திடுதற்கரிய ஒரு பெருங் குற்றமாகும். அன்றியும், சுந்தரரைத் தடுத்தாள வந்த சிவனாவது அப்பெண்ணின் நிலையை உணர்ந்து, வேறு யாராவது அவளை எடுத்தாளும்படி செய்தாரில்லை. சுந்தரர் உலக வாழ்க்கையில் நின்று மயங்குவதை அறிந்து அவரைத் தடுத்தாட்கொள்ள வந்த சிவன், சுந்தரருக்கு மனைவியாகப் பேசப்பட்ட அப்பெண் உலக வாழ்க்கையிற் கிடந்து தயங்கி மடியும்படி விட்டது ஏனோ? சிவனை விருப்பு வெறுப்பற்றவராகப் பேசுஞ் சைவர் இதற்கென்ன விடையிறுப்பரோ? இந்நிகழ்ச்சி ஆணுக்கு ஒரு முறை பெண்ணுக்கு ஒரு முறை (நீதி) என்ற ஆரியர் கொள்கை யாகிய இந்து சட்டத்தை (Hindu Law) நிலைநாட்டுகின்ற தன்றோ! எனவே, **பெரிய புராணம் தமிழர் நெறிக்கு மாறுபட்டதென்பது** இவ்வொரு சான்று கொண்டே

வலியுறுகின்றதென்றாலும், பெரியபுராணத்தைத் தங்களதாக எண்ணி வாழுந் தமிழறிஞர் சிலர் இன்னும் இருக்கின்றனராதலாலும், இது போன்ற சான்றுகள் பெரிய புராணத்துள் இன்னும்பல காணப்படுகின்றனவாதலாலும், அவற்றையெல்லாம் ஆங்காங்கு எடுத்துக்காட்டி விளக்கினாலன்றி அத்தகையினரைத் திருத்துதல் முடியாது. ஆகவே, அன்பர்கள் இந்நூற் கருத்துக்களைப் பொறுமையுடனும், பகுத்தறிவுடனுஞ், சங்கந் தழுவிய நூலறிவுடனும், தமிழன் என்ற உணர்ச்சியுடனும் ஆராய்ந்து, உண்மை காணுவது இன்றியமையாததாகும்.

---

## தடுத்தாட்கொண்ட வரலாறு

இனி, சுந்தரர் திருமணக் கோலத்தோடு மணப்பந்தரில் இருந்தபோது, சிவன் ஒரு கிழப்பார்ப்பன வடிவந் தாங்கிச் சென்று சுந்தரரைத் தடுத்தாட்கொண்டதாகக் கூறப்படும் பகுதியை ஆராய்வாம். அங்கே பார்ப்பன வடிவந் தாங்கி வந்தவன் ஒரு ஆரியப் பார்ப்பனனேயன்றிச் கடவுள் அல்லன் என்பது கதையின் போக்கால் நன்கு புலனாகின்றது. எப்படியென்றால், சுந்தரர் தமக்கு அடிமை என்பதை நிலைநாட்டுவதற்காக முதலில் அந்தப்பார்ப்பனன் ஒரு ஓலையைக் காண்பித்து, 'உனது பாட்டன் எழுதிக் கொடுத்த அடிமை ஓலை இதுவே' என்று கூறியுள்ளான்' ஆனால், அந்த ஓலை சுந்தரரால் கிழித்தெறியப்பட்டது. பின்னர், திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பார்ப்பனர் முன்னிலையிற் சென்று அந்த வழக்கை முறையிட்டபோது, சுந்தரர் கிழித்தெறிந்த ஓலை, மூலவோலையைப் பார்த்து எழுதிய படியோலை என்றும்' மூலவோலை தம்மிடம் இருக்கிறதென்றுங் காட்டியுள்ளான். அன்றியும், அந்த அடிமை ஓலையிற் சாட்சியாகக் கையெழுத்திட்டவர்கள் தங்கள் கையெழுத்தென்றே ஒப்புக் கொண்டதாகவுங் கதையிற் காணப்படுகின்றது. ஒரு மூலவோலைக்குப் படி (நகல்) எடுப்பது வழக்கமாகையால், அதனை ஒருவாறு

ஒப்புக்கொண்டாலும், அந்த ஓலையிற் சாட்சியாகக் கையெழுத்திட்டவர்கள் எல்லாருந் தங்கள் தங்கள் கையெழுத்தென்றே ஒப்புக்கொண்டார்கள் என்பதை யாராவது நம்ப முடியுமா? அங்கே பார்ப்பன வடிவந் தாங்கி வந்த சிவன் சுந்தரரிடங் காண்பித்த அடிமை ஓலை, உண்மையாகவே சுந்தரரின் பாட்டன் எழுதிக் கொடுத்த ஓலை அல்லவென்பதும், அது, சுந்தரரைத் தடுத்தாட் கொள்ளப் பார்ப்பன வடிவந் தாங்கி வந்த சிவன் காண்பித்த ஒரு பொய்யோலை என்பதுங் கதையாற் புலனாகின்றது. ஒரு பொய்யோலையிலுள்ள கையெழுத்துக்களும் பொய்க் கையெழுத்துக்களாகுமேயன்றி, அவை மெய்யான கையெழுத்துக்களாக ஆவது முடியாதன்றோ! அன்றியும், பார்ப்பன வேடந் தாங்கி வந்தவரை, அங்கிருந்த அனைவரும் அதற்குமுன் அறியாதவர்களாய், அவருடைய இருப்பிடத்தையுங் கேட்டதாகச் சொல்லப்படுகின்றது. இங்ஙனம் முன்பின் அறியாத ஒருவர் காட்டிய ஓலையில் அங்குள்ள சிலரின் சாட்சிக் கைகயழுத்துக்கள் இருந்தனவென்றால், அதனை விடப் பெரும் பித்தலாட்டம் வேறொன்றுளதோ? அல்லதூஉம், அங்ஙனம் கையெழுத்திட்டவர்கள், எந்த இடத்தில்-எந்த ஆண்டில்-யார் முன்னிலையில், ஆரூரன் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு வழிஅடிமை செய்ய ஒப்புக்கொண்டு எழுதப்பட்ட ஓலையிற் கையெழுத்திட்டார்கள் என்பதாவது தெரிய வேண்டுமன்றோ! அந்த ஓலையிற் காணப்பட்ட கையெழுத்துக்கள் எல்லாம், அவற்றை ஒப்புக் கொண்டவர்களின் கையெழுத்துக்கள் போன்றவையாய் இருந்தன என்று சொன்னால், அதனை ஒருவாறு கள்ளக் கையெழுத்தென்ற முறையில் நம்பமுடியுமேயன்றிப், பொய்யோலையிற் காணப்பட்ட கையெழுத்துக்களை உண்மையானகையெழுத்துக்கள் என்று எவரும் நம்பமாட்டார்கள். ஆயின், இதன் உண்மை தான் யாதோ வெனிற், கூறுதும்.

சுந்தரர், கல்வியறிவு கேள்விகளில் தேர்ச்சி பெற்றவராயும், பாக்கள் இயற்றுவதில் ஆற்றலுள்ளவராயும் இருந்தமை கண்ட அக்காலத்துப் பார்ப்பனர் தங்கள் பிழைப்புக்கு அரண் செய்துகொள்ள எண்ணினார்கள்.

சுந்தரன் முறைப்படி திருமணஞ் செய்து கொண்டால் தமக்கு உதவான் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். எனவே, அவர்கள் ஒரு சூழ்ச்சி செய்தார்கள். அதாவது, சுந்தரனைத் தமக்கு உதவியாக வைத்துக்கொள்ள வேண்டு மென்று முன்கூட்டியே ஏற்பாடுகள் செய்து வைத்திருந்த திருவெண்ணெய் நல்லூர்ப் பார்ப்பனர்கள், தம்மவருள் ஆண்டில் முதிர்ந்த ஒரு கிழப்பார்ப்பனனைச் சுந்தரரின் மணப்பந்தருக்கு அனுப்பி வைத்தார்கள். அங்ஙனஞ் சென்ற பார்ப்பனனே சுந்தரருடன் வழக்காடி வென்ற வனாவன். அற்றேல், அந்த அடிமை ஓலையிற் கையெழுத் திட்டவர்கள் தங்கள் கையெழுத்தென்று ஒப்புக்கொண்ட தற்குக் காரணம் வேறெதுவும் இல்லையன்றோ! பாடல் பெற்ற கோயில்களுக்குத் தனி மதிப்புஞ் செல்வாக்கும் வருவாய் மிகுதியும் இருப்பதைக் கண்டே, அந்தப் பார்ப் பனர்கள் பாடவல்ல சுந்தரரைத் தங்களுக்கு அடிமையாக்கிக் கொண்டனர். இனி, சுந்தரரை அடிமை கொண்ட பார்ப் பனன், அவருக்கு வேறு வேலை இடாமற் கோயில்கள் தோறுஞ் சென்று சிவனைப் புகழ்ந்தும் வியந்தும் பாடும் படியே கட்டளையிட்டான். யாம் கூறும் இவ்வுண்மை, சுந்தரர் தம் வழக்கில் தோற்று அடிமையானவுடன், திருவெண்ணெய் நலலூரிற் கோயில் கொண்டிருந்த சிவன் பேரில், 'பித்தா பிறைசூடி' என்ற தேவாரத்தைப் பாடும்படி சுந்தரரை அடிமை கொண்ட அந்தப் பார்ப்பனனே அடி யெடுத்துக் கொடுத்துப் பாடும்படி செய்ததால் நன்கு வலியுறுதல் காண்க.

இங்ஙனமே தமிழனாகிய திருநாவுக்கரசரையும் சிவன் பேரிற் பதிகங்கள் பாடும்படி பார்ப்பனர் கட்டாயப்படுத்திய உண்மைகளை யாம் எழுதிய 'இந்து மதமுந் தமிழரும்' என்னும் நூலிற் குறிப்பிட்டுளோம். அந்த உண்மைகளை அங்கே கண்டுகொள்க.

# சிவன் கடவுளன்று, ஒரு புலவரே!

இனி, சுந்தரர் 'பித்தா பிறைசூடி' என்பதை அடியாகக் கொண்டு பதிகம் பாடி முடிந்த உடனே, சிவன் அவரை நோக்கி, 'தொண்டனே, நீ இன்னும் நம்முடைய புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடு' என்று கட்டளை யிட்டாராம். சிவன் விருப்பு வெறுப்பு அற்றவர் என்று சொல்லப்படுகிறது. ஆனால், பெரிய புராணத்துட் பேசப் படுஞ் சிவன் விருப்பு வெறுப்பற்றவராகத் தெரியவில்லை. அவர், பிறர் தம்மைப் புகழ்வதில் பெருவிருப்பங்கொண்டவர் என்பது மேலே குறிப்பிட்ட அவர் வாய்மொழியாலேயே பெறப்படுகின்றது. சிற்றறிவுடைய மக்களினத்தாலுங்கூடப் பெரும்பாலார், பிறர் தம்மைப் புகழ்வதை விரும்பாதபோது, பேரறிவுடைய விருப்பு வெறுப்பற்ற சிவன் அதனை விரும்பினார் என்றால், அவரை மக்களைப் பார்க்கினும் உயர்ந்த ஒரு பெரும் பொருளாக எண்ணிக் கடவுள் நிலையில் வைத்து வழிபடுவது, நெற்றிக் கண்ணைக் கண்டும் அஞ்சாத ஒரு வீரத் தமிழன் மரபில் வந்த உண்மைத் தமிழ்மக்களுக்கு உடன்பாடல்ல வென்று ஒதுக்கித் தள்ளுதலே செயற்பாலதாம்.

அன்றியும், சிவன் என்னும் பெயரையுடைய ஒருவர் முதற்சங்கத்தின் தலைவராய் இருந்து தமிழாய்ந்தார் என்றுஞ் சொல்லப்படுவதால், அவர் ஒரு தமிழ்ப் புலவர் என்பது பெறப்படுகின்றது. அதோடு, பாண்டிய மன்னன் ஒருவனுடைய மகளைச் சிவன் திருமணஞ் செய்து கொண்டார் என்றும் ஒரு வரலாறுங் கேட்கப்படுவதால், தமிழறிவிற் சிறந்து விளங்கிப் பெரும் புலவராய்த் திகழ்ந்த சிவன் என்பானுக்குப் பாண்டிய மன்னன் தன் மகளைக் கொடுத்து அவரைச் சிறப்பித்தான் என்பதும் பண்டைத் தமிழர் நெறிப்படி கொளற்பாலதே. பாண்டிய மன்னன் அவையிற் பெரும் புலவராய்த் திகழ்ந்த சிவன், அம்மன்னன் மகளைக் காதலித்து மணந்து கொண்டான் என்பதும் பண்டைத் தமிழர் நாகரிக முறைப்படி தவறாகாது.

பண்டைத் தமிழர் எல்லாருங் காதல் மணத்தையே சிறந்த மணமாகக் கொண்டிருந்தனர் என்பது சங்கநூற்களாற் புலனாகின்றது. எனவே, சிவன் என்பவர் மத மயக்க முள்ள சிலர் கருதுவது போல முழுமுதற் கடவுள் அல்லர் என்பதும், அவர் ஒரு தமிழ்ப் புலவரே என்பதும் இவை கொண்டு துணியப்படும். என்றாலும் இன்னுஞ் சில சான்றுகள் காட்டுவாம்.

---

# நெற்றிக்கண் வரலாறு

இனி, சிவனுக்கு நெற்றிக்கண் ஒன்று உண்டென்றுங் கூறப்படுகின்றது. இவ்வுண்மை, 'கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோட மர்ந்து' என்றதனாலும், 'நெற்றிக் கண்ணைக் காட்டினுங் குற்றங் குற்றமே' என்றதனாலும், 'முக்கட் செல்வர்' என்றதனாலும் பெறப்படும். ஆனால், இதன் உண்மை வரலாறு யாதெனிற், கூறுதும். லெமூரியா (Lmuria) என்று மேலைநாட்டினரால் அழைக்கப்படுவதும், பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே கடலாற் கொள்ளை கொள்ளப்பட்டதும், முதற் சங்கம் இருந்ததுமான பழந்தமிழ் நாட்டில் வாழ்ந்து போந்த மக்களில் ஒரு வகையார், பன்னிரண்டு அல்லது பதினைந்து அடி உயரமுள்ளவராயும், தலையின் முற்பக்கத்தில் அதாவது தசைக் கோளம் (Plneal gland) உள்ள இடத்திற் **கண் போன்ற உறுப்பும்** உருண்டையான நெற்றியும் உடையவராயும் இருந்தனர் என்று **ஸ்காற் எலியற்** (Scot Lliott) என்பார் தாம் எழுதிய 'Lost Lemuria' என்ற நூலிற் குறிப்பிட்டுள்ளார். எனவே, நெற்றியிற் கண்போன்ற உறுப்பைப் பெற்றிருந்த ஒருவகை மக்களினத்தாரில் ஒருவரே சிவன் என்ற பெயருடன்' அங்கிருந்த முதற்சங்கத்திற்குத தலைவராய் இருந்து தமிழாய்ந்தவர் என்பதும் இவ்வாராய்ச்சியாற் பெறப்படும். படவே, சிவன் ஒரு கடவுள் அல்ல என்ற உண்மை நன்கு வலியுறுதல் காண்க.

ஆகவே, பண்டைத் தமிழர், தமக்கு முன்னிருந்த அறிவியற் புலவர்களைத் தங்களினும் மேலானவர்களாக எண்ணி, அவர்களுக்கு ஏற்ற மதிப்புக் கொடுத்து வந்த முறையானது நாளடைவிற் கடவுள் வழிபாடாக மாறியது. பண்டைத் தமிழ்மக்கள், பொதுவாகத் தமது தாய் தந்தையரையும் பெரியோர்களையுங் குறித்து நினைவு நாட்கள் கொண்டாடி வந்தனராயினும், முதற் சங்கத்திற்கு தலைவனாய் இருந்த சிவன் மற்றைஎல்லாரைப் பார்க்கினும் அறிவாற்றலிற் சிறந்து புகழ்பெற விளங்கினமையாற், சிறப்பாக எல்லாரும் அவரைக் கொண்டாடிவருவாராயினர். அக்கொண்டாட்டத்தின் பயனானது, ஆரியர் நம்மிடையே வந்து கலந்த பின்னர், அவரை முக்கண் அல்லது நெற்றிக் கண் கடவுளாக்கியது.

இனி, நக்கீரர் பேசிய நெற்றிக்கண் சிவனும் யாம் மேலே கூறிய தமிழ்ப் புலவரே யாவர். எப்படியென்றால், நக்கீரர் என்பார் கடைச் சங்கத்திற்குத் தலைவனாய் இருந்தவர். அக்காலத்தில், நக்கீரருடன் வழக்கா (வாதா)ட வந்த ஒரு பார்ப்பனப் புலவர் தம்பக்கந் தோற்கவே, தமக்கு நெற்றிக்கண் உளதாகக் காட்டி, நக்கீரரை ஏமாற்றித் தம் பக்கம் வெல்லப் பார்த்தார். நெற்றிக்கண் பெற்றிருந்த ஒருவனை மக்களினத்தாரில் ஒருவரான சிவன் என்பான் முதற்சங்கத் தலைவனாய் இருந்து தமிழ் வளர்த்தவனாதலால், அதற்குப் பிற்பட்ட இடைச்சங்கத்தாரும் கடைச் சங்கத்தாரும் அவரை ஒரு பெரியவராக எண்ணி, மதிப்புக் கொடுத்து வந்தனர். அன்றியும், தமக்கு முற்பட்ட பெரியோர்களுக்கு மதிப்புக் கொடுத்துப் போற்றுவதும் தமிழர் அனைவர்க்கும் இயற்கையாய அமைந்த சிறப்பாகும். எனவே, இத்தகைய நற்குணங்கள் தமிழர்களிடத்து அமைந்திருப்பதை அறிந்தே அந்தப் பார்ப்பனப் புலவன் ஒரு சூழ்ச்சி செய்தான். அதாவது, தாம் கொண்டுபோகும் வழக்கு (கூந்தலுக்கு இயற்கையான நறுமணம் உண்டென்பது) ஒருவேளை தோல்வியுற்றால், தமக்கு நெற்றிக் கண் இருப்பதாகக் காட்டியாவது தம்பக்கம் வென்று வரலாம் என்று முன்கூட்டி எண்ணியே. தமது நெற்றியில் ஒரு பொய்க்கண்ணை அமைத்து, அதனைத் தலைப்பாகை

யினால் மறைத்துக் கொண்டு வந்து நக்கீரருடன் வழக்காடினான். முதலில் தம்பக்கந் தோற்கவே, தமக்கு நெற்றிக்கண் இருப்பதாகக் காட்டித் தம்வழக்கை வெல்லப் பார்த்தான். ஆனால், தமிழ்வீரனான நக்கீரர் நெற்றிக் கண்ணைக் கண்டு அஞ்சினாரா? இல்லை, இல்லை! **'நெற்றிக் கண்ணைக் காட்டினுங் குற்றங் குற்றமே'** என்ற வீரமொழியைக் கூறி வென்றார்.

எனவே, இதனாற் பெறப்படுவது என்னவென்றால், குற்றம் புரிபவர் எவராய் இருந்தாலும், அவர் கூறுவன வற்றைத் தமிழ்மக்கள் ஒப்புக்கொண்டு அவரடி பணியார் என்பதேயாம். இக்காலத்தில் கடவுள் பேராற் செய்யப் படுங் குற்றங்களைக் கண்டுபிடித்துக் கூறுவோரைக் குறை கூறித் தூற்றித் திரியும் புலவரைப் போலன்றி, அக் காலத்துப் புலவரெல்லாரும் உண்மையை நிலைநாட்டி மக்கள் பகுத்தறிவோடும் மெய்யுணர்வோடும் வாழும்படி செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருந்தனர் என்பதும் ஊன்றி நோக்கி உணரற் பாலதாம்.

இனி, பஞ்சாப் மாகாணத்தில் **சர் ஜான் மார்ஷல்** என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட 12-வது எண்ணுள்ள ஒரு சிலைக்கு மூன்று முகங்களும்—தலையிற் கொம்புகளும்—தலைப்பாகையும் இருப்பதோடு அச்சிலையிற் காணப்படும் ஆண்குறி மேலே நோக்கியபடியும் நிற்கிறதாம். ஆதலால், அந்தச் சிலை, சிவன் யோகத்தில் இருப்பதைக் குறிப்பிடுவ தாகவும், ஆகவே, அது தமிழர் கடவுளான 'சிவன்' என்பதற்குத் தடையில்லையென்றும் நமது தமிழ் ஆராய்ச்சி யாளர் சிலர் கூறுகின்றனர். ஆனால், தமிழர் கடவுள் என்று கூறப்படுஞ் சிவன் எதற்காக யோகம் புரிகிறார் என்பதனையும், முழு முதற் பெருங்கடவுள் என்று சொல்லப்படுஞ் சிவன், தமக்கு மேலான வேறு எந்தக் கடவுளை நோக்கித் தவங் கிடக்கிறார் என்பதனையும், சிவன் யோகஞ் செய்யும்பொழுது தம்முடைய ஆண்குறியை எதற்காக மேல்நோக்கி நிற்கும்படி செய்திருக்கிறார் என்பதனையும், அவருடைய தலையில் விலங்குகளுக்கு இருப்பதுபோன்ற கொம்புகளும்—மக்கள் அணிந்து

கொள்வதுபோன்ற தலைப்பாகையும் — இயற்கைக்கு மாறான மூன்று முகங்களும் எதற்காக இருக்கின்றன என்பதனையும் நமது ஆராய்ச்சியாளர் ஆராய்ந்து பார்ப்பதில்லை. என்றாலும், இத்தகைய இழிந்த முறையிலுள்ள அருவருக்கத்தக்க ஒரு வடிவத்தைத் தங்கள் கடவுள் என்று கூறுவதற்கு மட்டுஞ் சமயத்துறைத் தலைவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் தமிழ் ஆராய்ச்சியாளர் ஒரு சிறிதும் பின்வாங்குவதில்லை. எனவே, மெய்யுணர்வும் பகுத்துணரும் ஆற்றலும் உள்ள எவரும் மேலே குறிப்பிட்ட இயல்புகளோடு கூடிய சிவனைத் தங்கள் கடவுள் என்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது ஒரு தலை.

---

# சிவன் கடவுளான வரலாறு

இனி, இஞ்ஞான்றை மேல்நாட்டவர், தம்மவருள் வீரராயும் புலவராயுந் திகழ்ந்து பொது நன்மை செய்பவர்க்கு, பிறர், அவர்தம் வீரச்செயலையும் புலமைத் திறனையும் அறிந்து, இவரும் அவர்போலாக வேண்டுமென்ற பெருநோக்கோடு பொது இடங்களிற் சிலைநாட்டி வைப்பதுபோலவே ; அக்காலத்துத் தமிழ்மக்களும், தம்மவருள் வீரராயும் புலவராயுந் திகழ்ந்து பொதுநன்மை செய்தோருக்குச் சிலைநாட்டி வைத்து, அதனைப் பார்ப்பவருக்கு வீர உணர்ச்சியும், புலமை விழைவும் உண்டாகுமாறு செய்துவந்தனர். ஆனால், அத்தகைய சிறந்த முறை நம் நாட்டில் நீண்டநாள் நிலைபெறவில்லை. என்றாலும், ஆரியக்கொடுமையைக் கண்டு விழிப்படைந்த இவ்விருபதாம் நூற்றாண்டில், கி.பி. 1937-ல் சென்னை மண்டில அரசியற் பொறுப்பை ஏற்று முதலமைச்சராய்ச் சிலகாலம் வேலை பார்த்துவந்த **பார்ப்பனர்** ஒருவர், தமிழ்மக்களின் மொழி—கலை—நாகரிகம் முதலியவற்றை அழித்துத் தமிழ் நாட்டையும் ஆரியமயமாக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு, வடமொழியின் தொடர்பான இந்திமொழியைத் தமிழ்மக்கள் அனைவரும் கட்டாய பாடமாகப் படித்தல்

வேண்டுமென்ற ஒரு சட்டத்தை உண்டாக்கினார். அதன் பயனாக ஆயிரக்கணக்கான தமிழ்மக்கள் சிறை புகுந்து தமிழ்மொழியைக் காப்பாற்ற நேர்ந்தது. அங்ஙனஞ் சிறை புகுந்தவர்களில் **தாலமுத்து, நடராசன்** என்ற இரு வீரத் தமிழ் இளைஞர்கள் சிறைக்கோட்டத்திலே தம் உயிரை நீத்தனர். அவ்வீரர்களின் தீரச் செயலைத் தமிழ் மக்களுக்கும் பிறர்க்கும் நினைவூட்டுமுகத்தான், சென்னைப் பட்டினத்தில் நினைவுக் கற்கள் நாட்டப்பெற்றுள்ளன. அவ்வீரர்களின் நினைவுக் கற்கள் தமிழ்மக்களுக்கு வீர உணர்ச்சியை உண்டாக்கக் கூடியனவாய் இருப்பதால், அவ்விருவரின் நினைவு நாட்களை ஆண்டுதோறுங் கொண்டாடுதல் தமிழ்மக்கள் கடனாம்.

இனி, நாம் மேலே எடுத்துக்காட்டியபடி, பண்டைத் தமிழ்மக்களால் நாட்டப்பெற்ற நினைவுக்கற்கள் எல்லாம், ஆரியர் நம் நாட்டுக்கு வந்தபின் கடவுளராக மாற்றப் பட்டன. அதனால், தமிழ்மக்களிடையே முன் இல்லாத ஒரு அச்ச உணர்ச்சியையும் உண்டாக்கினர். எப்படி யென்றால், தமிழ்நாட்டுக்கு வந்த ஆரியக் கூத்தாடிகள், அச்சிலைகளின் முன் நின்றுகொண்டு, தங்களுக்கு மருள் (ஆவேசம்) வந்ததுபோற் கற்பனை செய்து, 'இந்த இடத்திற் கடவுட் குடிகொண்டுள்ளார், ஆகையால் இங்கே ஒரு கோயில் கட்டவேண்டும், அதற்கு இன்னின்ன முறையிற் பூசை செய்தல் வேண்டும், இது நாம் சொல்ல வில்லை, கடவுளின் ஆணை,' என்றெல்லாம் பிதற்றிப் பேய்கொண்டவர்போல் ஆடி, பேர்கொண்ட பார்ப்பனராகி, அக்காலத்திலிருந்த அரசர் பெருமக்களை மிக எளிதில் ஏமாற்றி, அந்த இடங்களிற் கோயில்கள் எழுப்பும்படி செய்தார்கள். அந்தக் காலத்தில், தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும், சிந்து—சாவா—சுமத்திரா முதலான ஊர் களிலும் சங்கப்புலவரான சிவனின் நினைவுக் கல்லும், வேறு தமிழ்ப் பெரியார்களின் நினைவுக் கற்களும் நாட்டப் பெற்றிருந்தன. தமிழ்நாடு மற்றை நாடுகளைப்போலன்றி, செல்வமிக்க நாடாயும், விருந்தினரை வரவேற்று மகிழ்விக் கும் இயல்பு வாய்ந்த மக்களையுடைய நாடாயும் இருந்த தால், ஆரியர்கள் தங்கள் எண்ணத்தை மிக எளிதாக நிறை

வேற்றிக்கொண்டார்கள். ஆரியர் இங்ஙனஞ் செய்த சூழ்ச்சியானது, தமிழ்நாட்டிலிருந்த நினைவுக்கற்களி லெல்லாம் கடவுளர் இருக்கின்றனர் என்ற ஒரு தப்பான எண்ணத்தைத் தமிழ்நாடெங்கும் காட்டுத் தீ போற் பரவச் செய்தது. அதனால், அக்கற்சிலைகள் எல்லாம் மிக விரைவிற் கடவுளராக்கப்பட்டு, அந்தந்த இடங்களிற் பெரும் பெருங் கோயில்கள் எழுப்பப்பட்டன. தமிழ் நாட்டிற் காணப்படுவன போன்ற பெரிய பெரிய கோயில் களை, இவ்வுலகின் வேறெப் பகுதியிலும் காண்டல் இயலாது. இது, அக்காலத் தமிழ்நாட்டின் செல்வ மிகுதியை நன்கு காட்டுகின்றது. அதோடு, அக்காலத் தமிழ் அரசரின் ஏமாந்த இயல்பையும் இக்கோயில்கள் ஒரு புடை விளக்கிக் காட்டுகின்றன.

இனி, ஹாரப்பா—மோகஞ்சோ—தாரோ முதலான இடங்களில் இப்போது கண்டெடுக்கப்பட்டதாகச் சொல்லப் படுஞ் சிவலிங்கங்களும் முதற்சங்கத் தலைவனாகிய சிவன் என்னுந் தமிழ்ப் புலவனைக் குறிக்கும் நினைவுக்கற்களாய் இருக்கலாம். அல்லது, ஆட்டுக்கல்லும் அதன் குளவிக் கல்லும் போன்ற வேறு வடிவங்களாய் இருக்கலாம். எப்படியென்றால், இக்காலத்திற்கூடப் பல கிராமங்களில், மாடுகளுக்குப் பருத்திக்கொட்டை முதலியன அரைப்பதற் காகப் பெரிய ஆட்டுக்கல்லும் அதற்கேற்ற குளவிக்கல்லும் வைத்திருப்பதைக் காணலாம். இங்ஙனம் அமைந்துள்ள ஆட்டுக்கல்லும் அதன் நடுவில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் குளவிக்கல்லும் பார்ப்பவர்களுக்கு இலிங்கமும் ஆவுடை யாரும் போலவே காட்சியளிக்கின்றன. இனி, இத்தகைய இடங்களுக்கு யாதாயினும் மண்மாரியோ அன்றி வெள்ளப் பெருக்கோ ஏற்பட்டு, அந்த இடங்களில் உள்ள பொருள்கள் எல்லாம் மண்ணுக்குள் மூடப்பட்டுப்போய்ச் சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் அந்த இடங்களை எவரேனும் தோண்டிப் பார்க்க நேர்ந்தால், அங்குப் புதை யுண்டு கிடக்கும் ஆட்டுக்கல்லும் அதன் நடுவே நிறுத்தப் பட்டிருக்கும் குளவிக்கல்லும் இலிங்கமாகவும் ஆவுடையா ராகவும் காட்சியளிக்குமன்றோ! எனவே, இத்தகைய கல்வடிவங்களை ஆதாரமாக வைத்து, அக்காலத் தமிழ்

மக்கள் கடவுள் வழிபாடு செய்தனர் என்று இக்கால ஆராய்ச்சியாளர் கூறுவது பொருத்தமற்றதாகும். ஆனால், இவர்கள் இங்ஙனம் கூறுவதெல்லாம், ஆரியப் பார்ப்பனர் தங்கள் பிழைப்புக்காகச் சிவன் என்பானைக் கடவுளாக்கிக் காண்பித்த சூழ்ச்சியை அறிந்துகொள்ள முடியாதபடி அதனை ஒப்புக்கொண்ட காரணத்தால், இவர்கள் கொண்டிருக்கும் மூடநம்பிக்கையை ஏனைத் தமிழ்மக்கள் பாலும் ஏற்றித் தங்களுடைய கொள்கையை நிலைநாட்ட முயல்கின்றனர் என்று உணர்ந்து, இக்கபடச் சூழ்ச்சி யாகிய மூடநம்பிக்கையினின்றும் விடுபட்டு மெய்யுணர் வோடு வாழ முயல்வதே இனித் தமிழ்மக்கள் கடைப்பிடி யாய்க் கொளற்பாலதாகும்.

---

# பகலவன் தமிழர்களால் கொண்டாடப்பட்ட வரலாறு

இனி, அக்காலத் தமிழ்மக்கள் பகலவனை (சூரியனை)ப் போற்றி வந்தனர் என்பது உண்மையே. ஆனால், அப் போற்றுதல் இஞ்ஞான்று பேசப்படும் கடவுள் வழிபாட் டைக் குறித்ததாய் இருந்ததில்லை. மற்று, பகலவன் உலகுக்கு ஒளியை வழங்கும் பெருஞ்செயலை மேற்கொண் டிருப்பவனாதலால், அவனுக்கு நல்ல மதிப்புக்கொடுத்துப் போற்றிவந்தனர். அன்றியும், பகலவனைக் குறித்துப் பார்வையைச் செலுத்திக்கொண்டிருப்பதால், கண்களில் உள்ள நச்சுக் கிருமிகள் பகலவன் ஒளியில் நசித்துக் கண்களுக்கு ஒளியுண்மை மிகுதியாகின்றது. இங்ஙனஞ் செய்வதால் உடல்நலமும் ஆயுள் நீடிப்பும் பேணப்படு கின்றன. இந்த முறை இஞ்ஞான்றை மேனாட்டவரால் ஒருசிறிது கையாளப்பட்டு வருகின்றது. செர்மனி நாட்டி லுள்ள சிலர், ஆடை எதுவும் இன்றி வெற்றுடம்போடு பகலவன் வெளிச்சத்திற் சிறிது நேரம் கிடக்கின்றனர் என்றும், இதனால் அவர்கள் உடல் உரமும், நோயின்மை

யும், ஆயுள் நீடிப்பும் பெறமுடியுமென்றுஞ் சொல்வ தாகவுங் கேள்விப்படுகின்றோம்.

அதுவேயுமன்றி, நெல் முதலான உணவுப்பொருள்கள் விளைவதற்கும் பகலவனே துணையாயுங் காரணமாயும் நிற்கின்றான். கடலிலுள்ள நீரை முகந்துகொண்டு வான் வெளியை நோக்கிச்செல்லும் முகிற்கூட்டங்கள், பகலவனின் வெப்பத்தால் தாக்கப்பட்டவுனே நீராய்க் கரைந்து மழை யாய்ப் பொழிகின்றன. இதனால் நெல் முதலான பயிர்கள் செழித்து வளர்கின்றன. இனி, எவ்வளவு மழை பெய்த போதிலும், பகலவனுடைய ஒளி பயிர்கள்மீது படா தொழியின், அவை வளர்வதுமில்லை பயன் தருவதுமில்லை. இவ்வுண்மை, நிழற்பாங்கிலுள்ள செடி கொடி பயிர் முதலியன முறையே வளர்ந்து பயன் தராமையானும், வெயிற்பாங்கிலுள்ள செடி கொடி பயிர் முதலியன முறையே வளர்ந்து உரிய காலத்திலே தக்க பயன் தருவதானும் பெறப்படும். எனவே, இத்தகைய நல்லியல்புகள் பகலவனிடத்தே அமைத்திருப்பது பற்றித் தான் அக்காலத் தமிழ்மக்கள் அவனைப் போற்றிவந்தனர் என்றுணர்க.

இனி, அப்பகலவன் வழிபாடே பிற்காலத்திற் சிவ வழிபாடாக மாறிற்றென்றும் இஞ்ஞான்றை ஆராய்ச்சி யாளர் சிலர் கூறுகின்றனர். இவர்கள் கூற்று, 'வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவது' போலவே இருக்கிறது. சங்கப் புலவனாகிய சிவன் இறந்தொழிந்தது போலப் பகலவனும் இறந்தொழிந்து போயினனா? அல்லது கடவுளைப்போல எங்காவது மறைந்துகிடக்கின்றனனா? இல்லையே! அவன், அன்றும் இன்றும் ஒரே தன்மையாய் நம்முன் நிற்கின்றனனே! இங்ஙனம் இருக்க, அவனை வழிபடுவதைவிட்டு, அவனுடைய பெயரைச் சொல்லி வேறொரு வடிவத்தை வழிபடுவதாகச் சொல்வது எத்துணை அறியாமையின்பாற் பட்டதாய் இருக்கின்றது பாருங்கள் அன்பர்களே! அன்றியும், பகலவனிடத்துக் காணப்பெறும் நல்லியல்புகள், இவர்கள் கூறுஞ் சிவவடிவத்திற் காணப்படுகின்றனவா?

அல்லது பகலவனைப்போல அச்சிவவடிவம் ஒரு திறந்த வெளியிலாவது இருக்கின்றதா? இல்லையே! ஒரு அரசனுடைய மாளிகைக்கு எவ்வளவு பாதுகாப்பு அரண்கள் உண்டோ, அதைவிடப் பதின்மடங்கு மிகுதியான பாதுகாப்பு அரண்களை உண்டாக்கியன்றோ அச்சிவ வடிவத்தை வைத்திருக்கின்றனர்! அதுவுஞ், சிவன் இருக்கின்ற இடம் ஒரு சிங்கம் வாழும் குகையைவிடப் பெரும் இருட்டு வாய்ந்ததாகவன்றோ இருக்கிறது! அங்கேயுள்ள சிவனைப் பார்க்கவேண்டுமானால், இக் காலத்திலுள்ள மின்சார (Electric) விளக்கின் உதவி கொண்டும் பார்க்கமுடியாமல் இருக்கின்றதே! பக்கத்தி லுள்ளவர்கள், 'இதோ பார், கண்!' 'அதோ பார் மூக்கு' உதோ பார், செவி' என்று சுட்டிக்காண்பித்தாலும் பார்க்க முடிவதில்லையே! அன்றியும், அருட்பெரும் பிழம்பாய்த்—தனிப்பெரும் இரக்கமா (கருணையாய்) ய் விளங்குஞ் சிவனை மக்களாய்ப்பிறந்த அனைவரும் கிட்ட அணுகித் தொட்டு வழிபட முடியாத தடையையும் வகுத்திருக் கின்றனரே! பார்ப்பனருக்கு மட்டுமன்றோ அந்த இடம் பதிவு (Register) செய்யப்பட்டுள்ளது! எனவே, இத்தகைய பாதுகாப்புங் கட்டுப்பாடுகளும் உள்ள ஒரு இடத்தில் இருப்பதும், பார்ப்பனரின் உரிமைச் சொத்துமான சிவனையும், பாதுகாப்புக் கட்டுப்பாடுகள் எதுவுமின்றி, திறந்தவெளியில் எல்லாரும் பார்க்கக்கூடியதாயும், மக்களின் வாழ்க்கைத் துறையின் பல பகுதிகளுக்குப் பெருந்துணை செய்வதாயும் உள்ள பகலவனையும் ஒப்பிட்டுப் பேசும் ஆராய்ச்சியாளரின் அறிவு இருந்தவாறு மிக நன்று! நன்று! என்று எள்ளிநகையாடற் பாலதாம்.

இனி, மேலே சொல்லப்பட்ட சிலைகள் இருந்த இடங்கள் எல்லாம் கோயில்களாக மாற்றப்பட்ட பின்னர் தான், மக்களிடையே கடவுட் கொள்கையை நிலைநாட்ட எழுந்த கற்பனைப் புராணங்கள் பல ஆரியப் பார்ப்பனரால் தோற்றுவிக்கப்பட்டன. புராணங்களை எழுதிய ஆரியர், அதனைத் தமிழில் எழுதாது, வடமொழியாகிய சமஸ் கிருதத்திலே எழுதியதுமின்றி, அதனைத் தேவமொழி யென்றும், அம்மொழியிற் காணப்படும் புராணக் கதைகள்

எல்லாம் கடவுளால் அருளிச் செய்யப்பட்டன என்றுஞ் சொல்லி ஏமாற்றித் தம் பிழைப்புக்கு அரண்தேடிக் கொண்டார்கள். கடைச் சங்க காலத்திற்குப் பின்னிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை இருந்த தமிழ்மக்கள் சமஸ்கிருதத்தைத் தேவமொழியென்றும், புராணங்களைக் கடவுள் அருளிச்செய்தார் என்றுமே நம்பியிருந்தனர். ஆதலாற், சிவன் என்னும் முதற சங்கப் புலவரின் நினைவுக் கல் கடவுளாக மாறியதில் வியப்பொன்றும் இல்லை என்க.

---

# இடைக்காலத்துப் புலவர் தமிழையுந் தமிழரையும் இகழ்ந்தமை

இனி, கடைச் சங்க காலத்திற்குப் பின் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை இருந்த தமிழ்ப்புலவர் எல்லாரும் ஆரிய மொழியினையும் அம்மொழியாரின் கொள்கைகளையும் தமிழ்மொழியிற் பெயர்த்தெழுதியது மன்றித், தமிழ்மொழியையும் மிகவும் வெறுத்து இகழ்வாராயினர். எடுத்துக்காட்டாக ஈண்டு ஒரு நிகழ்ச்சியை மட்டுங் குறிப்பிடுவாம். தமிழையுந் தமிழ்நூற்களையும் இழித்துப் பேசியவர்களுள் தலைசிறந்து நின்றவர், திருவாவடுதுறை ஆதீனத்துச் **சுவாமிநாத தேசிகர்** ஆவர். அவர் தாம் இயற்றிய 'இலக்கணக் கொத்து' என்னும் நூலின்கண்,

"அன்றியுந் தமிழ்நூற்களவிலை அவற்றுள்
ஒன்றேயாயினுந் தனித் தமிழுண்டோ
அன்றியும் அய்ந்தெழுத்தால் ஒரு பாடையென்று
அறையவே நாணுவர் அறிவுடையோரே
ஆகையால் யானும் அதுவே அறிக
வடமொழி தமிழ்மொழி எனும் இருமொழியினும்
இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக."

என்று இவ்வாறு கூறியுள்ளார். இந்தத் தம்பிரான், தமிழ் மொழியையுந் தமிழ்நூற்களையும் பாதுகாத்துத் தமிழர் நெறியை வளர்ப்பதற்காகவே, பண்டைத் தமிழரசர்களால் ஏற்படுத்தப்பட்ட அறநிலையமான ஆதினவழிவந்தவராவர். இப்படிப்பட்டவரே, 'அன்றியுந் தமிழ் நூற்கு அளவிலை அவற்றுள், ஒன்றேயாயினுந் தனித் தமிழுண்டோ' என்று கூறித் தான் தோன்றித் தம்பிரானாக நூல் எழுதினார் என்றால், மற்றையவர்களைப் பற்றிப் பேசுதலும் வேண்டுமோ? இவர்கள் எல்லாருக்கும் ஆரியப் பித்தந் தலைக்கேறிக், கடவுள் வெறி பிடித்து, ஆரியமொழிப் புராணங்களையே தங்கள் வேதமாகக் கொண்டிருந்தமை யால், இவர்கள், தமிழர் நெறிகளைக்கூறி நல்லறிவு கொளுத்துஞ் சங்க நூற்களைக் கண்ணெடுத்துப் பாராரா யினர். அவை, அவர்களுக்கு வேம்பாய்க் கசந்தன போலும்! அல்லது அறிவுச் சுடர் கொண்டு கொளுத்தினுங் கொள்ளா நிலையில் இருந்தனர் போலும்! இஞ்ஞான்றுங் கூடத் திருவாவடுதுறை, திருப்பனந்தாள், தருமபுரம் என்று சொல்லப்படும் ஆதீனங்களில்அமர்ந்திருக்குந் தம்பிரான்மார் தங்களைத் தமிழர் என்றோ தமிழ் மரபினர் என்றோ சொல்லிக் கொள்வதில்லை. அவர்கள் எல்லாரும் நேரே திருக்கைலாயத்திலிருந்து வந்ததாகவும், திருக்கைலாய மரபே தங்கள் மரபெனவுங் கூறிக்கொள்கின்றனர். அதற் கேற்பவே, **தமிழ்மக்கட்குப் புறம்பான இந்து மதத்தைத்** தமிழ்நாட்டிற் பரப்புவதற்காக ஆரியக் கொள்கைகளைத் தழுவி எழுதப்பட்ட நூல்களை அச்சிட்டு விலையின்றியும் வழங்கி வருகின்றனர். தருமபுர ஆதீனத்துத் தம்பிரானான **சண்முகதேசிகர்** என்பவர் **'இந்துமத பால பாடம்'** என்ற ஒரு நூலை அச்சிட்டு இரண்டாண்டுகட்கு முன்னர் விலையின்றி வழங்கினார். இங்ஙனமே இவர்களும் இவர் களுக்கு முன்னிருந்த தம்பிரான்மாரும், இடைக்காலத் தமிழ்ப்புலவரும் தமிழுக்குந் தமிழருக்குஞ் செய்த—செய் கின்ற தீங்குகளை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் நெஞ்சம் நீராய் உருகுகின்றது. எனவே, தமிழ்மொழிப் பற்றுந் தமிழர்நெறிப்பற்றும் அற்ற சிலர் ஆரியர்களின் கொள்கைகளையும் பழகக வழக்கங்களையும் தமிழ்நாட்டிற் பரப்பத் துணிந்த சூழ்ச்சி அறிந்து ஆவன செய்வது அறிஞர்

கடனாம். இனி, எடுத்துக்கொண்ட பொருண்மேற் செல்வாம்.

---

# சுந்தரர் பரவையாரைத் திருமணஞ் செய்த வரலாறு

சுந்தரர், சிவனாரின் கட்டளையை மேற்கொண்டு, திருவெண்ணெய் நல்லூரினின்றும் புறப்பட்டுப் பல கோயில்கட்குச் சென்று அங்கெல்லாஞ் சிவன்பேரிற் பதிகங்கள் பாடிக்கொண்டு திருவாரூரைச் சென்றடைந்தார். அவர் ஒருநாள் திருவாரூரிலுள்ள வன்மீகநாதரெனப் பெயர் பூண்டு நிற்குஞ் சிவனை வணங்குவதற்காகக் கோயிலுக்குப் போனார். அதுகாலை, முன்னே கைலையிலே இருந்த உமையம்மையின் தோழியர் இருவருள் கமலினி என்பாள், அவ்வூரிலே, உருத்திர கணிகையர் (தேவதாசி) குலத்திலே பிறந்து, பரவையார் எனப் பெயர் பூண்டு பூப்படைந்திருந்த நிலையிலே நாட்டியஞ் செய்வதற்காக அங்கே வந்தாள். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் காதலுற்றனர். இதனை அறிந்த சிவன், அவ்வூரிலுள்ள தமதடியார்கள் கனவிலே தோன்றிச் சுந்தரருக்கும் பரவைக்குந் திருமணம் நடத்தி வைக்கும்படி கட்டளையிட்டார். அவர்களும் அக்கட்டளையை மேற்கொண்டு அவ்விருவருக்கும் முறைப்படி (விதிப்படி) திருமணம் நடத்தி வைத்தனர். இதனையும் ஆராய்வாம்.

சுந்தரர் என்பார், தாம் கைலையில் இருந்த காலத்தில், தம்மாற் காதலிக்கப்பட்ட இருபெண்களுடன் இவ்வுலகில் இருந்து இன்பம் நுகரவே வந்தவர் என்ற பெரியபுராண உண்மையின்படி இந்நிகழ்ச்சி ஒப்புக்கொள்ளக் கூடியதே. ஆனால், சுந்தரருக்கு இதற்கு முன்னரே சடங்கவி என்னும் பார்ப்பனர் ஒருவனுடைய புதல்வி மணம் பேசப்பட்டுப் பின்னர் சிவனால் தடுக்கப்பட்ட செய்தி ஒன்றும் மேலே

காட்டப்பட்டது. அங்ஙனம் அந்த மணம் தவிர்க்கப்பட்ட தற்குக் காரணம், சுந்தரரை, மயக்கந் தருவதாகிய உலக வாழ்க்கையினின்றும் மீட்பதற்கே என்றுஞ் சொல்லப் பட்டது. சடங்கவியின் புதல்வியை மணஞ் செய்தாற் சுந்தரர் உலக வாழ்க்கையிற் கிடந்து மயங்குவரென்றுந், தாசி குலத்திற் பிறந்த பரவையாரை மணஞ் செய்து கொண்டால் அங்ஙனம் மயங்கார் என்றுஞ் சிவனார் கண்டனர் போலும்! அற்றன்று, சுந்தரர், அனிந்திதை, கமலினி என்னும் இருபெண்களையுங் கூடி இன்பம் நுகர வந்தவரேயன்றி, சடங்கவியின் புதல்வியைக்கூடி இன்பம் நுகர வந்தவரன்று. ஆகையாற் சிவன் அத்திருமணத்தைத் தடைசெய்தது முறையே என்று கொள்வதும் பொருந்தாது. ஏனென்றால், சிவனின் கட்டளையையும் அருளையும் பெற்று இவ்வுலகில் வந்து பிறந்த சுந்தரருக்குச் சிவனாற் குறிப்பிடப்படாத வேறு பெண் ஒருத்தியை மணம் பேசியதும், பின் அது தவிர்க்கப்பட்டதும் அச்சிவனின் அருட்டன்மைக்கு மாறுபட்டதன்றோ! 'அன்று, அன்று! நீர் கூறுவது பொருந்தாது; மயக்கந்தரும் உலக வாழ்க்கை என்பது, செய்வது இன்னது, தவிர்ப்பது இன்னது என்று தெரிந்துகொள்ள முடியாத மயக்கமேயாம்; அங்ஙனமே சுந்தரரும் மயங்கினார்; அந்த மயக்கத்தையே சிவன் தடுத்து அவரை ஆட்கொண்டார்' என்று எவரேனுங் கூறுவராயின். அவர்க்குந் தக்க விடை இறுப்பாம்.

உயிர்கள், உலகில் வந்து பிறப்பதற்குக் காரணம், அவ்வுயிர்கள் செய்யும் வினைகளே என்றும், அவை நல்வினை தீவினை என இருவகைப்படுமென்றும், அவை, அவ்வுயிர்களால் நுகரப்பட்டு முடிந்தவுடன் பிறப்பில்லை யென்றுங் கடவுள் நூலார் கூறுகின்றனர். உயிர்களின் பிறப்பு முறையைப் பற்றி அறிவு நூலார் கொண்டுள்ள கருத்து வேறு. அதனை ஈண்டு விரிப்பிற் பெருகும். இனி, திருவள்ளுவர் அவாவே பிறப்புக்குக் காரணம் என்கின்றார். எனவே, கடவுள் நூலார் கொள்கையின்படி பார்ப்பதாயின், சுந்தரர், இதற்குமுன் இவ்வுலகிற் பிறந்து நல்வினை தீவினைகள் எதுவுஞ் செய்யாதவர். அவர், சிவனுடைய விருப்பத்திற்குக் கைலையிலுள்ள ஒரு கண்ணாடியினின்றுந்

தோன்றியவர். சிவனையொத்தவர். சிவ வடிவமே ஒரு வடிவாக வந்தவர். அன்றியுஞ் சிவனுடைய கட்டளையை மேற்கொண்டு, ஒரு குறிப்பிட்ட வேலையை முடித்துக் கொண்டு போவதற்காகவே இவ்வுலகில் வந்து பிறந்தவர். இப்படிப்பட்டவர், மற்றை உயிர்களைப் போல உலகில் வந்து மயக்கத்தைத் தருவதாகிய பிறப்பை எடுத்திருக்கக் காரணமில்லை. தாம் உலக வாழ்க்கையிற் கிடந்து மயங்கும் போது தம்மை வந்து தடுத்தாட்கொள்ள வேண்டுமென்று சிவனிடம் முறையிட்டுக்கொள்ள வேண்டியதும் இல்லை. அந்தச் சிவனும் தடுத்தாட்கொண்ட திருவிளையாடலைச் செய்திருக்க வேண்டியதில்லை. சிவன், சுந்தரரைத் தடுத்தாட்கொண்டது, சுந்தரர் பொருட்டன்று. உலகினர்க்குத் தம் ஆற்றலைக்காட்டி அவர்களை நல்வழிப்படுத்துவதற்கே என்றால், அந்நிகழ்ச்சியின் பின் உலகம் யாதாயினும் மாற்றம் அடைந்திருப்பதாகவுந் தெரியவில்லை. கடவுள் நூலார் கொள்கையின்படி, நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனாக ஏற்படும் பிறப் பிறப்புக்களும் இன்னும் நிகழ்ந்துகொண்டே தான் இருக்கின்றன. உலக வாழ்க்கையிற் கிடந்து மயங்கும் மயக்கமும் மக்களுக்குத் தெளிவுபட்டதாகவுந் தெரியவில்லை.

எனவே, சிவனாரின் கட்டளையை மேற்கொண்டு வந்த சுந்தரர், மயக்கமற்ற அருளோடு பிறந்து, அருளோடு விளங்கிக் குறிப்பிட்ட இருபெண்களையுங் கூடி இன்பம் நுகர்ந்து, தாம் எதற்காக வந்தாரோ அந்த வேலையை மட்டும் முடித்துக்கொண்டு போயிருக்கலாம். அங்ஙனஞ் செய்வதைவிட்டு, வேறொரு பெண்ணை மணஞ் செய்வதாக ஒப்புக் கொண்டதும், பின் அவளை மணம் புரியாது தவிர்த்ததும், அப்பெண் சுந்தரரையே நினைந்து கொண்டிருந்து கவலைப் படுகுழியில் வீழ்ந்து மடிய விட்டதும் எவ்வளவு தகாத செயல்கள் என்பதும், இங்ஙனஞ் செய்தது அருட்பெரும் பிழம்பான சிவனுக்கும், அவரால் ஆட்கொள்ளப் பெற்ற தம்பிரான் தோழனான சுந்தரருக்கும் ஏற்ற ஒரு பெருஞ் செயலா என்பதும் அறிவுடைய உலகம் ஆழ்ந்தெண்ணிப் பார்க்க வேண்டியவை யாகும்.

---

# அவா பிறப்புக்குக் காரணமன்று

இனி, திருவள்ளுவர் கருத்துப்படி அவாவே பிறப்புக்குக் காரணம் என்று வைத்துப்பார்த்தாலும் அவர் கூற்றும் பொருத்தமுள்ளதாகத் தெரியவில்லை. 'அவா' என்பது 'விருப்பம்' என்ற பொருளில் வருவதாகும். எனவே, ஒருவனால் விரும்பப்பட்ட ஒன்று அவனால் முடியவேண்டு மானால், அவ்விருப்பமே அவன் பிறப்பதற்குரிய வித்தாகி நின்று அவனுடைய எண்ணத்தை முடிக்கின்றதென்பது திருவள்ளுவரின் கருத்தாகும். ஆனால், நல்லவை கெட்டவை என்ற இருவேறு செயல்களுக்கும் அவாவே காரணம் என்பது சொல்லாமலே பெறப்படும். திருவள்ளுவர், மக்கள் பிறவாமல் இருப்பதற்கு வழி சொல்ல வந்த இடத்தில், அவா அறுத்தலைப் பற்றிப் பேசியுள்ளார். என்றால், ஒன்றை விரும்புதற்கும் வெறுத்தற்குங் காரண மான பகுத்துணர்வற்ற செடி, கொடி, மரம், புல், பூண்டு முதலானவைகளுக்கும் பிறப்பும் இறப்பும் உளதாகச் சொல்லப்படுகின்றது. ஒரு மரத்தில் கோடிக்கணக்கான வித்துக்கள் உண்டாகி, பின் அவை எல்லாம் தனித்தனி மரமாகக் கோடிக்கணக்கான மரங்கள் உண்டாகின்றன. ஆகையால், அந்த மரத்திற்குக் கோடிக்கணக்கான விருப்பங்கள் இருந்தனவென்பதா அதன் பொருள்? சுந்தரரைப் போல், அந்த மரமும் இன்னொரு மரத்தைப் பார்த்து ஆசைப்படுகின்றதா? மரம் வேறு, மக்கள் வேறு என்றால், அது பொருந்தாது. எப்படியென்றால், ஒரு உயிரே, அது செய்த வினைகட்கேற்பப் பல்வேறு வகைப் பட்ட பிறப்புக்களை எடுக்கின்றதென்பதும் கடவுள் நூலார் கொள்கையாகும்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்

செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் ''

என்று சைவ சமய குரவர் நால்வருள் ஒருவரான மாணிக்க வாசகருங் கூறியுள்ளார். இதனால், ஒரு உயிரே பலவகைப் பட்ட பிறப்புக்களை எடுக்கின்றதென்ற கடவுள் நூலார் கொள்கை வலியுறுவதால், மரம் வேறு-மக்கள் வேறு என்று கூறி மறுபிறப்புண்மையை மட்டும் நிலைநாட்ட முயல்கின்ற இன்னொரு சாராரின் கொள்கையும் பொய்யாம் என்றுணர்க. உணரவே, திருவள்ளுவர் கூறும் 'அவா' பிறப்புக்குக் காரணம் என்பதும் மறுக்கப்படும் என்க.

ஏனென்றால், நல்ல செயல்கள் செய்வதற்கும் அவாவே காரணமாய் நிற்பதால், பிறப்பை ஒழிப்பதற்கு நல்ல செயல்களுஞ் செய்யப்படாதென்பதே திருவள்ளுவர் கருத் தாகக் கூறப்படுகின்றது. இன்னா செய்யாமை-இல் வாழ்க்கை - ஊக்கமுடைமை - குடிசெயல்வகை - பொருள் செயல்வகை - குற்றங் கடிதல் - செய்ந்நன்றியறிதல் - புகழ் - விருந்தோம்பல் - உழவு - இறைமாட்சி - அறன் வலி யுறுத்தல்-மெய்யுணர்தல் முதலான மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத நற்பண்புகளை வகுத்துதவிய திருவள்ளுவர், மக்களை ஒரு வேலையற்ற சோம்பேறி களாக்கும் 'அவாவறுத்தல்' என்ற பொய்யுரையைப் பொய்யா மொழியாகிய திருக்குறளில் அமைத்திருப்பாரா? 'கடவுள் வாழ்த்து,' 'நீத்தார் பெருமை,' 'அவா வறுத்தல்' முதலான அதிகாரங்கள் எல்லாம, கடவுட் கொள்கையை நிலைநாட்ட வந்த மத வெறி பிடித்த பிற்காலத்தவரால் எழுதிச் சேர்க்கப்பட்டனவாம என்று உணர்க. எனவே, சுந்தரரும் மற்றை உயிர்களும் அவா காரணமாகப் பிறந்தனர்—பிறக்கின்றனர் என்று கொள்வதும் பொருந்தா தென்று துணியப்படும் என்க.

---

# சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடிய வரலாறு

இனி, சுந்தரர் பரவையாரைத் திருமணஞ் செய்து கொண்டு திருவாரூரில் இருந்த காலத்தில், ஒருநாள், வழக்கம் போல வன்மீகநாதரை வணங்குவதற்காகக் கோயிலுக்குச் சென்றார். அங்கே தேவாசிரயம் என்று சொல்லப்படும் ஒரு மண்டபத்திலே கூடியிருந்த சிவனடியார்களைக் கண்டு, அவர்கள் மேல் அன்புண்டாகி, 'இவர்களுக்கு நான் அடியனாகும் நாள் எந்நாள்' என்று நினைந்து கொண்டு கோயிலுட் போனார். இதனை அறிந்த சிவன் சுந்தரர் முன் தோன்றி, அங்கிருந்த அடியார்களின் வரலாறுகளை அவருக்கு எடுத்துச் சொல்லி, 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று வேதாகமங்களை அருளிச் செய்த தமது அருமைத் திருவாயினாலே அடியெடுத்துக் கொடுத்தார். சுந்தரர் தேவாசிரய மண்டபத்தை அடைந்து, அங்கு வந்திருந்த அடியார்கள் எல்லாருக்கும் வெவ்வேறாக அடியேன் அடியேன் என்று சொல்லித் திருத்தொண்டத் தொகை என்னுந் தேவாரப் பதிகத்தைப் பதினொரு பாடல்களாகப் பாடி முடித்தார் என்று சொல்லப்படுகிறது. இப்பகுதியும் ஆராய்ச்சிக்குரியதாகவே இருக்கிறது.

பெரியபுராணத்திற் பேசப்படும் அடியார்களின் தொகை எழுபத்திரண்டாகும். அதில் தனியடியார்கள் அறுபத்துமூவரும், தொகையடியார்கள் ஒன்பதின்மருமாவர். இவ்வெழுபத்திருவரின் பெயர்களுஞ் சுந்தரராற் பாடப்பட்ட திருத்தொண்டத் தொகையிற் காணப்படுகின்றன. அன்றியுஞ், சுந்தரர் தேவாசிரய மண்டபத்திற்குச் சென்ற போது மேற்குறிப்பிட்ட எழுபத்திருவரும் அங்கிருந்தார்கள் என்பதும் பெறப்படுகிறது. ஆனால், பெரியபுராணத்தி லுள்ள அடியார்களின் கால வரலாற்றை ஆராயுமிடத்துச் சுந்தரர் காலத்திலிருந்தவர்கள், பெருமிழலைக்குறும்பர்,

சேரமான், விறன்மிண்டர், கலிக்காமர், கோட்புலி ஆக அய்வர் என்றே தெரிகிறது. அங்ஙனமே, சம்பந்தர் காலத்தில் இருந்தவர்கள், அப்பர், அப்பூதி, நெடுமாறர், கலிப்பகை, நீலகண்டயாழ்ப்பாணர், முருகர், நீலநக்கர், சிறுத்தொண்டர், குலச்சிறை, மங்கையர்க்கரசி ஆகப் பதின்மர் என்பதும், ஆராய்ச்சியாற் புலானாகின்றது. அன்றியுஞ் சம்பந்தர் காலம் இன்றைக்கு 1330 ஆண்டு கட்டு முற்பட்டதென்பதும், சுந்தரர் காலம் இன்றைக்குத் 900 ஆண்டுகட்கு முற்பட்டதென்பதும் ஆராய்ச்சியாற் போந்த உண்மைகளாகும். எனவே, சுந்தரர் திருத் தொண்டத் தொகை பாடியபோது, மேற்குறிப்பிட்ட எழுபத் திருவரும் ஆண்டுக்குழுமி இருந்தனர்என்பது பொய்யென்று துணியப்படும். அன்றியும், இச்சொல்லப்பட்ட எழுபத் திருவரும் இருந்ததாகச் சொல்லப்படும் காலங்களுட் சுந்தரரின் காலமே பிற்பட்டதென்றும், அதனால் அவர் அவ்வெழுபத்திருவரையும் குறித்துப் பாடியிருப்பார் என்று கொள்ளுதற்கும் புராணத்திற் கருவியில்லை. ஆயின், சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகையே அதற்குக் கருவியாகாதோவெனிற், கூறுதும்.

---

## விறன்மிண்டருந் திருத்தொண்டத் தொகையும்

இத் திருத்தொண்டத்தொகையைப் பற்றிய வேறொரு வரலாறும் பெரியபுராணத்துட் காணப்படுகின்றது. அது வருமாறு: மலை நாட்டைச் சார்ந்த செங்குன்றூரிலே விறன்மிண்டர் எனப் பெயரிய வேளாளர் ஒருவர் இருந்தார். இவரும் அறுபத்து மூவருள் ஒருவராவர். இவர் சிவனடியார்களிடத்தில் மிகுந்த அன்புடையவர். முதலில் அடியார்களை வணங்கியே பின் சிவனை வணங்கு கின்றவர். இவர் திருவாரூரிலுள்ள தேவாசிரய மண்ட பத்தில் இருந்தபோது, அங்கு வந்த சுந்தரர் அடியார்களை

வணங்காமல் ஒதுங்கிப் போனார். அதனைக் கண்ட விறன்மிண்டர், 'அடியார்களை வணங்காமல் செல்கின்ற வன்றொண்டன் அவ்வடியார்களுக்குப் புறகு, அவனை வலிய ஆட்கொண்ட பரமசிவனும் புறகு' என்று சினந்து கூறினார். இதுகேட்ட சுந்தரர், விறன்மிண்டர் அடியார் களிடத்துக் கொண்டிருக்கும் அன்புக்கு மகிழ்ந்து அவ்வடி யார்கள் மேலே திருத்தொண்டத்தொகை என்னும் பதிகத்தைப் பாடினார் என்பதே திருத்தொண்டத் தொகையைப் பற்றிய பிறிதொரு வரலாறாகும்.

இவ்வாறு சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகைக்குக் காரணங்கள் இரண்டு கூறப்படுகின்றன. முதற் காரணத்தை நோக்கும் போது, சுந்தரர் தாமாகவே அடியார்களிடத்து அன்பு கொண்டு, தம்மை அவர்களுக்கு அடியவனாக வைத்துப் பதிகம் பாடியதாகத் தெரிகிறது. இரண்டாவது காரணத்தை நோக்கும் போது, சுந்தரர் அடியார்களைக் கண்டுங் காணாதவராய், அவர்களிடத்தில் அன்பில்லாமல் ஒருபுறம் ஒதுங்கிச் சென்றதைக் கண்ட விறன்மிண்டர் சினங்கொள்ளவே, திருத்தொண்டத் தொகையைப் பாடியதாகவுந் தெரிகிறது. இவ்விரண்டு காரணங்களும் ஒன்றுக்கொன்று மிகவும் முரண்பட்டு நின்று ஐயம் விளைக்கின்றன.

இனி, திருத்தொண்டத்தொகை, விறன்மிண்டர் அங்கு வந்திருந்த போது புதிதாகப் பாடப்பட்டதல்லவென்றும், முன்னரே பாடிவைத்திருந்த பதிகத்தையே விறன்மிண்டரும் அறியப் பாடிக் காண்பித்து, அடியார்களிடத்துத் தாம் வைத்திருக்கும் அன்பைத் தெரிவித்தார் என்பதாகச் சொல்லி சிலர் வழக்காடுவர். அவர் வழக்குச் செல்லா தென்பதையுங் காட்டுவாம்.

சுந்தரருக்கு உண்மையாகவே அடியார்களை வணங்க வேண்டுமென்ற விருப்பமும், அவர்களிடத்தன்பும் இருந் திருப்பின், அவர் கோயிலுகக்குப் போகும் போதெல்லாம் அவர்களை வணங்கி இருப்பார். அன்றியும், விறன்மிண்டர் சினங்கொண்ட போது, தேற்றுமுகத்தான், முன்னரே தாம் அடியார்களிடத்து வைத்துள்ள அன்புடைமையைத் தெரி

வித்து, அன்று யாதோ மறதி காரணமாக அடியார்களை வணங்காமற் போய் விட்டதாகக் கூறித், தாம் பாடி வைத்திருந்த பதிகத்தைப் பாடிக் காண்பித்து விறன்மிண்டரின் சினத்தைத் தணித்திருக்கலாம் அதுவேயுமன்றி, சிவனையும் அவரடியார்களையும் வணங்குவதற்காகவே கோயிலுக்கு வந்த சுந்தரருக்கு மறதி ஏற்படக் காரணமுமில்லை. உண்மையாகவே மறதி ஏற்பட்டதாயின், அம்மறதிக்கும், மணப்பந்தரில் வந்திருந்த மணமகன் தனக்கு மனைவியாக வந்திருந்த மணப்பெண்ணுக்குத் தாலி கட்ட மறந்ததாகச் சொல்லப்படும் மறதிக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை. ஏனென்றால், சிவனை வணங்குவதற்காகக கோயிலுக்குச் செல்கின்றவர்கள், மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்று சொல்லப்படும் அய்ம்பொறிகளையும் ஒடுக்கி ; மனம்—அறிவு—நினைவு—முனைப்பு என்று சொல்லப்படும் அக்கருவிகள் நான்கையும் அடக்கி ; உலகப்பற்று—பொருட்பற்று—புதல்வர்ப்பற்று என்று சொல்லப்படும் முப்பற்றுக்களையும் நீக்கித் தூய்மையான உள்ளத்தோடு, சவனையேயன்றி வேறொன்றையும் மறந்தும் எண்ணாது போதல் வேண்டுமென்பதுஞ் சைவ நூற் றுணிபாகும். எனவே, சைவ சமயததை நிலைநாட்டி அதன் உண்மையை மக்களுக்கு எடுத்துக்காட்டி விளக்க வந்த சுந்தரருக்கே மறதி ஏற்பட்டதென்றால், அதைவிட நகைப்புக்கிடமான செய்தி வேறொன்றுளதோ? ஆகவே, அங்ஙனங் கூறி வழக்காடுவாருரை, பெரியபுராணத்தை மெய்யெனக் கொள்ளும் போலி வெற்றுரையாம் என்று ஒழிக.

எனவே, நாம் மேலே எடுத்துக்காட்டியபடி, பெரியபுராணத்துட் பேசப்பட்ட எழுபத்திருவரும் ஒரு காலத்தவர் அல்லர் என்பதும், சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப் பாடவில்லையென்பதும் இதனாற் பெறப்படும். படவே, திருத்தொண்டத்தொகை என்பது, பெரியபுராணக்கதையை எழுதுவதற்காக முனைந்த பிற்காலத்தவர் ஒருவரால் பாடப்பட்டதென்று துணிதற்கு நீண்ட ஆராய்ச்சியும் மேற்கோள்களும் வேண்டுவதில்லை. ஆகவே, சுந்தரர் தான் மேற் சொல்லப்பட்ட எழுபத்திருவருக்கும் பிட்பட்டவர் என்று

கொள்வதற்குத் திருத்தொண்டத்தொகை கருவியாகா தென்பதும் பெறப்படும்.

---

# சுந்தரர் நெல்லுப் பெற்ற வரலாறு

இனி, சுந்தரர் பரவையாரோடுந் திருவாரூரில் இருந்த காலத்தில், குண்டையூர்க் கிழவர் என்னும் வேளாளர் ஒருவர், சுந்தரருக்கு வேண்டும் நெல்லும் பிற உணவுப் பொருள்களும் கொடுத்து வந்தார் என்றும், பின் பஞ்ச மேலீட்டால் நெல்லுக் கொடுக்க முடியாமற் போகவே, சிவனுடைய திருவருளால் வானளாவிய நென்மலை ஒன்று திடீரென உண்டாயிற்றென்றும், அந்த நென்மலையை எடுத்துச் சேர்ப்பது மக்களால் முடியாதென்று கண்ட சுந்தரர் சிவனிடம் முறையிட்டார் என்றும், சிவன் பகற்கால மல்லாத இராக்காலத்தில் தமது பூதங்களை ஏவி நென் மலையைத் திருவாரூரிற் சேர்ப்பித்தார் என்றும், அதனைப் பரவையார் அவ்வூரவர் எல்லார்க்கும் வழங்கினார் என்றுஞ் சொல்லப்படுகிறது. இந்நிகழ்ச்சி, 'முழுப் பூசனிக்காயைப் பரிமாறின சோற்றில் மறைப்பது' போன்ற எவ்வளவு பெரும் பொய்யாய் இருக்கின்றது, பாருங்கள்! மழைவளங் குன்றி நெல் விளையாது பஞ்சம் மேலிட்டு இருந்த ஊரில், வானத்தையும் மறைக்கக்கூடிய நென்மலை அங்கு எப்படி, எங்கிருந்து வந்ததென்பது தெரியவில்லை. சிவன் தமது அருளினாலே மணலையோ, அன்றிக் கல்லையோ நெல்லாக்கினாரா? அல்லது தமது உறைவிடமான கைலாயத்தினின்றும் வரவழைத்தாரா? அப்படியாயின், கைலையில் நன்செய் புன்செய் நிலங்களுண்டா? உண்டாயின், அவற்றைவிளைவிக்கும் உழவர்(விவசாயிகள்) அங்கிருக்கின்றனரா? அவை இல்லையாயின், அந்நென் மலை எங்கிருந்து வந்தது? சிவனுடைய அருளினால் என்றால், மக்கள் உழவுதொழிலை நடத்தவேண்டிய தில்லை யன்றோ! மக்களின் முயற்சியின்றி நெல் முதலிய உணவுப் பொருள்கள் உண்டாகுமானால், அதுவுஞ் சிவனுடைய

அருள் ஒன்றினாலேயே மலை மலையாய் வந்து குவியு மானால், மக்கள், தாம் நெல் விளைவதற்காகச் செய்யும் முயற்சிகள் எல்லாவற்றையுங் கைவிட்டுச் சிவனை மெய்யன் போடும் இடையறாது அதே வேலையாக வணங்கிக் கொண்டிருக்கலாமே! வேறு வேறு பிறவிகளிளெல்லாம் உயிர்கள் சிவனை அறிந்து வணங்கும் அறிவு வாய்க்கப் பெறாது போகின்றமையால், தம்மை அறிந்து வழிபட்டுப் பேரின்பத்தை அடைவிப்பதற்காகவே சிவன் பகுத்தறிவோடு கூடிய மக்கட் பிறவியைக் கொடுக்கிறார் என்றும் மத நூல்கள் நுவல்கின்றனவே!

"மானுடப் பிறவிதானும் வகுத்தது
மனம் வாக்குக் காயதது
ஆனிடத் தைந்துமாடும்
அரன் பணிக்காக வன்றோ
வானிடத்தவரும் மண்மேல் வந்து
அரன் தனை அர்ச்சிப்பர்
ஊன் எடுத்து உழலும் ஊமர்
ஒன்றையும் உணரார் அந்தோ."

என்றுஞ் சைவ சித்தாந்த நூலாகிய சித்தியாரிற் கூறப் பட்டிருக்கிறதே! இங்ஙனமே தேவார திருவாசக திருவாய் மொழிகளாகிய சிவ விட்டுணு வழிபாட்டுப் பாக்கள் ஒவ்வொன்றும் சிவ விட்டுணுக்களை வழிபடுதற்கு மட்டுமே மக்கட்பிறவி கொடுக்கப்பட்டதென்று பகர்கின்றன. இவ்வாறெல்லாம் சமயாசசாரிகளும், சந்தானாச்சாரிகளும், ஆழ்வாராதிகளும் இடித்திடித்துக் கூறிப்போய் இருக்கவும், மக்களிற் பெரும்பாலார் சிவ விட்டுணுக்களை வழிபடாது, காடுமேடுகளைத் திருத்திப் - பயிர்செய்து - உண்டு களித்து - உறங்குந் தொழிலை மேற்கொண்டிருப்பது எவ்வளவு இரங்கற்பாலதாய் இருக்கின்றது.........! சுந்தரர், சிவனைப் 'பித்தன்' என்று பாடி மலை நெல்லுப் பெற்றார் என்றால், மற்றையவர் சிவனைப் 'பேயன்' என்று பாடினால் கல நெல்லாவது கொடுக்க மாட்டாரா? அல்லது 'அப்பனே ஒப்பிலா மணியே' என்று பாடினால்

முற நெல்லாவது கொடுக்க மாட்டாரா? என்னே, ஏமாற்றம்! என்னே, பித்தலாட்டம்! சுந்தரருக்குச் சிவன் கொடுத்ததாகச் சொல்லப்படும் நெல் வானத்தையும் மறைத்து மலைபோற் குவிந்து கிடந்ததாமே! அது மக்களால் எடுத்துச் சேர்ப்பதற்கு முடியாமல், சிவன் தமது பூதங்களை அனுப்பி எடுக்கச் சொன்னாராமே! சிவனுடைய வேலையாட்களான பூதங்கள் எங்கிருந்து வந்தன என்பது தெரியவில்லை. சிவன் வந்து தங்கியிருக்கும் (Camp) இடங்களில் பூதங்கள் எதுவும் இருந்ததாகவோ இருப்ப தாகவோ சொல்லப்படாததால், சிவனுடைய சொந்த ஊரான (Native Place) கைலாயத்திலிருந்தே அவை வந்தன போலும்! அதுவும் பகற்காலத்தில் வராமல் இராக் காலத்தில் வந்ததாகச் சொல்லப்படுவதால், குண்டோ தரனைப் போன்ற பூதங்களைக்கண்டு மக்கள் திடுக்கிடாமல் இருப்பதற்காகவே சிவன் அங்ஙனஞ் செய்தனர் போலும்! ஆனால், இத்தகைய அண்டப்புளுகுக் கதைகளை எழுதி வைத்தவர்கள், ஓரளவு உலக இயற்கையையும் எண்ணிப் பார்த்து அதற்கேற்பக் கதைகளை எழுதி வைத்திருந்தால், இன்னுஞ் சில காலம் அவர்களின் போலிக் கடவுள் வாணிகம் (வியாபாரம்) நடப்பதற்கு வழியுண்டா யிருக்கும்.

ஆனால், இவ்விருபதாம் நூற்றாண்டு, கடவுளைப் பற்றிய கொள்கைகளிற் பல மாற்றங்களையுங் கொண்டு வந்து விட்டது. பல தெய்வங்கள் உண்டென்றும், அவற்றுள்ளும் ஒன்று பெரிது மற்றது சிறிதென்றும், கடவுளுக்குத் திருமணமும் பிள்ளைப்பேறும் உண்டென்றும் முழுப்பிடியாய் நம்பியிருந்த சில பழுத்த சைவர்கள் தங்கள் கொள்கைகளைச் சிறிது சிறிதாக விட்டுக்கொடுத்துக் கொண்டு வருகின்றனர். கடவுளுக்கு ஆறுகாலப் பூஜை வேண்டாம், ஒரு காலப் பூசையே போதுமென்றும்; எண்ணெய் பால் முதலியவற்றால் கோயில்களிலுள்ள கடவுள் வடிவங் (விக்கிரகங்) களை அழுக்குப்படுத்தக் கூடாதென்றும்; பத்துப் பெயர்கள் சொல்லக்கூடிய நேரத்தில் ஆயிரம் பெயர் சொல்லி மலர் தூவுவதாக (அர்ச்சனை)ப் பாசாங்கு பண்ண இடங்கொடுக்கக்

கூடாதென்றும், 'ஓம கணபதியே நம' என்று படர்க்கையிற் சொல்லாமல் 'கணபதியே போற்றி' என்று முன்னிலையாகச் சொல்லி வழிபடலாமென்றும்; **கோயில்களெல்லாம் கலா நிலையங்களாகவுஞ் சொற்பொழிவு மண்டபங்களாகவும் மாறவேண்டுமென்றும்;** ஆதீனங்களில் அமர்ந்திருக்குந் தம்பிரான்மாரிடம் உள்ள பொருட் குவியல்களைச் சட்ட வாயிலாகப் பறித்து நல்ல வழியிற் பயன்படுத்த வேண்டுமென்றும் இன்னும் பலவாறானவுமான கடவுளைப் பற்றிய சீர்திருத்தங்கள், **உச்சியிற் பழுத்த சைவ சித்தாந்தத் தேனமுதருந்தி மயங்கிக் கிடந்த** அறிஞர் சிலரால் நூல்வடிவிலுங் கொண்டுவரப் பட்டுள்ளன. இன்னும் போகப் போகக் கடவுளைப்பற்றிய கருத்து மாற்றங்களுஞ் சீர்திருத்தங்களும் ஏற்படும் என்பது திண்ணம். ஆகவே, இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் அத்தகைய சீர்திருத்தக்காரருக்கும், தன்மதிப்போடு வாழ விரும்பும் எதிர்காலத் தமிழ் மககட்கும் பெரும் பயன் அளிப்பனவாகும்.

---

# செங்கற்கள் பொற்கற்களான வரலாறு

இனி, திருவாரூரில் பங்குனி உத்தரத் திருவிழா வந்த போது பரவையார் தமக்குப் பொன் வேண்டுமென்று சுந்தரரைத் தொந்தரவு செய்ததாகவும், சுந்தரர் திருப் புகலூருக்குப் போய், அங்கிருந்த செங்கற்கள் சிலவற்றை எடுத்துத் தலையணையாக வைத்துக் கொண்டு அங்குள்ள சிவன் கோயிலிலே படுத்துறங்கினார் என்றும், பின் விழித்தெழுந்து பார்த்த போது அவையெல்லாம் பொற்கற் களாய் மாறி இருந்தன வென்றுஞ் சொல்லப்படும் ஒரு நிகழ்ச்சியுங் கதையிற் காணப்படுகின்றது. சுந்தரருக்குத் தலையணையாகப் பயன்பட்ட செங்கற்கள் பொற்கற்களாக மாறினவென்பது, இக்காலத்துக் குறளி வித்தைக்காரர் களின் மாய விளையாட்டையே ஒத்திருக்கின்றது. 'குறளி வித்தைக்காரர், கல்லைக் கற்கண்டாகவும், மண்ணைச்

சர்க்கரையாகவும், மாங்கொட்டை ஒரு விநாடியிலே முளைத்துக் காய்ப்பதாகவுஞ் செய்து காண்பிக்கின்றனர். இவைக்குஞ் சுந்தரரின் தலையணைச் செங்கற்கள் பொற் கற்களாக மாறிற்றென்பதற்கும் வேறுபாடு ஒன்றுமே இல்லை. கோலார் தங்கவயலில் (Kolar Gold Field) உள்ள மண்ணைப் பொன்னாக்குவதற்கு இஞ்ஞான்றை ஆங்கிலேயர் எவ்வளவோ அரும் பெரும் முயற்சிகள் செய் கின்றனர். இவர்களுக்குச் சுந்தரர் பொன் செய்த முறை தெரியாது போலும்! தெரிந்திருந்தால், இத்துணைத் துன்பங்களுககு அவர்கள் ஆளாக வேண்டியதில்லை. அங்குள்ள ஒவ்வொருவரும் ஆளுக்கு ஒரு செங்கல் விழுக் காடு தலையணையாக வைத்துக்கொண்டு, 'தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்' என்று சுந்தரர் பாடிச் செங்கற் களைப் பொற்கற்களாக்கிய தேவாரத்தைப் பாடியபின் படுத்துறங்கி விழித்துப் பார்ப்பார்களாயின், அவை எல்லாம் பொற் கற்களாக மாறிவிடுமே! இங்ஙனஞ் செய்து மண்ணைப் பொன்னாக்க முடியாததாயின், சுந்தரருஞ் செங்கல்லைப் பொற்கல்லாக்கியிருக்க முடியாது. எனவே, செங்கல் பொற்கல்லான வரலாறு எவ்வாறெனிற், கூறுதும்.

" அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும் "

என்ற குறள்வெண்பாவின்படி, சுந்தரருக்குக் காமக் கிழத்தியாய் வாய்த்த பரவையார், மக்களின் பொருளை மயக்கிப் பறிக்குந் தாசிகுலத்தவளாதலால், அவள், அவரைப் பொன் கொண்டுவரும்படி தொந்தரவு செய்தாள். எனவே, சுந்தரர் பொன் பெற வேறுவழி காணாமையாலும், சிவனாரின் தோழன் என்ற பட்டப்பெயர் பெற்றிருந்தமை யால் அவர் கோயில்களில் நுழைவதற்கு தாராள உரிமை பெற்றிருந்தமையாலும், கோயில்களிலுள்ள பொற்கட்டி களைத் திருடிக்கொண்டு வந்தார் என்பதே அதன் உண்மை யாகும். அக்காலத்து அரசர்கள் தங்களிடமுள்ள பொற் குவைகளைக் கோயில்களிலுள்ள மறைவிடங்களிற் சேமித்து வைப்பதும் வழக்கமாய் இருந்தது. இக்காலத்திலுங்கூடக்

கோயில் திருப்பணி செய்பவர்கள் பழைய கட்டிடங்களை இடித்து அங்கிருந்து பொருந்தொகைப் பொற்காசுகளையும் வைடூரியக் கற்களையுங் கண்டெடுப்பதாகச் சொல்லப் படுவதால், இவ்வுண்மை நன்கு தெளிவாகின்றது. அன்றியுஞ் சுந்தரர் தமக்குப் பொன் வேண்டிப் பலரைக் கெஞ்சிக் கேட்டுங் கிடைக்காத நிலையிற் பின்வருமாறு பாடியுள்ளார்.

“ தம்மையே புகழ்ந்திசை பேசினுஞ்
சார்விலுந் தொண்டர் தருகிலாப்
பொய்மையாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள் ”

“ மிடுக்கிலாதானை வீமனே விறல்
விசயனே வில்லுக்கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே என்று
கூறினுங் கொடுப்பாரில்லை ”

“ காணியேற் பெரிதுடையனே கற்று
நல்லனே சுற்றநன்கிளை
பேணியே விருந்தோம்புமே என்று
பேசினுங் கொடுப்பாரில்லை ”

“ நரைகள் போந்து மெய்தளர்ந்து
மூத்துடல் நடுங்கி நிற்குமிக்கிழவனை
வரைகள்போல் திரள் தோளனே
என்று வாழ்த்தினுங் கொடுப்பாரில்லை ”

“ வஞ்ச நெஞ்சனை மா சழக்கனைப்
பாவியை வழக்கில்லியைப்
பஞ்ச துட்டனைச் சாதுவே
என்று பாடினுங் கொடுப்பாரில்லை ”.

" என் விழுந்திடம் பார்க்குமாகிலும்
ஈக்கும் ஈகிலனாகிலும்
வள்ளலே எங்கள் மைந்தனே
என்றுவாழ்த்தினுங் **கொடுப்பாரில்லை** "

" தையலாருக்கு ஓர் காமனே சால
நல் வழக்குடை அய்யனே
கையுலாவிய வேலனே
என்று கழறினுங் **கொடுப்பாரில்லை** "

என்ற இப்பாடல்கள். செங்கற்கள் பொற்கற்களான வுடனே சுந்தரராற் பாடப்பட்டனவாகும். இப்பதிகத்தி லுள்ள பாடல்கள் ஒவ்வொன்றுஞ் சுந்தரர் பொன் பெறு வதற்காக அடைந்த துன்பங்களை நன்கு விளக்கிக் காட்டு கின்றன. பொன் கொடுப்பார்கள் என்று எதிர்பார்க்கப் பட்டவர்களை எல்லாம் பாரியே—வீமனே—விறல்விசயனே —நிலங்களையுடையவனே—கல்வி கற்ற நல்லவனே—நரை திரை வந்துள்ள கிழவனை, மலைபோலுந் தோள்களை யுடையவனே—வஞ்சநெஞ்சமுள்ள பாவியைச் சாதுவே— ஈக்கும் ஈயாத உலோபியை வள்ளலே—காமனே— வேலனே என்றெல்லாம் புகழ்ந்து, பாடி வாழ்த்தியும் பொன் கிடைக்காதுபோகவே தான்' சுந்தரர் சிவன் கோயிலிலிருந்த பொருளிற் கைவைத்தார். ஆனால், பெரிய புராணம் எழுதிய பிற்காலத்தவர், மக்களை மயக்கிப் பிழைப்பதற்காகக் கதையை மாற்றி எழுதி வைத்தனர் என்றுணர்க.

---

## சுந்தரர் திருமுதுகுன்றிற் 12000 பொன் பெற்ற வரலாறு

இனி, விருத்தாசலம் என்று சொல்லப்படுந் திருமுது குன்றூருக்குச் சுந்தரர் சென்றிருந்த காலத்திலே, அங்குள்ள

சிவன் இவருக்கும் 12000 பொன் கொடுத்தார் என்றும், அதனை அவ்வூரிலுள்ள மணிமுத்த நதியிற் போட்டுப், பின் திருவாரூருக்கு வந்து அங்குள்ள குளத்தில் எடுத்தார் என்றும் ஒரு நிகழ்ச்சி கதையிற் காணப்படுகிறது. இந் நிகழ்ச்சி, திருநாவுக்கரசர் கேதாரத்திலுள்ள குளத்தில் மூழ்கி 2500 கல் தொலைவுக்கு இப்பாலுள்ள திருவை யாற்றுக் குளத்தில் எழுந்ததாகச் சொல்லப்படும் நிகழ்ச்சியையே ஒத்திருக்கின்றது. அந்த வரலாற்றை எமது 'இந்து மதமுந் தமிழரும்' என்னும் நூலிற் காண்க. ஆற்றிற் போட்டுக் குளத்தில் எடுத்ததாகச் சொல்லப்படும் இவ்விந்தையான கதை உண்டான பின்னர்தான், 'ஆற்றிற் போட்டுக் குளத்தில் தேடுவதா?' என்ற பழமொழியுந் தமிழ்நாட்டில் எழுந்தது போலும்! இனி, இந்நிகழ்ச்சியும் நாம் மேலேஎடுத்துக் காட்டியபடி, திருமுதுகுன்றூரிலுள்ள சிவன் கோயிலில் அக்காலத்து அரசராற் சேமித்து வைக்கப் பெற்ற பொற்குவைகளில் 12000 பொன்னைச் சுந்தரர் திருடினார் என்பதும், அங்ஙனந் திருடிய செய்தி பிறர் எவரோ அறிந்த காரணத்தால்தான் அதனை மணிமுத்த நதியிற் புதைத்து வைத்துச் சில நாட்கள் கழிந்தபின் திருவாரூர்க் குளத்தில் எடுத்ததாகக் கதை கட்டப்பட்ட தென்பதும் நீண்ட ஆராய்ச்சியின்றி உணரப்படக் கூடியதே.

இத்தகைய திருட்டுத் தொழில் கோயில்களில் நடை பெறுவதால் தான், **'அய்யருடைய செம்பைச் சோதி'** **'தம்பிரானுடைய சடையைச் சோதி'** என்ற முது மொழிகள் எழுந்தன. அக்காலத்துக் கோயிற் பூசாரி களான அய்யர்மாரும், கோயிற் பாதுகாப்பாளரான தம்பி ரான்மாரும் கோயில்களிலுள்ள பொற்காசுகளையும் வைரக் கற்களையும் திருடிச் செம்பிலுஞ் சடையிலும் வைத்து மறைத்துக் கொண்டு போகும் வழக்கம் இருந்தது. இங்ஙனந் திருடிக் கொண்டு போகும் பொற்காசுகளும் வைரக்கற்களும் அவர்களின் செம்பிலுஞ் சடையிலும் மறைந்து கிடந்து மின்னுவதைக் கண்டோர், அதனைப் பிறர்க்குக் குறிப்பால் உணர்த்தவே, **'அய்யருடைய செம்பிற் சோதி'**; **'தம்பிரானுடைய சடையிற் சோதி'**

என்று விகடமாகவும் வியப்பாகவுங் கூறும் வழக்கமும் ஏற்பட்டதாகும். ஆனால் அவர்கள் இத்தகைய திருட்டுத் தொழிலை அக்காலத்தில் மட்டுஞ் செய்யவில்லை; இக்காலத்திலும் ஒரோவொரு இடங்களிற் இத்திருப் பணியை விடாது நடத்தி வருகின்றனர். இத்தகைய திருட்டுத்தொழிலைப்பற்றிய வழக்குகள் பல இஞ்ஞான்றை முறை மன்றங்களு (Court)க்கு வந்து தீர்ப்புஞ் செய்யப் படுகின்றன.

---

# பார்ப்பனருஞ் சிறைவாழ்க்கையும்

இனி, இத்தகைய "மதிப்பு வாய்ந்த" திருட்டுத் தொழிலை மேற்கொள்வதில் நமது தமிழ்நாட்டிலுள்ள பார்ப்பனரே மற்றை எல்லாரையும் விடத் தேர்ச்சி பெற்றவ ராவர். எடுத்துக்காட்டாக, யான் கண்ட நிகழ்ச்சிகளில் ஒன்றை மட்டும் ஈண்டுக் குறிப்படுகின்றேன்.

கி. பி. 1938-ல் தமிழ்நாட்டில், நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி காரணமாக, அதனைத் துவக்கி நடத்திய குற்றமும்—பலரை அக்கிளர்ச்சியிற் சேரும்படி தூண்டுதல் செய்த குற்றமும் என்பாற் சுமத்தப்பட்டு, ஒவ்வொரு குற்றத்திற்கும் ஒன்பது திங்கள் விழுக்காடு, பதினெட்டுத் திங்கள் கடுங்காவல் தண்டனை அளித்து, அரசியலார் என்னைத் தங்கள் விருந்தினனாக (கைதியாக) வைத்திருந்தார்கள். அதுகாலை, பலதிறப்பட்ட அரசியல் விருந்தினர் (கைதிகள்) சிறைக் கோட்டத்தை நிரப்பிக் கொண்டு இருந்தனர். நான் இருந்த விடுதியில் மட்டும் ஏழெட்டுப் பார்ப்பனரும் வேறு சிலரும் இருந்தனர். அங்கிருந்த பார்ப்பனர்அத்தனைபேரும் பொதுப்பணத்தைத் திருடிய குற்றத்திற்காகவே தண்டனை பெற்றிருந்தனர். அவர்களில் ஒருவர், பொதுமக்களுடைய பணச் சேமிப்பு நிலையத்தின் (Bank) தலைவராய் இருந்து, பொது மக்களுடைய பணத்தில் 1,40,000. ஒருநூறாயிரத்து

நாற்பதினாயிரம் ரூபாயைத் திருடிய குற்றத்திற்காக வழக்குத் தொடரப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருந்தார். அவர் நாள்தோறும் காலையில் எழுந்ததும் குளித்துப் —புத்தாடை அணிந்து—பட்டை நாமந் தீட்டிப்—பீடத்தில் அமர்ந்து—பகவத் கீதையைப் படித்து (பாராயணம் செய்து)க் கொண்டிருப்பார். இங்ஙனம் நிகழ்ந்து வரும் நாளிலே ஒரு நாள் சிறைக்கூடத் தலைவர் நாங்களிருக்கும் விடுதியைப் பார்வையிடுவதற்காக வந்தார். அப்பொழுது, அந்தப் பார்ப்பனர் பகவத் கீதையைப் படித்துக்கொண் டிருந்ததைக் கண்ட சிறைத்தலைவர் அவரைப்பார்த்துப் பின்வருமாறு கேட்டார்.

சிறைத்தலைவர் :—தாங்கள் படிக்கும் நூல் யாது ?

பார்ப்பனர் :—பகவத்கீதை.

சிறைத்தலைவர் :—அப்படியானால் தாங்கள் செய்த குற்றத்தை மன்னிக்கும்படி பகவத் கீதையைப் படிப்பதன் வாயிலாகக் கடவுளிடம் விண்ணப்பிக் கின்றீர்களா ?

இந்தக் கேள்விக்கு அந்தப் பார்ப்பனர் விடை கூறுவதற்கு முன், பக்கத்தில் நின்ற யான் சிறைத் தலைவரை நோக்கிப் பின்வருமாறு கூறினேன்.

> " அந்தப்பார்ப்பனர், தம்முடைய குற்றம் மன்னிக்கப் படுவதற்காகப் பகவத் கீதையைப் படிக்கவில்லை. தாம்அத்தகைய குற்றங்களைச் செய்யக்கூடியவர் அல்ல என்று தம்மைப் பிறர் எண்ணவேண்டு மென்பதற்காவே பட்டை நாமந் தீட்டிய கோலத் துடன் பகவத்கீதையைப் படிக்கிறார்"

என்றேன். அதன் பின்னர், சிறைத்தலைவர் புதிதாகச் சிறைக்கோட்டத்திற்கு வந்துள்ள வேறொரு பார்ப்பனரை நோக்கி,

'நீர் என்ன குற்றஞ் செய்து சிறைக்கு வந்தீர் ?' என்று கேட்டார். அந்தப் பார்ப்பனர் விடை அளிப்பதற் கிடையில், நான் குறுக்கிட்டுப் பின்வருமாறு கூறினேன்.

" சிறைத்தலைவரே, பார்ப்பனர் சிறைக்கு வந்தால், தாங்கள், அவர்களிடம் என்ன குற்றம் புரிந்து தண்டிக்கப்பட்டீர்கள் என்று கேட்கவேண்டாம். அவர்கள், பிறர் பொருளை மோசஞ் செய்து திருடுவதைத் தவிர, வேறு குற்றங்கள் எதுவும் பெரும்பாலும் செய்யமாட்டார்கள். ஆகவே, பார்ப்பனர் சிறைக்கு வந்தால், அவர்களைப் பார்த்து, 'நீங்கள் மோசடி செய்த தொகை எவ்வளவு?' என்று மட்டுங் கேட்டால் போதும்"

என்றேன். இதைக் கேட்டதும், அங்கிருந்த அனைவரும் உரக்கச் சிரித்துவிட்டார்கள். அந்தப் பார்ப்பனரும் 'அய்ம்பதினாயிர (50,000) ரூபாய் மோசடி' என்று மகிழ்ச்சியுடன் விடையிறுத்தார் என்ற இவ்வுண்மைகளால் பார்ப்பனர் மதத்தின்பேரால் மட்டுமன்றி, பொது வாழ்வில் ஈடுபடுவதனாலும், அரசியற் பதவிகளை வகிப்பதனாலும் எவ்வளவு கொடுமைகளைச் செய்து வருகின்றனர் என்பது ஒருவாறு விளங்குமாகையால், இனி எடுத்துக்கொண்ட பொருண்மேற் கருத்தைச் செலுத்துவோம்.

இனி, இவ்வுண்மைகளாற் சுந்தரரையும் ஒரு திருடன் என்று சொல்வதாக எவருங் கருதிவிடலாகாது. மாதவி வலையில் விழுந்த கோவலன் நிலையைச் சுந்தரர் அடைந்ததாலும், கோவலனிடம் பணம் இருந்ததுபோற் சுந்தரரிடம் இல்லாமற் போனதாலும், **கோவலன் மேற்கொள்ளாத திருட்டுத்தொழிலைச் சுந்தரர் கையாண்டார்** என்றுமே உணர்ந்துகொள்க. அன்றியுந், திருட்டுத்தொழிலைத் தம் பிறப்புரிமையாகக்கொண்டு, கோயிற் பூசை செய்யும் மரபில் வந்த ஒரு பார்ப்பனனுக்குச் சுந்தரர் பிள்ளையாய்ப் பிறந்தமையால், அவர் ஒரு பூசாரியாய் அமர்ந்து வேலை பார்க்காவிட்டாலும், 'தான் ஆடாவிட்டாலுந் தன் சதை ஆடும்' என்ற முதுமொழிப்படியும், சுந்தரர், தம்மாற் காதலிக்கப்பட்ட பரவையாரை மகிழ்விப்பதற்காகவுமே அங்ஙனஞ் செய்தார் என்பதும், அவருக்கு உண்மையாகவே திருடவேண்டுமென்ற எண்ணம் இருந்ததில்லை என்பதும் ஈண்டுக் கருதற்பாலனவாம்.

யென்றும், அத்தகையினனை இறந்தவனோடு ஒப்பிட்டு எண்ணவேண்டுமென்றுந் திருவள்ளுவர் தமது குறளிலே,

" விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார் இல்
தீமை புரிந்தொழுகு வார். "

என்று ஆணித்திறமாகக் கூறியுள்ளார். எனவே, **இயற்பகையின் மனைவியைக் கைப்பற்றிக்கொண்டு போன சிவனையும் இறந்தவனோடு ஒப்பிட்டு எண்ணி, அவன் பெயரை மனத்தாலும் மறந்தும் நினையா திருத்தலே உண்மைத் தமிழ்மக்கள் செயற்பாலதாம்.**

இனி, இயற்பகையின் மனைவி, தம்மைத் தமது கணவன் இன்னொருவருக்கு மனைவியாக்கியபோது, தமது கற்பைக் காத்துக் கொள்வதற்காகக் கணவன் சொல்லுக்கு மறுசொற் பேசாமல் இசைந்தார் என்று சொல்லப்படுகிறது. கணவன் சொற்படி மனைவி நடக்க வேண்டுமென்பது, ஆரியர் கொள்கையேயன்றித் தமிழர் கொள்கையன்று. கணவனும் மனைவியும் ஒருவர்க்கொருவர் நல்லுரை கூறி, ஒருவரையொருவர் திருத்திச் செம்மை நெறியில் நிற்பதே தமிழர் மரபாகும். ஒருவன தன் மனைவியை இன்னொருவனுக்குக் கொடுப்பதென்பது எக்காலத்திலுந் தமிழ்மக்கள்பால் இல்லாத ஒரு நெறி தவறிய செயலாம். ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்ட ஒருத்தி இன்னொருவனைப் பார்த்து இச்சை கொள்ளாமல் இருப்பதற்காகவே பண்டைத் தமிழ்மக்கள் காதல்மண முறையைக் கையாண்டனர். காதலால் ஏற்படும் அன்பானது நீண்ட நாட்களாக ஒருவனை ஒருத்தியும் ஒருத்தியை ஒருவனும் நெருங்கிப் பழகுதலால் ஏற்படும் நெறிதவறா அன்பாதலால், அவர்கட்கு எத்துணை இடர்ப்பாடு வரினும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியமாட்டார் என்பதனையும் பண்டைத் தமிழர் உணர்ந்திருந்தனர். ஆகவே, காதல் மணமும் அதனால் ஏற்படும் நெறி தவறாமையும் பண்டைத் தமிழ் மக்கட்கு ஒரு சிறப்பாய் இருந்தது. ஆனால், ஆரியக் கொள்கை (Hindu Law) நம் நாட்டிற் பரவியபின், காதல் மணம் காற்றாய்ப் பறந்து கட்டுப்பாட்டு மணம் உண்டாயிற்று. இவ்விரும்பத்தகாத கட்டுப்பாட்டு மணமுறை

நம் நாட்டில் ஏற்பட்ட பின்னரே கவலைக்கிடமான நெறி தவறும் நிகழ்ச்சிகள் பல ஏற்படக் காரணமாயிற்று.

இனி, கற்பென்பது, கல்வியறிவினாலும் பகுத்தறிவாலும் ஏற்படும் ஒரு நேர்மையான ஒழுக்கத்தைக் குறிப்பதாகும். அதாவது, ஒருவன் ஒருத்தியை மணக்குங்கால், அவ்விருவருக்கும் இடையே ஏற்பட்ட அன்புக்கு மாறுபடாமல் நடப்பதாகச் செய்யப்படும் வாழ்க்கை உடன்படிக்கையின் ஒழுக்கமாகும். அவ்வித கற்பு முறை ஆண் பெண் ஆகிய இருபாலாராலும் கையாளப்பட வேண்டியதாகும். இதுபற்றிய திருவள்ளுவரும்,

> "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்று கூறிப் போந்தனர். அதாவது, ஒரு பெண் தன்னுடைய கணவனுக்குந் தனக்கும் இழிவுண்டாகாமலும், ஊரார் கற்புடையவள் என்று சொல்லக் கூடியதாகவும் நடக்கவேண்டுமென்பதாம். இங்ஙனமே ஒரு ஆடவனுந் தன் மனைவிக்கு இழுக்குண்டாகாமலும், அவளைவிட்டுப் பிரியாமலும் நடக்கவேண்டுமென்பது,

> "மடங்கலிற் சினைஇ மடங்க வுள்ளத்
> தடங்காத்தானை வேந்தர் உடங்கியைந்து
> என்னொடு பொருதும் என்ப, அவரை
> ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
> அவர்ப்புறங் காணேன் ஆயிற் சிறந்த
> பேரமர் உண்கண் இவளினும் பிரிக"

அதாவது, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னுந் தமிழ் மன்னன் ஒருவன், தன்னை எதிர்த்துப் போராட வந்த அரசர்களோடு போர்தொடுக்கச் சென்ற காலை, "நான் இந்த அரசர்களைப் போரில் வென்று, அவர்கள் புறங்காட்டி ஓடும்படி செய்யேனாயின், **அன்பிற் சிறந்த எனது மனைவியைப் பிரிந்த பழிக்கு ஆளாவேன்**" என்று ஆணைகூறிச் சென்றான் என்பதால் நன்கு புலனா

*கின்றது. இங்ஙனம், கணவன் மனைவியையும், மனைவி கணவனையும் உடலும் உயிரும்போல எண்ணி, ஒருவரை யொருவர் பிரியாத அன்போடு வாழ்வதே தமிழர் நெறி யென்றும், அதுவே கற்பு முறையென்றும் சொல்லப்படும் போது, இயற்பகையின் மனைவி தன்னுடைய கற்பைக் காத்தற்காகச் சிவன்பின் சென்றாள் என்று சொல்வது தமிழர்க்கு மானக்கேட்டை உண்டாக்கும் ஒரு செயலாம்.* **உயிரைக் கொடுத்தும் தம் மானத்தைக் காப்பாற்றுந் தமிழ்மக்கள் முன்னிலையில், ஒருவன் தன் மனைவியை இன்னொருவனுக்குக் கூட்டிக்கொடுத்தான் என்றும், அங்ஙனம் நிகழ்ந்ததுஞ் சிவனுடைய விருப்பத்தால் என்றும், அதனை மக்கள் நம்புதல் வேண்டுமென்றுஞ் சொல்லுகின்ற ஒரு புராணம் இருக்குமாயின், அதனை நெருப்பிலிட்டுக் கொளுத்தாமல் இன்னும் பார்த்துக் கொண்டிருப்பது எத்துணை முறைகேடான செயல் என்பதை எண்ணிப் பாருங்கள்.** *ஒரு கடவுள், ஒருவனுடைய மனைவியைத் தரும்படிதானா கேட்கவேண்டும்? வேறு பொருள் ஒன்றும் இல்லையா? இங்ஙனம் பிறன் ஒருவனுடைய மனைவியை விரும்பும் ஒருவனைத் தந்தையாகவுந் தனிப்பெரும் பொருளாகவும் எண்ணி வழிபடும் புல்லர்களின் அறிவை என்னென்று சொல்வது!*

*இனி, இயற்பகையிடம் வந்து அவர் மனைவியைக் கைப்பற்றிக்கொண்டுபோக வந்தவன் ஒரு பார்ப்பனனே என்பது, அவன், இயற்பகைக்கும் அவர் உறவினர்க்கும் போர் நிகழ்ந்தவுடன், எங்கோ ஓடி மறைந்துவிட்டான் என்பதால் நன்கு புலனாகின்றது. ஆனால், பிற்காலத்தில் புராணம் எழுதியவர்கள் இயற்பகையின் மனைவியோடு ஓடி மறைந்த பார்ப்பனனைச் சிவனாக்கிச் சைவசமயக் கொள்கையைத் தமிழ் மக்களிடையே பரப்பினர். இங்ஙனமே, பரவையாரிடந் தூது சென்ற கோயிற் பூசாரியான பார்ப்பனனையுஞ் சிவனாக்கி, அதனை எல்லாரும் நம்பும்படியுஞ் செய்தனர் என்றுணர்க.*

---

# ஏயர்கோன்கலிக்காமர் வரலாறு

இனி, சுந்தரர் சிவனைத் தூதனுப்பிய செய்தியைக் கேள்விப்பட்ட கலிக்காமர் என்ற ஒரு வேளாளர் சுந்தரரோடு பிணங்கித் தற்கொலை செய்துகொண்ட ஒரு நிகழ்ச்சியும் பெரிய புராணத்துட் காணப்படுகின்றது. அது வருமாறு: ஏயர்கோன்கலிககாமர் என்பவர் திருப்பெருமங்கலம் என்னும் ஊரிலிருந்த ஒரு வேளாளர் ஆவர். அவர், சுந்தரர் சிவனைப் பரவையாரிடந் தூதனுப்பிய செய்தியைக் கேள்விப்பட்டுச் சுந்தரர்மீது மிகவுஞ் சீற்றங்கொண்டிருந்தார். அதனை அறிந்த சுந்தரர் சிவனிடம் முறையிடச் சிவன் கலிக்காமருக்கு வயிற்றுவலியை உண்டாக்கி, அவரிடஞ் சென்று, 'சுந்தரனாலன்றி இந்நோய் தீராது' என்று சொன்னார். அங்ஙனமே சுந்தரரிடமுஞ் சென்று, 'கலிக்காமனுடைய வயிற்றுவலியை நீ போய்த் தீர்ப்பாய்' என்று சொல்லி மறைந்துவிட்டார். பின்பு, கலிக்காமர் தன்னுடைய நோயைச் சுந்தரன் தீர்ப்பதா என்று சினங்கொண்டு தம்மைத் தாமே தற்கொலை செய்துகொண்டார். சுந்தரர் அங்கு வந்து பார்த்தபோது, கலிக்காமர் இறந்து கிடந்ததைக் கண்டு, தாமும் அவர்போல இறக்க எண்ணி உடைவாளைக் கையிலே எடுத்தார். உடனே சிவன், தமது அருளினாலே கலிக்காமர் உயிர்பெற்றெழும்படி செய்தார். பின்னர், அவ்விருவருக்கும் நீங்காத நட்பு உண்டாயிற்று என்ற இவ்வளவே கதையின் சுருக்கமாகும்.

எனவே, இக்கதையிற் பேசப்பட்ட நிகழ்ச்சிகள் பெரிதும் ஆராய்ச்சிக்குரியனவல்ல என்றாலும், ஒரு தமிழனுடைய மனவுறுதியையும், வீரமொழியையுந், தீரச் செயலையும் இக்கதை நன்கு தெளிவுபடக் காட்டுகின்றதென்ற ஒரு காரணம் பற்றியும், தமிழ் வீரனான கலிக்காமரிடம், குற்றம்புரிபவர் சிவனடியார்களாய் இருந்தாலும், அவர்களுங் கண்டிக்கப்பட வேண்டியவர்களே என்ற பெருங் குணம் இருந்தது என்பதை இக்காலத்துச் சைவ முலாம் பூசப்பெற்ற தமிழ்மக்கள் எண்ணிப் பார்த்து உண்மை

அறியவேண்டும் என்ற பிறிதொரு காரணம் பற்றியுமே அதனை ஈண்டுக் குறிப்பிட்டோம். அன்றியும், கலிக்காமர் சிவனிடத்தில் உண்மையாகவே அன்புகொண்டிருந்தார் என்று கொள்வதற்கும் இல்லை. ஏனென்றால், கலிக் காமருக்கு ஏற்பட்ட வயிற்றுவலி சுந்தரனாலன்றித் தீராது என்று சிவன் அவருக்குச் சொன்னபோது, சிவனுடைய கட்டளையை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. சுந்தரனால் இந்நோய் தீருவதிலும் பார்க்க இறந்துவிடுவதே மேலென்று தம்மைத் தாமே தற்கொலை செய்துகொண்டார் என்ற உண்மை கதையாற் பெறப்படுவதால், கலிக்காமர் சிவ னிடத்தில் அன்புகொண்டிருந்தார் என்பது முழுப் பொய்யே யன்றி, ஒரு சிறிதும் உண்மையல்ல. ஆகவே, கலிக்காமர் இறந்திருந்ததைக் கண்ட சுந்தரர் தாமும் இறக்க எண்ணினார் என்பதும், சிவனருளாற் கலிக்காமர் உயிர்த் தெழுந்தார் என்பதும், பின்னர் சுந்தரருக்குங் கலிக்காமருக் கும் நட்புண்டாயிற்றென்பதும் தமிழனாகிய கலிக்காமரின் வீரச் செயலைப் பொய்யாக்கிச் சுந்தரர் என்ற பார்ப்பன னுக்குப் பெருமையுஞ் சிறப்பும் அளிப்பதற்காகவும், சிவனுக்கு உயர்வுகொடுத்து, மக்களுக்குச் சிவநம்பிக்கையை உண்டாக்குவதற்காகவும் பெரியபுராணம் எழுதியவர்களாற் புனைந்தெழுதப்பட்ட புளுகுரையாம் என்றுணர்க.

---

# சுந்தரர் திருட்டுத் தொழிலை விட்ட வரலாறு

இனி, சுந்தரர் தமக்குப் பொன் வேண்டும்போதெல்லாம் சிவனருளினாலே செங்கற்கள் பொற்கற்களாயும், ஆற்றி லிடும் பொன் குளத்திற் காணப்பட்டு எடுப்பதாயும், நெல் மலை உண்டானதாயும் சொல்லப்பட்ட ஏமாற்றுத் திருட்டுத் தொழிலைச் சில நாட்களுக்குள் விட்டுவிட்டார். எப்படி யென்றால், சேரமான் பெருமாள் என்ற ஒரு அரசன் அவருக்கு நண்பனானான். அதுமுதல் அம்மன்னன்

சுந்தரருக்கு வேண்டிய பொருள்களை அவ்வப்போது கொடுத்து வந்தான். ஆதலால், அதற்குப் பின் சுந்தரர் திருட்டுத் தொழிலை அறவே விட்டுவிட்டார் என்றே தெரிகிறது. எங்ஙனமென்றால், அவ்விருவருக்கும் நட்பு ஏற்பட்டபின், செங்கல் பொன்னாயிற்றென்றும், ஆற்றில் விட்ட பொன் குளத்திற் கிடைத்ததென்றும், தானாகவே நெல் மலை உண்டாயிற்றென்றுஞ் சொல்லப்படும் புதுமை நிகழ்ச்சிகள் போன்ற எதுவும் புராணத்திற் காணப்படவில்லையாதலால் என்க.

பொதுவாக, ஒருவனுக்குத் திருட்டுத்தொழிலில் எண்ணம் உண்டாக வேண்டுமானால், அவனுக்குச் சோம்பலும் வறுமையும் அவை காரணமாக ஏற்படுந் தீய எண்ணமும், தீய நட்பும் இயற்கையாய் அமைந்திருத்தல் வேண்டும். 'சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்' என்று ஔவையாரும், "குடியென்னுங் குன்றா விளக்கம் மடி என்னும், மாசூர மாய்ந்து கெடும்" என்று வள்ளுவரும் கூறிப் போந்தனர். இக்குணங்கள் சிறப்பாகச் சுந்தரரிடம் காணப்பட்டன. அவருக்கு எந்த வேலையுமில்லாததால், சோம்பலும் வறுமையும் அவர்கூடவே இருந்தன. அதோடு பிறர் பொருளை மயக்கிப் பறிக்குந் தீய குலத்திற் பிறந்த பரவையார் அவருக்குக் காமக்கிழத்தியாய் வாய்த்ததால் தீய எண்ணமும் அவருக்கு உண்டாவதாயிற்று. ஆகவே, சுந்தரர் பொருள்தேட வகையறியாது அங்ஙனந் திருட்டுத் தொழிலை மேற்கொண்டார் என்க. பின்னர், பொருள் வளம் நிறைந்த ஒரு மன்னனின் நட்புக் கிடைக்கவே, அவர் தமது களவு தொழிலை விட்டுவிட்டார் என்பதும் ஓர்ந்து உணரற் பாலதாம்.

இனி, அவ்வரசனுக்குஞ் சுந்தரருக்கும் நட்புண்டான விதம் எப்படியென்றால், ஒரு பார்ப்பனனே சிவக்கோலம் எடுத்துச் சென்று சேரமான் என்னும் அரசனைக் கண்டு, சுந்தரரைப்பற்றி வானமளாவப் புகழ்ந்து பேசி அவ்விருவருக்கும் நட்புண்டாக்கினான் என்பதும் பெரியபுராணக் கதையால் அறியக்கிடக்கின்றது. இங்ஙனஞ் சுந்தரருக்குச் சேரமான் என்னும் அரசனுடைய நட்பைப் பார்ப்பனர்

உண்டாக்கியது எற்றுக்கென்றால், நாம் முன்னரே எடுத்துக் காட்டியபடி, சுந்தரரைத் தங்கள் பிழைப்புக்குக் கருவியாகக் கோயில்கள் தோறுஞ் சென்று பதிகங்கள் பாடுவதற்காகப் பயன்படுத்திக் கொண்ட பார்ப்பனர்கள், சுந்தரர் பொருள் இல்லாது மிடிப்படுவதைக் கண்டு, அவருடைய துன்பத்தை நீக்கி, அவரால் தாம் அடையக் கூடிய நன்மை கருதியே சேரமானின் நட்புச் சுந்தரருக்குக் கிடைக்குமாறு செய்தனர் என்பதும் ஈண்டு ஓர்ந்து உணரற் பாலதாம்.

---

# முதலையுண்ட பிள்ளை பிழைத்த வரலாறு

இனி, சுந்தரர் முதலையுண்ட பிள்ளையை அழைத்துக் கொடுத்த வரலாற்றையுங் கதையிற் கண்டபடி வைத்து ஆராய்வோம். அக்கதை வருமாறு: திருப்புக்கொளியூர் என்று சொல்லப்படும் அவினாசி என்னும் ஊரிலே, அய்ந்தாண்டு அகவையுடைய இரண்டு பார்ப்பனச் சிறுவர்கள் ஒரு குளத்திலே குளிக்கச் சென்றபோது, ஒருவனை அக்குளத்தில் இருந்த முதலை விழுங்கிற்று; மற்றவன் பிழைத்துக்கொண்டான். இது நிகழ்ந்து சில ஆண்டுகள் ஆயின. பிழைத்த பிள்ளைக்குப் பூணூற் சடங்கும் அதற்கேற்ப மங்கல ஒலியும் நிகழ்ந்தது. முதலையுண்ட பிள்ளை வீட்டில் அழுகை ஒலி நிகழ்ந்தது. அப்போது அங்கே வந்த சுந்தரர், அவ்விரு ஒலியும் ஒருங்கே நிகழ்ந்த காரணத்தை வினவியறிந்து, அப் பிள்ளையை மீட்டுக் கொடுக்க எண்ணி, அந்தக் குளக் கரையிலே போய் நின்றுகொண்டு, 'அவினாசியில் எழுந் தருளியிருக்கின்ற சிவனே, முதலையுண்ட பிள்ளையைத் திரும்பக் கொண்டுவந்துவிடும்படி கால (இயம) னுக்குச் சொல்' என்று ஒரு பதிகம் பாடினார். இங்ஙனம் நாலு பாடல்கள் பாடுவதற்குள்ளே, காலன் அந்தப் பிள்ளையி

னுடைய உயிரைக் கொண்டுவந்து அக்குளத்திலுள்ள முதலை வயிற்றினுள்ளே, முந்தின உடம்பைச் சென்ற ஆண்டுகளின் வளர்ச்சியையும் உடையதாகச் செய்து, அதனுள்ளே புகுத்திவிட்டான். உடனே முதலை அந்தப் பிள்ளையைக் கரையிலே கொண்டுபோய் உமிழ்ந்தது. இதுவே கதையின் சுருக்கமாகும்.

முதலை ஒரு பிள்ளையை விழுங்கும் என்பது மட்டும் மறுக்கமுடியாத உண்மையாகும். அது இக்காலத்திலும் நிகழ்கின்றது. இக்காலத்தில், குழந்தைகளை மட்டுமல்ல, ஆடு மாடு முதலான விலங்குகளையும் முதலை விழுங்குவதை நாம் பார்க்கிறோம். ஆனால், முதலை, தான் விழுங்கிய எதனையுங் கரையிற் கொண்டுவந்து உமிழ்வதை மட்டும் இக்காலத்தில் நாம் பார்ப்பதில்லை. இக்காலத்தில் முதலைகளால் விழுங்கப்படும் உயிர்களை மீட்டுக் கொடுப்பதற்கு ஒரு சுந்தரரும், அவர் கட்டளைப்படி நடக்கும் ஒரு சிவனும், சிவன் பணித்ததை மேற்கொண்டொழுகும் ஒரு காலனும் ஏன் இல்லாது போனார்களோ தெரியவில்லை! முதலையால் விழுங்கப்பட்ட குழந்தையின் உடம்பு பல ஆண்டுகள் வரை அதன் வயிற்றுள் எப்படி இருக்கமுடியும்? காலன் அந்த உயிரைக் கொண்டுவந்து முதலையின் வயிற்றினுள்ளே புகுத்தி விட்டதாகவுஞ் சொல்லப்படுகிறதே! அந்தக் குழந்தையின் உடம்பு புதிதாகச் செய்யப்பட்டதா? அல்லது பழைய உடம்பு தானா? என்பது தெரியவில்லை. புதிதாயின், அவ்வுடம்பு எதுகொண்டு செய்யப்பட்டதென்பது தெரியவேண்டும்! பழைய உடம்பாயின், அதுவரை அந்த உடம்பு யாருடைய பாதுகாப்பில் இருந்ததென்பதுந் தெரியவேண்டும்! சுந்தரர் நாலு பாடல்கள் பாடுவதற்குள், அந்தப் பிள்ளையின் உயிரும்—உடம்பும்—வளர்ச்சியும் உண்டாகும்படிச் செய்து விட்டதாகவுஞ் சொல்லப்படுகிறது. சுந்தரர் அங்கு சென்ற காலத்தில், அந்தக் குழந்தையை விழுங்கிய முதலை வாழ்ந்த குளம் நீரற்று வறண்டுபோய் இருந்ததாகவும், சுந்தரர் பதிகம் பாடிய பின்னரே அக்குளத்தில் நீருண்டாகி, பல ஆண்டுகட்கு முன் குழந்தையை விழுங்கிய முதலையும் அங்குவந்து சேர்ந்து, குழந்தையைக் கக்கியதாகவும்

கதையிற் காணப்படுகின்றது. நீரற்று வறண்டுபோய்க் கிடந்த குளத்துக்கு நீர் எங்கிருந்து—எப்படி வந்ததென்பது தெரியவில்லை. ஒருவேளை சிவனாரின் சடையில் வாழ்ந்துவருவதாகச் சொல்லப்படும் கங்கை அம்மையார் நீரைப் பெய்து அக்குளத்தை நிரப்பினளா? அல்லது மழை பெய்து குளம் நிரம்பிற்றா? அன்றி, நிலத்திலிருந்து ஊற்றெடுத்துக் குளம் நிரம்பிற்றா? என்பன போன்ற அய்யப்பாடுகளை நீக்கிக்கொள்வதற்குப் புராணத்துட் கருவியில்லை. இனி, அக்குளத்திலிருந்து குழந்தையை விழுங்கிய முதலை, அக்குளத்தில் நீரற்றுப் போனபின் எங்குச் சென்று வாழ்ந்ததோ, அதுவுந் தெரியவில்லை. ஆனால், சுந்தரர் நாலு பாடல்கள் பாடுவதற்குள், குளத்தில் நீருண்டாகி முதலையும் அங்கு வந்து சேர்ந்து குழந்தையைக் கக்கிவிட்டதாகவும், இவை எல்லாம் சிவனுடைய கட்டளையின்படி காலனாற் செய்யப்பட்டனவாகவுமே கதையிற் காணப்படுகின்றது. இந்நிகழ்ச்சி எப்படியிருக்கிறதென்றால், மலடி மைந்தன் முயற்கொம்பை ஏணியாக அமைத்து வானத்திற்குச் சென்று அங்கிருந்த மலரைப் பறித்துக்கொண்டு வந்தான் என்று சொல்வதுபோலவே இருக்கிறது. மலடிக்கு மகன் ஏது? முயலுக்குக் கொம்பேது? வானத்தில் மலர் ஏது? என்பவைகளை உலகுக்கு எடுத்துக்கூறி அவற்றின் பொய்ம்மையை விளக்கும் பேரறிஞர்கள், நீரற்று வறண்டிருந்த குளத்துக்குத் திடீரென்று நீர் எப்படி வரும்? அதில் முதலை எப்படி இருக்கமுடியும்? பல ஆண்டுகட்கு முன் விழுங்கப்பட்ட குழந்தையின் உடம்பு ஒரு முதலையின் வயிற்றுக்குள் எப்படியிருந்து வளரமுடியும்? என்பவைகளையும் தம் அறிவுகொண்டு அலசிப் பார்க்கவேண்டுமன்றோ! அங்ஙனமன்றி, 'முழுப் பூசனிக்காயைப் பறிமாறின சோற்றில் மறைப்பது' போன்ற அண்டப் புளுகுகளை எழுதி வைப்பதும், அவை எல்லாம் சிவனுடைய திருவருளால் நடைபெற்றனவென்று கூறி மக்களை ஏமாற்றுவதும் எவ்வளவு வெறுக்கத்தக்க செயல்களாய் இருக்கின்றன பாருங்கள், அன்பர்களே!

இனி, காலனும் அவனுக்குக் காலனான சிவனும் ஒரு இடத்தில் இருந்துதான் இவ்வேலைகளைச் செய்து முடித்தனரா? என்பதுந் தெரியவில்லை. மார்க்கண்டேயருக்குச் சாவா வரங்கொடுத்து அவரை என்றும் உயிரோடு இருக்கும்படி செய்ய வந்த சிவனும் மார்க்கண்டேயரின் உயிரை வவ்விக் கொண்டுபோக வந்த காலனும் வெவ்வேறு இடங்களிலிருந்து வந்ததாகவும், ஒருவர் வந்தது ஒருவருக்குத் தெரியாமற் போகவே, அவ்விருவருக்கும் பெரும்போர் நிகழ்ந்து சிவன் பக்கமே வெற்றி கிடைத்ததென்றும் ஒரு கதை சொல்லப்படுகின்றது. ஆனால், இங்கே காலனுங் கால காலனான சிவனும் ஒருங்கிருந்து வேலையை நடத்தினார்கள் என்று சொல்லப் படுகிறது. மார்க்கண்டரின் நிகழ்ச்சிக்குப்பின் அவ்விருவருக்கும் நட்புரிமை உண்டாயிற்றா? இவற்றை எல்லாம் நமது சைவப் பெருமக்கள் ஆராய்ந்து பாராதது ஏனோ? கடவுள் முலாம் பூசப்பெற்ற கதைகளை எல்லாம் நம்ப வேண்டுமென்பது இவர்கள் கொள்கையா? அல்லது பகுத்தறிவுக்கு வேலைகொடுத்து உண்மை அறியப்படாதென்பது இவர்களின் இன்னொரு கொள்கையா? சிவன் விருப்பு வெறுப்பு அற்றவர்; அவர் எதனையுஞ் செய்வதில்லை; சாட்சி மட்டுமாய் இருப்பவர் என்று சொல்வதை உண்மையெனக் கொள்ளுஞ் சைவ அன்பர்கள், இவை எல்லாஞ் சிவனால் நடைபெற்றனவென்பதை எப்படி நம்புகின்றனர்?

இனி, சிவனுக்கு வடிவம் எதுவும் இல்லை; அவர் அப்பனாயுமில்லை; அம்மையாயும் இல்லை; அல்லது இரண்டுஞ் சேர்ந்ததாயும் இல்லை; இவை எல்லாம் மக்களாற் கற்பனை செய்யப்பட்டுச் சிவனை வழிபடும் முறைகளாம் என்றுஞ் சில சைவப் பெரியார் கூறுகின்றனர். இவர்களாவது இத்தகைய கதைகளை ஒதுக்கித் தள்ளுகின்றனரா? இல்லையே! இவர்கள்தாம் அத்தகைய கதைகளுக்கு ஒட்டுப் போட்டு, பதவுரை—விரிவுரை—அகலவுரை—நிகளவுரை—பொழிப்புரை—கருத்துரை முதலான விளக்க உரைகள் எழுதி விற்பனை செய்து வயிறு கழுவுகின்றனர். தனிப்பட்ட சிலரின் வயிற்றுப் பிழைப்புக்காகக்

கொள்கையை விட்டுக்கொடுப்பதும், உண்மையை மறைப்பதுமான முறைதவறிய செயல்களை இத்தகையினர் கையாள்வது, பல நூறாயிரவரின் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கெடுப்பதாகும் என்பதை அவர்கள் உணர்தல் வேண்டும். **புராணங்களை நம்புகின்றவன் ஒருவனுடைய நண்பனாகவும் பலருடைய பகைவனாகவும் ஆகின்றான்** என்பதையும் அவர்கள் ஊன்றி உணர்தல் வேண்டும்.

---

# சுந்தரர் கைலை அடைந்த வரலாறு

இனி, சுந்தரர் தமது வேலையை முடித்துக்கொண்டு மீண்டுங் கைலையை அடைந்த வரலாற்றையுங் கூறி இதற்கு முடிவு காண்போம். சுந்தரர், தமது நண்பனான சேரமானுடன் திருவஞ்சைக்களம் என்னும் ஊரில் இருந்த காலத்திலே, ஒருநாள், சிவன் தமது ஏவலாட்களான பிரம விட்டுணுக்களையும், மற்றுங் கணங்கள் கணத்தலைவர்களையும் அழைத்து, 'நீங்கள் வெள்ளையானை ஒன்றைக் கொண்டுபோய் நமது தோழனான சுந்தரனை இங்கே அழைத்துவாருங்கள்' என்று கட்டளையிட்டார். உடனே அவர்கள் வெள்ளையானையுடன் புறப்பட்டுப் போய்த் திருவஞ்சைக்களத்தை அடைந்து, சுந்தரரை வெள்ளை யானையின்மீது ஏற்றிக்கொண்டு புறப்பட்டார்கள். இதனைக் கேள்விப்பட்ட சேரமான்பெருமாள் தனது குதிரையொன்றின் செவியில் அய்ந்தெழுத்தை (பஞ்சாட்சரத்தை)ச் சொல்லி அதன் மேலேறி வான்வெளியிற் பறந்து சுந்தரருக்கு முன்னதாகச் சென்றார். இதனைக் கண்ட சேரமானின் பாதுகாவற் படையினர் எல்லாரும் வானை நோக்கிப் பறந்து அவ்விருவருக்கும் முன்னதாகச் சென்றார்கள். சுந்தரர் கைலைக்குப் போகும்போது, 'தானெனை முன்படைத்தான்' என்னும் பதிகத்தைப் பாடிக்கொண்டு போய், அதனைக் கடல் மன்னனான வருணனிடத்திலே கொடுத்தார். அவன் அதனைத் திருவஞ்சைக்களத்திலே கொண்டுவந்து கொடுத்துவிட்டுப்

போனான். சுந்தரர் வெள்ளையானையின்மீது ஏறிக் கொண்டு வானத்தில் பறந்து சென்றதை உபமன்னியு என்ற ஒரு முனிவர் பார்த்து, அவருடைய மகிமையையும், அவராற் பாடப்பட்ட திருத்தொண்டத்தொகையிலுள்ள அடியார்கள் வரலாறுகளையுந் தமது மாணாக்கர்கட்குச் சொன்னார் என்ற இவ்வளவே சுந்தரரைப் பற்றிய கதையின் முடிவாகும்.

இக்கதையிற் பேசப்படும் வெள்ளையானை என்பது, சிவ உலகத்திலுள்ள யானைகளின் நிறத்தைக் குறித்துச் சொல்லப்பட்டது போலும். ஆரியர் வெள்ளைநிறமாய் இருப்பதுபோலவே, அவர்கள் நாட்டிலுள்ள மற்றை விலங்கு பறவை முதலானவைகளும் வெள்ளை நிறமாய் இருக்கின்றனபோலும். ஏனென்றால், இந்நாவலந்தீவிலுள்ள யானைகள் எதுவும் வெள்ளைநிறமுடையனவாய் இருந்ததாகவோ—இருப்பதாகவோ நாம் கேள்விப்பட்டதில்லை. ஆதலால், அதன் நிறத்தைப்பற்றி ஈண்டு நீண்ட ஆராய்ச்சி வேண்டுவதில்லை. ஆனால், கைலையில் இருந்துவந்த யானை பறக்கும் இயல்பு பெற்றிருந்ததாகச் சொல்லப் படுகிறது. கைலையின் அடிவாரத்தில் இருந்த உபமன்னியு முனிவர், தாம், யானை பறந்து சென்றதைப் பார்த்ததாகக் கூறுகின்றார். நாலு கால்களும் அதற்கேற்ப நடக்கும் இயல்பும் பெற்றுள்ள ஒரு யானை பறந்து சென்ற தென்றால், அது வியத்தற்குரிய ஒரு செயலாம். ஆனால், நம்மவரிற்கூடச் சிலருக்குப் பித்தந் தலைக்கேறிவிட்டால், நடப்பன பறப்பன போலவும், நிற்பன நடப்பன போலவும், கட்டிடங்கள் ஆடி அசைவனபோலவும், நிலத்தில் நிற்பவர் மேல்நோக்கிச் செல்வது போலவுமான நிகழ்ச்சிகள் ஏற்படுவதுண்டு. அதுபோலவே உபமன்னியு முனிவருக்கும் அங்ஙனம் ஏற்பட்டதென்று சொல்லுவதற்கில்லை. ஏனென்றால், சிவ உலகம் என்று சொல்லப்படும் கைலை யானது, மேலே அதாவது வான்வெளியைக் கடந்து செல்லும் ஒரு இடத்தில் இருப்பதாகத்தான் வேதம் முதற் புராணம் ஈறாகவுள்ள மதநூல்கள் எல்லாம் நுவல்கின்றன. ஆதலால், உபமன்னியுவுக்கு உள்ளபடியே பித்தமுமில்லை, தலை கிறுகிறுப்புமில்லை. எனவே, இஞ்ஞான்றுள்ள சில

சைவப் பெரியார்களுக்கு இருப்பதுபோன்ற ஆரியப் பித்தமும் சிவமயக்கமுமான ஒரு பகுத்தறிவற்ற நோயே அவரிடமும் இருந்ததென்று நாம் எண்ணவேண்டியிருக் கிறது.

அன்றியும், சுந்தரருக்காகக் கைலையிலிருந்து வந்த யானை பறந்து சென்றதென்று சொல்லப்படுவதோடு, சேரமானுடைய மலையாளநாட்டுக் குதிரையும் அவரை ஏற்றிக்கொண்டு சுந்தரருக்கு முன்னால் பறந்து சென்ற தாகவுஞ் சொல்லப்படுகிறது. அதுவும் அய்ந்தெழுத்தாகிய 'நமசிவய' என்ற சொல்லைச் செவியில் சொன்னவுடன், அக்குதிரை வானை நோக்கிப் பறந்ததாகச் சொல்லப் படுகிறது. இந்நாட்டிலுள்ள யானை குதிரை முதலான விலங்குகளும் பறக்கும் என்றால், சுந்தரருக்கு மட்டும் கைலையில் இருந்து வெள்ளையானை வரவேண்டிய காரணம் என்ன? சுந்தரர், இங்குள்ள யானையோ—குதிரையோ—நரியோ—கழுதையோ ஒன்றின் செவியிற் சேரமான் சொன்ன அய்ந்தெழுத்தைச் சொன்னால், அது பறவாதா? சேரமானிடமிருந்த சிவ அன்பு சுந்தரரிடம் இல்லையா? பின் இவை எதைக் காட்டுகின்றன? சுந்தரர் ஒரு பார்ப்பனராதலால், அவருக்கு உயர்வு கொடுத்ததை நம்மவருக்குக் காண்பிப்பதற்காகவும், தமிழ் மக்கள் சூத்திரராதலால், அவர்களுக்கு முழுமுதற் பெருங் கடவுள் என்று புராணப்பறை சாற்றப்படுஞ் சிவனுடைய் மதிப்புச் சின்னங்கள் எதுவும் அளிக்கப்படமாட்டா தென்பதைக் காட்டுவதற்காகவுமே, சிவன் தமது வெள்ளை யானையையும் தமது ஏவலாட்களான பிரம விட்டுணுக்கள் முதலானவர்களையும் பார்ப்பனனாகிய சுந்தரருக்கு அனுப்பியதாகச் சொல்லப்பட்டது. அன்றியுஞ் சுந்தரருடன் சென்ற **சேரமான் என்ற தமிழ் மன்னனுக்குக் கைலை யில் இடங் கிடைக்கவில்லை.** அவர் கைலையை அடைந்த வுடன் அங்குள்ள சிவகணங்கள் அவர் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டன. இங்ஙனம் பெரியபுராணத்தில் இருக்கின்றது. இது, **பார்ப்பனரல்லாத மற்றையவர்கள் எப்படிப்பட்டவர்களாயினும் அவர்களுக்குக் கைலையில் அதாவது மோட்ச விடுதியில் இடம் இல்லை** என்பதை

நன்குத் தெளிவுபடுத்துகின்றது. இதுபோலவே, தமிழ் வீரனாகிய திருநாவுக்கரசருக்கும் மோட்ச விடுதியில் இடங் கிடைக்கவில்லை என்பதை எமது 'இந்து மதமுந் தமிழரும்' என்னும் நூலில் விளக்கியுள்ளோம். ஆனால், பெரிய புராணம் எழுதிய பிற்காலத்தவர், தமிழ்மக்களை வஞ்சித்து அவர்கள் பொருளைப் புராணங்கள் பேராலும் அவற்றிற் பேசப்படும் கடவுளர் பேராலும் ஏமாற்றிப் பறித்துப் பார்ப்பனரின் உடம்புவளையா வாழ்க்கைக்குப் பயன் படுத்துவதற்காகவே, சேரமான் 'ஞானவுலா'ப் பாடியதால், சிவன் அவரையுந் தமது விடுதியிற் சேர்த்துக்கொண்டார் என்ற புனைவுரையைப் பின்னர் புராணத்தில் எழுதி வைத்தனர் என்றுணர்க. அற்றேல், விருப்பு வெறுப்பற்ற வரும் வேண்டுவார் வேண்டியதை ஈபவருமாகிய சிவன் என்று சொல்லப்படும் அந்தப் பேரறிவுப் பெரும்பொருளும், அவர்தம் மன்றத்துக் குழுவினரும் **பார்ப்பனனான சுந்தரருக்கு** வரவேற்பளித்து அவரைத் தம்முள் ஒருவராகச் சேர்த்துக்கொண்டதற்கும், சுந்தரரிடத்தும்—அவர் தோழனான சிவனிடத்தும்—மற்றைச் சிவனடி யாரிடத்தும் நீங்காத அன்பு பூண்டொழுகி வந்த **தமிழ் மன்னனான சேரமானுக்கு** அங்ஙனம் ஒன்றும் செய்யாது அவரைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டதற்கும் காரணம் சிவ அன்பர்கள் கூறவேண்டுமன்றோ! அங்ஙனமன்றி, வறிதே பெரியபுராணத்தைத் தம்மதென்று உரிமை பாராட்டி மகிழ்வதாற் சைவத் தமிழறிஞர்க்குப் போந்த பயன் யாதோ, யாம் அறிகிலோம். இனிச் சேரமானுடன் சென்ற அவர் மெய்க்காப்பாளருக்குச் சிவவிடுதியில் இடம் அகப்பட்டதாகப் பெரியபுராணத்திற் குறிப்பிடப்பட வில்லை என்பதும் ஊன்றி நோக்கிப் பார்ப்பது தமிழ்மக்கள் கடனாம்.

இனி, சுந்தரர், தாம் பாடிய தேவாரப் பதிகத்தை வருணனிடம் கொடுக்க, அவன் அதனைக் கொண்டுவந்து திருவஞ்சைக்களத்திற் சேர்த்ததாகச் சொல்லப்படும் பகுதியும் ஆராய்ச்சிக்குரியதாம். ஈண்டு வருணன், சுந்தரரின் தபாற்காரனாய் வேலை பார்த்ததைப்பற்றி எவரும் வியப்படைய வேண்டியதில்லை. ஏனென்றால்,

சிவனே சுந்தரரின் தூதனாக அமர்ந்து வேலை பார்த்தார் என்று சொல்லப்படும்போது, வருணன் அவருக்குத் தபாற் காரனாய் வேலை பார்த்ததைப்பற்றி வியப்படைய வேண்டியதுமில்லை; அதனால் அவனுக்கு இழுக்குண் டாயிற்றென்று எண்ணவேண்டியதும் இல்லை. ஆனால், வருணன் என்பது நீரா? அல்லது ஒரு ஆளா? என்பது தான் இங்கே அய்யப்பாடாய் எழுகின்றது. நீரைத்தான் வருணன் அல்லது மழை என்று அழைப்பதாகப் புராணங் கள் நுவல்கின்றன. ஆயின், ஈண்டு வருணன் ஒரு ஆள் வடிவில் நின்று பேசப்படுகின்றான். இதன்படி பார்ப்ப தாயின், நீர் நிறைந்த கடற்பரப்புக்குத் தலைவனாகவுள்ள வருணன் இருப்பது கைலையிலா? அன்றிக் கடலிலா? கடலிலாயின், அவனுடைய அரண்மனை (Palace) கடற் பரப்பின் எப்பகுதியில் இருக்கின்றது? என்ற கேள்விகள் எழுகின்றன. ஆனால், புராணம் எழுதியவர்கள் வருணன் என்னாமல் காற்று என்று எழுதியிருப்பார்களானால், இத்துணை அய்யப்பாடுகள் எழுவதற்கு இடமிராது. சுந்தரர், காற்றைத் தமது தபாற்காரனாக அமர்த்தி அவனிடம் அந்த ஏட்டைக் கொடுத்தனுப்பினார் என்று எழுதியிருந்தால், அந்த ஏடு காற்றினால் உந்தப்பட்டு வந்து நிலத்தில் விழுந்ததென்பதை ஒருவாறு ஒப்புக்கொண்டாலும் சுந்தரராற் குறிப்பிடப்பட்ட திருவஞ்சைக்களத்திலே அது வந்து விழுந்ததென்பதைப் பகுத்தறிவுடைய உலகம் ஒருக்காலும் ஒப்புக்கொள்ளாது. அன்றியும், கைலைக்கும் திருவஞ்சைக்களத்துக்கும் இடையே கங்கை யமுனை போன்ற ஒரு ஆறு ஓடிக்கொண்டிருக்கிறதென்றும், அந்த ஆற்றிலே சுந்தரர் தமது ஏட்டை இட்டார் என்றும், அது திருவஞ்சைக்களத்துக்கு வந்தபோது அங்குள்ளவர்கள் அதனைக் கண்டு எடுத்தார்கள் என்றும் எண்ணுவதற்கு அப்படி ஒரு ஆறு இருந்ததாகவோ—இருப்பதாகவோ கொள்வதற்கும் எவ்வித சான்றுகளும் இல்லை.

எனவே, தண்ணீர் ஏட்டைக் கொண்டுவந்து குறிப் பிட்ட இடத்திற் சேர்த்து—யானையும் குதிரையும் பறந்து சென்றன—முதலை உண்ட பிள்ளை பல ஆண்டுகள்

கழித்துப் பிழைத்தது—தற்கொலை செய்துகொண்ட கலிக்காமர் உயிர்த்தெழுந்தார்—இயற்பகை தன் மனைவியைச் சிவனுக்குக் கூட்டிக்கொடுத்தார்—கடவுள் பரவை வீட்டுக்குத் தூது சென்றார்—ஆற்றிலிட்ட பொன் குளத்திற் கிடைத்தது — செங்கற்கள் பொற்கற்களாயின — திருத் தொண்டத்தொகை சுந்தரராற் பாடப்பட்டது—சிவனைக் கடவுள் என்று கூறியது—சுந்தரரைத் தமிழன் என்றது—கடவுளுக்கு நெற்றிக்கண் குறித்தது—சிவன் சுந்தரரைத் தடுத்தாட்கொண்டார்—சிவன் நஞ்சுண்டு பிழைத்தார்—திருப்பாற்கடலிற் சாவா மருந்து இருந்தது—மேருவும் ஆதி சேடனும் மத்தாகவுங் கயிறாகவுங் பயன்பட்டன—சுந்தரர் கண்ணாடியிற் பிறந்தார்—பொல்லாப் பிள்ளையார் நம்பியாண்டார் நம்பிக்குப் பெரியபுராணக் கதையைச் சொன்னார் என்ற இத்துணைப் புதுமை நிகழ்ச்சிகள் எல்லாம் இக்கதையிற் பேசப்பட்டதும், இவை எல்லாம் சிவனுடைய திருவருள் அல்லது திருவிளையாடல் என்று கூறப்பட்டதும், பார்ப்பனருக்கு உயர்வு கொடுத்து அவர்களின் வயிற்றுப் பிழைப்பை நாடி எழுதப்பட்ட புளுகுக் கதைகளாம் என்பதும், சிவனிடத்து மூடநம்பிக்கையை உண்டாக்க எழுதப்பட்ட புனைவுக் கதைகளாம் என்பதும் தமிழ்மக்களால் ஊன்றி உணரப்பட்டு, அவற்றிற்கு ஆங்காங்கு குறிப்பிட்டுள்ள ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கடைப்பிடித்து, இனியும் இத்தகைய புராணச் சுழல்களில் அகப்பட்டு மிடிப்படாமல் இருப்பதே அறிவுடைமையாகும்.

---

## நந்தனார் வரலாறு

இனி, அக்காலத்துப் பார்ப்பனர்கள், நம்மவரிற் பலரைத் தீண்டப்படாதவர்கள் என்று விலக்கி வைத்தது மன்றிப் பின்னும் அவர்களை எவ்வளவு துன்புறுத்தினார்கள் என்பதைப் பெரியபுராணத்தில் வரும் திருநாளைப்போவார் வரலாற்றால் நன்கு அறியலாம். நந்தனார் என்னும் புலையன் ஒருவன் ஆதனூர் என்னும் ஊரில்

பிறந்திருந்தான் என்றும், அவன் அவ்வூரிலுள்ள ஒரு பார்ப்பனனுடைய வயலுக்குப் பண்ணையாளாய் அமர்ந்து வேலை பார்த்து வந்தான் என்றும், அவன் கடவுளிடத்து அன்புடையவனாய் இருந்ததால், பல கோயில்களுக்குஞ் சென்று ஆங்காங்குள்ள கடவுளரைக்கண்டு வணங்கவேண்டு மென்ற விருப்பம் மிகுதியுமுடையவனாய் இருந்தான் என்றும், அங்ஙனஞ் செய்வதற்குப் பார்ப்பனனின் பண்ணை வேலை தடையாய் இருந்ததால், 'நாளைக்குப் போவேன்' 'நாளைக்குப் போவேன்' என்று சொல்லிக்கொண்டு இருந்ததைக் கண்ட அவ்வூரார் அவனைத் திருநாளைப் போவார் என்று அழைத்தார்கள் என்றும், வரவர நந்தனாருக்குக் கடவுளிடத்தில் அன்பு நெருங்கிக்கொண்டு வந்ததால், எப்படியாவது சிதம்பரஞ் சென்று கடவுளைக் காணவேண்டுமென்று முடிவு செய்தவராய்ப் பார்ப்பனனிடம் முறையிட்டுக்கொண்டார் என்றும், அதற்கு அந்தப் பார்ப்பனன் 'நமது பண்ணை வேலைகள் எல்லாவற்றையும் முடித்துத் தந்துவிட்டுப் போ' என்று சொன்னதாகவும், அதுகேட்ட திருநாளைப்போவார் பெரிதும் வருந்தி, எப்போ நாற்றிடுவது! எப்போ நாற்று நடுவது! எப்போ அது விளைந்து அறுவடையாவது! எந்தக் காலம் நான் தில்லைக்குப் போய்க் கடவுளைக் காண்பது! என்றெல்லாம் எண்ணியவராய்க் கடவுளை இடைவிடாது நினைந்து கொண்டிருந்தார் என்றும், அதுகண்ட அருட்பெருங் கடவுள் பார்ப்பனனின் வயல்கள் எல்லாம் என்றுமில்லாத விளைவோடு அறுவடைக்குரியதாக ஆகும்படி ஒரு விநாடியிற் செய்தார் என்றும், அவ்வியத்தகு செயலைக் கண்ட பார்ப்பனன் திருநாளைப்போவாரை வணங்கி விடை கொடுத்தான் என்றும், அங்ஙனம் விடைபெற்றுச் சிதம்பரத்தை அடைந்த நந்தனார், தம்முடைய இழி பிறப்புக் கோயிலுட் செல்லத் தடை செய்கிறதே என்று வருந்தியதாகவும், நடராசர் அவருக்குக் கனவிலே தோன்றி, 'நீ இந்த இழிபிறப்பு நீங்கும்படி நெருப்பிலே மூழ்கி எழுந்து, பார்ப்பனர்களோடும் நம்முடைய கோயிலுக்கு வருவாய்' என்று அருளிச் செய்து, தில்லைவாழ் பார்ப்பனர் கனவிலுந் தோன்றித் திருநாளைப்போவார் பொருட்டு நெருப்பு வளர்க்கும்படி கட்டளையிட்டார் என்றும்,

அங்ஙனம் வளர்க்கப்பட்ட நெருப்பில் நந்தனார் மூழ்கிப் பார்ப்பன வடிவில் தோன்றி வெளிப்பட்டுக் கோயிலுட் சென்று, கடவுளைக் காண்பதாகிய பெரும் பேற்றை அடைந்து, கடவுளுடன் இரண்டறக் கலந்துவிட்டார் என்றும் பெரியபுராணத்துட் காணப்படுகின்றது.

---

# நெல் விளைந்த புதுமை

எனவே, சிவனார் நெல் விளைத்த புதுமையை முதற் கண் ஆராய்வோம். நந்தனாருடைய அன்புக்கு அடிமை யான கடவுள், பார்ப்பனனுடைய வயல்கள் எல்லாம் ஒரு விநாடியில் விளைந்து அறுவடைக்குரியதாகும்படி செய்தார் என்று கூறப்படுகிறது. இது உலக இயற்கை நிகழ்ச்சிக்கும் பகுத்தறிவுக்கும் பொருந்தாத ஒரு பெரும் புளுகாகவே இருக்கிறது. எப்படியென்றால், உலகிற் காணப்படும் நிகழ்ச்சிகளில், கடவுளின் திருவருளால் நிகழ்வது ஒருவகை யெனவும், மக்களின் முயற்சியால் உண்டாவது இன்னொரு வகையெனவும் பிரித்துக் காண்பித்து, மக்களிடையே கடவுள் நம்பிக்கையை உண்டாக்கி அதனால் தங்கள் பிழைப்புக்கு வழிதேடிக் கொள்வது மதநூலார் கொள்கை யாகும். எடுத்துக்காட்டாக, நெல் விளைவதற்குவேண்டிய மழை இல்லாமல் இருந்து, திடீரென மழை பெய்து நெல் விளைந்தால் அதனைக் கடவுள் திருவருள் என்றும், கிணற்றிலிருந்தோ ஆற்றிலிருந்தோ நீர் பாய்ச்சப்பெற்று நெல் விளைந்தால் அதனை மக்களின் முயற்சி என்றும் கூறுவது வழக்கம். ஆனால், மக்களின் முயற்சியும் இயற்கை அமைப்புமே எல்லாவற்றிற்கும் காரணம் என்பது அறிவுநூலார் கொள்கையாகும். 'முயற்சி திருவினையாக் கும்' என்ற முதுமொழியும் அறிவுநூலார் கொள்கையையே வலியுறுத்துகின்றது. உயிர்களின் பிறப்பு முறையைப் பற்றிக் கூறும்போதுகூட, அறுகு நுனி பனி அனைய சிறிய துளி 'பெருகினா'லன்றி உயிர்கள் உண்டாசாதென்பதே தமிழர் கண்ட உண்மையாகும். ஆனால், நந்தனார்

கதையில் வெறும் நிலத்தில் நெல் தானாகவே முளைத்து வளர்ந்து விளைந்ததென்றும், அங்ஙனம் விளைந்ததும் நந்தனார் கடவுளிடத்து வைத்துள்ள அன்பினாலே என்றுஞ் சொல்லப்படுகிறது. ஆனால், நந்தனார் கதையைப் படக்காட்சியில் (சினிமாவில்) அமைத்துக் காண்பிப்பவர்கள்கூட, ஒரு விநாடியில் நெல் முளைத்துப் பயிராகி விளையுங் காட்சியை அப்படியே காண்பிக்கிறார்கள். இதுவும் அந்தக் கடவுளின் திருவருளால்தான் நிகழ்கின்றதென நாம் நம்புவதா? அல்லது மேல் நாட்டவரின் அறிவும் முயற்சியும் பயன்படுத்தப்பட்டு, அவர்களால் கண்டு பிடிக்கப்பட்ட பொறி (இயந்திரங்) களின் உதவியால் இத்தகைய வியத்தகு காட்சிகள் நிகழ்கின்றன என்று முடிவு செய்வதா?

இனி, படக்காட்சிகளை அமைப்பவர்கள், வயல்களில் நாற்று நடும் இடங்களுக்குச் சென்று, அக்காட்சியை ஒரு தனிப் படமாகவும், நெற்பயிர்கள் முளைத்து வளர்ந்திருக்கும் காட்சியை ஒரு தனிப்படமாகவும், நெல் விளைந்து அறுவடைக்குரியதாய் இருக்கும் காட்சியை ஒரு தனிப் படமாகவும் பிடித்து, அவற்றையெல்லாம் வரிசையின்படி ஒன்றாக இணைத்து, அவர்கள் கண்டுபிடித்துள்ள வியத்தகு பொறிகளின் உதவியால் அக்காட்சிகள், ஒரே இடத்தில் ஒரே விநாடியில் நிகழ்கின்றன என்று பார்ப்பவர்கள் எண்ணிப் புதுமைப்படக் கூடியதாகக் காண்பிக்கிறார்கள். எனவே, நந்தனாருடைய அன்புக்குக் கட்டுப்பட்ட சிவன், தம்முடைய திருவருள் ஆற்றல்கொண்டு ஒரு விநாடியில் நெல் விளையும்படி செய்தார் என்று சொல்லப்படுவது எத்துணை உண்மை என்பதைப் பகுத்தறிவுடைய தமிழ்மக்கள் தங்கள் ஆராய்ச்சிக்கண் கொண்டு பார்த்து முடிவுசெய்வார்களாக.

---

# நந்தனார் நெருப்புள் மூழ்கிய திருவிளையாடல்

இனி, நந்தனார் நெருப்பிற் குளித்துக் கடவுளுடன் இரண்டறக் கலந்ததாகச் சொல்லப்படும் பகுதியையும் ஒரு சிறிது ஆராய்வோம். அதாவது, நந்தனாரைக் கோயிலுட் சேர்த்து அவரைத் தம்முடைய திருவடியில் வைத்துக் கொள்வதற்காகக் கடவுள், தில்லைவாழ் பார்ப்பனரைக் கொண்டு நெருப்பை வளர்ப்பித்தார் என்று சொல்லப்படுகிறது. இது, ஒரு பகுத்தறிவுக்குப் பொருந்தாத நிகழ்ச்சி ஒருபுறமிருக்க, மதநூலார் கூறும் கடவுள் இலக்கணத்திற்கும் எவ்வளவோ மாறுபாடாய் இருக்கிறது. எப்படியென்றால், சிற்றறிவுடைய மக்களைப்போலப் பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த கடவுள், தாம் ஒன்றைச் செய்து கொள்ளும்பொருட்டு, அதற்குக் கருவியாக வேறு பல உதவிப்பொருள்களையும் ஆட்களையும் வேண்டுபவர் அல்லர். அங்ஙனம் வேண்டுபவராய் இருந்தால் அவரை எல்லாம்வல்ல கடவுள் என்ற நிலையில் வைத்து அழைப்பது யாங்ஙனம் பொருந்தும்? கடவுள், தாம் நினைத்த உடனேயே எல்லாப் பொருள்களையும், எல்லா உயிர்களையும், எவ்விதத் துணையும் வேண்டாது, அந்தந்த வடிவிலும் குணத்திலும் படைக்கவல்ல ஆற்றல் உள்ளவர். அதற்காக அவர் எவ்வித உதவிகளையும் வேண்டார் என்பன போன்ற கடவுள் இலக்கணங்கள் மத நூலாரால் வரையறுத்துக் கூறப்பட்டுள்ளன. எனவே, நந்தனாரைத் தூய்மை செய்யும் பொருட்டுப் பார்ப்பனர்களைக்கொண்டு நெருப்பை வளர்ப்பித்து, அதில் அவரை மூழ்கச் செய்தார் கடவுள் என்பது மதநூலார் கொள்கையின்படியும் ஏற்றுக் கொள்ளமுடியாத ஒரு பொருந்தா உரையாம். ஏனெனில், நந்தனாருடைய அன்புக்கு மகிழ்ந்த கடவுள், அவரால் பயிர்த்தொழில் செய்யப்பட்டு வந்த பார்ப்பனனுடைய வயல்களெல்லாம் ஒரு விநாடியிலே முளைத்து—பயிராகி—வளர்ந்து — விளைந்து — அறுவடைக்கு உரியதாகுமாறு

தோன்றும்படி எவருடைய உதவியுமின்றித் தாமே செய்த தாகக் கூறுவதை ஒப்புக்கொள்ளுஞ் சைவ அன்பர்கள், அக்கடவுள், நந்தனாரையும் அவர் வடிவின் வேறாக்கிக் காண்பவர்கள் எல்லாம் வியக்கத்தக்க ஒரு அழகிய அருள் வடிவத்துடன் தோன்றும்படித் தாமே செய்து, அவரைத் தமது கோயிலுட் சேர்த்துக்கொள்ளலாகாதா என்பதனை யும், அங்ஙனஞ் செய்தால் அது கடவுள் இலக்கணத்திற்கு மாறாய் முடியுமா என்பதனையும் எண்ணிப் பார்த்தல் வேண்டுமன்றோ !

---

# பெத்தான் சாம்பானும் நந்தனாரும்

அன்றியும், நெருப்பை வளர்த்து நந்தனாரை அதில் மூழ்கச் செய்து கோயிலுட் சேர்த்துக்கொள்ளுங்கள் என்று தில்லைப்பார்ப்பனர் கனவில் தோன்றிச் சொன்ன கடவுள், 'நாளை நந்தன் வருவான், அவனைக் கோயிலுட் செல்ல விடுங்கள்' என்று சொன்னால், அதனை அப்பார்ப்பனர் ஒப்புக்கொள்ள மாட்டார்களா ? அல்லது நந்தனாரைப் போலவே 'பறையன்' என்று கருதப்பட்ட **பெத்தான் சாம்பான்** என்பானுக்குத் தீக்கைப் பேறளித்து முத்தி கொடுக்கும்படி கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார் என்பவருக்கு,

"அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய கைச்சீட்டுப்—படியின் மிசை
பெத்தான் சாம்பானுச்குப் பேதமறத் தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை."

என்ற ஒரு வெண்பாவைக் கடவுள் ஒரு சீட்டில் எழுதி யனுப்பியதாகவும், அச்சீட்டைப் பெற்றுக்கொண்ட உமாபதிசிவம் உடனே பெத்தான் சாம்பனுக்குக் களங்க மற்ற தூய்மை (தீக்கை) ப் பேறளித்து, அவரைப் பிறவாப் பெருவாழ்விற் சேர்த்ததாகவும் புராணங்களிற் காணப்படு

கின்றதே! இங்ஙனம் பெத்தான் சாம்பானைப் போலவே பிறப்பிலும் அன்பிலும் வேறுபடாத நந்தனாருக்கும், ஓர் ஆசாரியனைக்கொண்டு தூய்மை செய்வித்தால், அது கடவுள் இலக்கணத்திற்கு மாறாய் முடியுமா? அருட்கண் கொண்டு நோக்கும் அண்ணலாஞ் சிவனுக்கு, ஒரு குலத்தவரான பெத்தான் சாம்பான் உயர்ந்தவனாகவும், நந்தனார் இழிந்தவனாகவும் புலப்பட்டது ஏனோ? ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்க விழையார்க்கு இவை சரியெனத் தோன்றும் போலும்!

இனி, பெத்தான்சாம்பான் என்ற புலையனுக்கு உமாபதிசிவம் என்ற பார்ப்பனன் தூய்மை அளித்துப் பிறவாமையைப் பெறச் செய்தார் என்பதற்காகவே, அக் காலத்துப் பார்ப்பனர்கள் அவர்மீது சீற்றங்கொண்டு சேரியிலுள்ள புலையர்களை வரவழைத்து, 'உங்கள் பெத்தான்சாம்பானை உமாபதிசிவம் கொன்றுவிட்டார்' என்று சொன்னதாகவும், உடனே புலையர்கள் எல்லாருந் திரண்டு வந்து உமாபதிசிவத்தை நோக்கி, 'எங்கே எங்கள் பெத்தான்சாம்பான்?' என்று கேட்டதாகவும், அதற்கு, 'கடவுளுடைய கட்டளையின்படி அவரைப் பிறவாப் பெரு வாழ்வி (முத்தியி) ற் சேர்த்துவிட்டேன்' என்று உமாபதி சிவம் விடை பகர்ந்ததாகவும், அதுகேட்ட பார்ப்பனர்கள், 'அப்படியானால் இதோ இங்குக் காணப்படும் முள்ளிச் செடிக்கும் பிறவாமைப் பேற்றை அளிக்க உம்மால் முடியுமோ?' என்று அவரைக் கேட்கும்படி, அங்குக் காணப்பட்ட ஒரு முள்ளிச் செடியைச் சுட்டிக் காண்பித்து, புலையர்களைத் தூண்டிவிட்டதாகவும், புலையர்களும் அவ்வாறு செய்து காண்பிக்குமாறு உமாபதிசிவத்தைக் கேட்டபோது, அவரும் அந்த முள்ளிச் செடியையும், மோட்ச விடுதிக்கு அனுப்பிக் காண்பித்ததாகவுஞ் சொல்லப் படும் ஒரு கதையும் புராணங்களிற் காணப்படுகின்றது. ஆனால், இந்நிகழ்ச்சி பகுத்தறிவுக்குப் பொருந்தாத ஒரு பெரும் புளுகென்பது தெள்ளிதில் உணரப்படுமாயினும், யாது காரணம்பற்றியோ, பெத்தான்சாம்பானோடு நட்புக் கொண்டிருந்த பார்ப்பனனான உமாபதிசிவத்தை ஊருக்கும் புறம்பே இருக்கும்படி அக்காலத்துப் பார்ப்பனர்கள்

செய்துவிட்டார்கள் என்பது மட்டும் உண்மையாக அறியக் கிடக்கின்றது. எப்படியென்றால், உமாபதிசிவாசாரியார் பேரால் கட்டப் பெற்றுள்ள ஒரு கட்டிடம், சிதம்பர நகரின் எல்லைக்குப் புறம்பே ஒரு காட்டுக்குள் இருப்பதை இன்றும் பார்க்கலாம். இது கிடக்க.

---

# நந்தனார் உண்மை வரலாறு

இனி, நந்தனாரை நெருப்பிலிட்டுத் தூய்மை செய்ததாகச் சொல்லப்படுவது எத்துணைப் பெரும் புளுகாய் இருக்கிறது பாருங்கள். நெருப்பை அறிந்து தொட்டாலும் அறியாமல் தொட்டாலும், அது சுட்டுப் புண்படுத்துமே யன்றிப் புனிதப்படுத்தாது. நெருப்புக்குச் சுடுந்தொழிலும், நீருக்குக் குளிர்ந்து பதஞ் செய்யுங் குணமும், காற்றுக்கு அசையும் இயல்பும் இயற்கையாகவே 'உள்ளனவென்பது மறுக்கமுடியாத உண்மையாகக் காணக் கிடக்கும்போது நெருப்பில் தள்ளப்பட்ட நந்தனார் தப்பிப் பிழைத்தார் என்பது சிறிதும் பகுத்தறிவுக்குப் பொருந்தா உரையாம். அன்றியும், பொன் வெள்ளி முதலான உலோகங்களை நெருப்பிற் புடம்போட்டு மாற்று உயரச் செய்தல்போல, சதை எலும்பு நரம்புகளோடு கூடிய மக்கள் உடம்பையும் நெருப்பிலிட்டு மாற்று உயர்ந்தவர்களாக, அதாவது பறையனைப் பார்ப்பானாகச் செய்தார்கள் என்பது சிறு பிள்ளைகளும் எள்ளிநகையாடக்கூடிய ஒரு வேடிக்கை யாகவே இருக்கிறது. அன்றியும், அச்செய்கை கருப்பு நாயை வெள்ளை நாயாக்கச் செய்த தென்னாலிராமன் திருவிளையாட்டாகவே முடியும்.

எனவே, நந்தனார் நெருப்பில் மூழ்கித் தூய்மை செய்யப்பட்டார் என்பதன் உண்மை யாதெனிற், கூறுதும். நந்தனார், தீண்டப்படாதவர் என்று சொல்லப்படும் பறையர் குலத்திற் பிறந்திருந்த போதிலும், அவருக்கு ஓரளவு தன்மதிப்பும் பகுத்தறிவும் இருந்ததால், • அவர்

கோயிலுக்குள் நுழைய முயன்றார். அதோடு, கல்லிலுஞ் செம்பிலுங் கடவுள் இருக்கிறார் என்று ஆரியர்கள் தங்கள் வேதங்களில் எழுதிவைத்திருப்பதையும் அவர் மெய்யென நம்பி இருந்தார். எனவே, அந்த நம்பிக்கையானது அவரைக் கோயிலுக்குள் நுழையுமாறு தூண்டிற்று. இங்ஙனம் கோயிலுக்குள் நுழைய முயன்ற நந்தனாரின் துணிகரச் செயலைக்கண்ட அக்கோயிற் பார்ப்பனர்கள், 'இந்தப் பறையனுக்கு நல்ல பாடம் கற்பிக்கவேண்டும்' என்று முடிவு செய்தவர்களாய், நந்தனாரை அணுகி, 'நந்தனாரே, உம்முடைய உள்ளக் கருத்தைக் கடவுள் சொல்ல நாம் அறிந்தோம். நாளைக்கு உம்முடைய எண்ணம் நிறைவேறும். உம்பொருட்டு நெருப்பு வளர்க்கும் படி கடவுள் கட்டளையிட்டுள்ளார். நாளைக்கு நீர் இக் கோயிலின் தெற்குக் கோபுரத்துக்கு வாரும்' என்று சொன்னார்கள். அதன்படியே மறுநாட் காலையில் தெற்குக் கோபுரத்தின் முன் ஒரு பெருங் குழி வெட்டி, அதிற் கட்டைகளை நிறையப் போட்டு நெருப்பை உண்டாக்கி, நந்தனாரை அந்நெருப்பின் முன்னால் இருக்கும்படிச் செய்து, கொலைக்கஞ்சாக் கொடியோரான அக்கோயிற் பார்ப்பனர்கள், நந்தனாரையும் நெருப்புக் குழியையும் சூழ இருந்துகொண்டு மந்திரங்கள் சொல்லி யாகஞ் செய்வதுபோற் பாசாங்கு செய்து, **நந்தனாரை அந்நெருப்புக் குழியில் தள்ளிப் பொசுக்கிவிட்டார்கள்.**

இஃதிங்ஙனமாக, சிதம்பரம்போன நந்தனார் திரும்பி வராததைக் கண்ட ஆதனூர்ப் புலையர்கள் சிதம்பரஞ் சென்று, நந்தனார் எங்கே என்று கேட்டதற்கு, அக்கோயிற் பார்ப்பனர்கள், நந்தனார் நடராசப் பெருமானுடன் இரண்டறக் கலந்துவிட்டார் என்று பெரியபுராணத்தில் இப்போது காணப்படும் கதையைச் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டார்கள். இதுவே உண்மை நிகழ்ச்சியாகும். எப்படியென்றால், பார்ப்பானாய்ப் பிறந்தால்தான் கடவுளுடைய திருவடியை அடைய முடியுமென்பது சைவம் வைணவம் முதலான இந்துமத நூல்களின் முடிபாகும். இவ்வுண்மை,

"நெருப்பினுள்ளே புகுந்த நந்தனார் அந்த உடம்பை ஒழித்து, புண்ணிய மயமாகிய பார்ப்பன வடிவங் கொண்டு பூணூலோடுஞ் சடைமுடியோடும் எழுந்தார்"

என்று பெரியபுராணத்திலேயே சொல்லப்பட்டிருப்பதால் நன்கு வலியுறுகின்றது. இதனால், பார்ப்பனரல்லாதார் எப்படிப்பட்டவர்களாய் இருந்தபோதிலும் அவர்களுக்குக் கடவுட்பேறு கிடையாதென்பது நன்கு உறுதிப்படுத்தப் படுகின்றது. அன்றியும், 'பார்ப்பன வடிவம்' என்று மட்டுஞ் சொல்லாமல், 'புண்ணியமயமான பார்ப்பன வடிவம்' என்று சொல்லியிருப்பதுகொண்டு, **பார்ப்பன வடிவந்தான் புண்ணிய மயம் என்பதும், பார்ப்பனரல்லாதார் வடிவங்கள் எல்லாம் பாவமயம் என்பதும்,** ஆகவே புண்ணியமற்ற பாவிகளான சூத்திரர் என்று அழைக்கப் படுந் தமிழ் மக்களுக்கும் ஏனைப் பார்ப்பனரல்லாதார்க்கும் இந்து மதக் கடவுளரின் திருவருளோ அன்றித் திருவடிப் பேறோ கிடையாதென்பதுந் தெற்றெனத் தெரியக் கிடக்கிற தன்றோ! இந்த நிலையில், புராணங்களிலும் வேதாகமங் களிலும் பேசப்படும் சிவன்-திருமால் முதலான கடவுளரைத் தங்கள் கடவுளராக எண்ணி வழிபடுவதும், அதற்காகத் தாங்கள் பாடுபட்டுத் தேடிய பொருள்களைச் செலவு செய்வதும் எத்துணை அறியாமை என்பதை இனி மேலாவது நந் தமிழ்மக்கள் எண்ணிப் பார்த்து, இக்கொடிய இழிவினின்றுந் தம்மை விடுவித்துக்கொள்ள முயல்வார்களாக.

இனி, நாம் மேலே கூறியபடி, நந்தனார் நெருப்பி லிட்டுப் பொசுக்கப்பட்டார் என்ற உண்மையினை இன்னும் ஒரு வலிய சான்றுகொண்டு விளக்கிக் காட்டுவோம். அதாவது, நந்தனார் நெருப்பினுட் புகுந்து பார்ப்பன வடிவத்தோடும் வெளியே வந்தபின், தில்லைவாழ் பார்ப் பனர்களும் மற்றைச் சிவனடியார்களும் கோபுரத்தை அணுகி, அதனை வணங்கி, உள்ளே போய்க் கனக சபையை அடைந்தார்கள் என்றும், பின்னர் அங்கு நின்ற அனைவரும் நந்தனாரைக் காணாமையால் 'ஆச்சரியம்

கொண்டார்கள்' என்றும் பெரியபுராணத்திற் காணப்படு கின்றது. அங்கு வந்திருந்தவர்கள் நந்தனாரை அங்கே காணாமல் ஆச்சரியப்பட்டதன் காரணம் என்ன? நந்தனார் கனகசபையை அடைந்தவுடன், கடவுள் அவரை, 'இன்ன விதமாகத் தம்முடைய திருவடியிற் சேர்த்துக்கொண்டார், அவ்வியத்தகு செயலைக் கண்டு எல்லாரும் ஆச்சரியங் கொண்டார்கள்' என்று சொல்லப்படாமல், வறிதே நந்தனாரைக் காணாமையால் அங்கு நின்றவர்கள் எல்லோரும் ஆச்சரியங் கொண்டார்கள் என்று சொல்லப் படுவதால், முன்னரே நந்தனார் அக்கோயிற் பார்ப்பனரால் நெருப்புள் தள்ளப்பட்டு வெந்து நீறானாராதலால், அவர் அங்கு வரவில்லை என்பதும், நந்தனார் கடவுளோடு இரண்டறக் கலக்கும் புதுமைக் காட்சியைக் கண்டுகளிக்க வந்த மக்கள், நந்தனாரை அக்கூட்டத்தில் தேடிப் பார்த்தும் காணாப்படாமையினாலேயே ஆச்சரியங்கொண்டார்கள் என்பதும் எவ்வித அய்யுறவுக்கும் இடமின்றித் தெள்ளிதில் அறியக் கிடக்கின்றதன்றோ!

அன்றியும், நந்தனார் நெருப்பினின்றும் வெளியே பார்ப்பன வடிவத்தோடு வந்ததாகச் சொல்லப்படும் பகுதி யில், அவர் வரவைக்கண்டு எவரும் ஆச்சரியப்பட்டதாகப் புராணத்திற் காணப்படவில்லை. மற்று, அங்கு நின்ற பார்ப்பனர்கள் களிப்படைந்தார்கள் என்றுதான் புராணத் திற் சொல்லப்பட்டிருக்கிறது. எனவே, களிப்புக்கும் ஆச்சரியத்துக்கும் உள்ள வேறுபாட்டையும், அவ்விரு இடங்களில் நடந்த நிகழ்ச்சிகளையும், அந்நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப அமைந்த இரு சொற்களையும், அவ்விரு சொற்களின் பொருள் நுட்பங்களையும் ஆராய்ந்து பார்ப்பவர்க்கு யாம் கூறும் உண்மை விளங்காமற் போகாது. ஒருவர் எதிர் பார்த்தது நிகழக்கண்டால் களிப்பு அதாவது, மகிழ்ச்சியும், எதிர்பாராதது நிகழக்கண்டால் ஆச்சரியம் அதாவது, வியப்பு அடைவது மக்களின் வழக்கம்; இயற்கையுங்கூட. எனவேதான், தில்லைக்கோயிற் பார்ப்பனர்கள், நந்தனார் வெந்து சாம்பலாக வேண்டுமென்று எதிர்பார்த்தபடி நிகழ்ந்ததால், அங்குப் பார்ப்பனர்களுக்குக் களிப்பும், நந்தனாரின் புதுமைக் காட்சியைப் பார்க்கவந்த பொது

மக்களுக்கு இவர்கள் எதிர்பார்த்தபடி நந்தனார் காணப் படாமையால், இங்கு இவர்களுக்கு ஆச்சரியமும் ஏற்பட்ட தாகும். இதனை மறுப்பவர் எவராயினும், அவர் உண்மையை மறைத்துப் பொய்யை நிலைநாட்ட முயல் பவரேயாவர்.

---

# திருப்பாணாழ்வார் வரலாறு

இனி, திருமாலை வழிப்பட்டு அவருடைய திருவடி நீழலைப் பெற்றதாகச் சொல்லப்படும் வைணவ ஆழ்வார் பன்னிருவரில் தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்த **திருப் பாணாழ்வார்** என்பவரும் ஒருவர் என்றும், அவர் திருமால் வீற்றிருக்குங் கோயிலுட் சென்று அவரை வழிபடத் தம்முடைய இழிகுலம் தடை செய்ததால், அவர் காவிரித் தென்னாற்றின் தென் கரையில் திருமுகத்துறையில் தொலைவில் நின்றபடியே திருமாலைப் பாடித் தொழுதார் என்றும், அவரின் அன்பை அறிந்த அரங்கப் பெருமாள், உலோகசாரங்க முனிவர் என்னும் பார்ப்பனர் ஒருவருக்குக் கனவிலே தோன்றி, 'என்னிடத்தில் உண்மை யாகவே அன்புபூண்டொழுகும் பாணரை நீர் குறைவாக நினைத்துப் போதல் தகாது, அவரை உமது தோளிற் சுமந்துகொண்டு வந்து நமது பக்கத்திலே விடவேண்டும்' என்று கூறி மறைந்ததாகவும், அங்ஙனமே உலோக சாரங்கரும் திருப்பாணாழ்வாரைத் தம்முடைய தோளிலே சுமந்துகொண்டு போய்க் கோயிலுள் இருக்குந் திருமால் பக்கத்தில் விட்டாரென்றும் ஒரு கதை வைணவபுராணங் களிற் காணப்படுகின்றது. எனவே, நீர்க்கடவுள் என்று சொல்லப்படும் திருமால் தம்முடைய அடியவரை ஏற்றுக் கொண்டதுபோல, நிலக்கடவுள் என்று சொல்லப்படுஞ் சிவனும் தம்முடைய அடியவரான நந்தனாரை ஏற்றுக் கொண்டிருக்கலாம். அல்லது 'நந்தனாரை நீங்கள் உங்கள் தோளிற் சுமந்துகொண்டு வந்து என் பக்கத்தில் விடுங்கள்' என்று தில்லைப்பார்ப்பனருக்குக் கட்டளையிடாவிட்டாலும்

'நந்தனாரைத் தொடாமல் அழைத்துக்கொண்டு வந்து என் பக்கத்தில் விடுங்கள்' என்றாவது அந்தச் சிவன் கட்டளை யிட்டிருக்கலாம். இங்ஙனஞ் செய்தால் அச்சிவனுக்கு வரும் இழுக்கென்னை? அல்லது அந்தப் பார்ப்பனக் கும்பலுக்கு ஏற்படுந் தாழ்வென்னை? அன்றியும், திருமாலினும் பார்க்க சிவனே உயர்ந்தவன் என்று பெருவழக்குப் பேசிப் பெருமை யடித்துக்கொள்ளுஞ் சைவக்கூட்டம், பெரிய கடவுள் என்று சிவனை உயர்த்திச் சொல்வதற்கேற்ப அவருடைய செயலும் பெருந்தன்மை வாய்ந்ததாயும், பகுத்தறிவுக்குப் பொருந்தியதாயும் இருத்தல் வேண்டுமென்று எண்ணிப் பாராதொழிவது ஏனோ? நந்தனாரை நெருப்பிற்போட்டு வேகவைத்துப் புனிதமாக்கியதாகச் சொல்லப்படும் அறிவுக்குப் பொருந்தாப் பொய்ப் புராணக் கதையை அப்படியே நம்பி மகிழ்ந்து இன்புற்று, தம் அறிவை இழந்து நிற்குந் தமிழறிஞரின் நிலையை எண்ணும்போது, எமக்கு அவர்பால் இரக்கமே உண்டாகிறது.

---

## உண்மையை மறைக்கும் பொய்க்கூற்று

இனி, சைவமதத்திற் பெரும் பற்றுள்ளவரும், ஆராய்ச்சித் துறையிற் சிறந்த புலமை வாய்ந்தவருமான **மறைமலையடிகளார்** தம்முடைய ஆராய்ச்சியில், நந்தனார் நெருப்பில் முழுகியே புனித வடிவத்தைப் பெற்றுக் கடவுளுடைய திருவடியை அடைந்தார் என்பதை மெய்யெனக் கொண்டு, அதற்குச் சில சான்றுகளும் காட்டுகின்றார். அவர் உரையும் பொருந்தாக் கூற்றென்பதை விளக்கிக் காட்டுதல் ஈண்டு வேண்டற்பாலதாகின்றது. மறைமலையடிகளார் கூறுவது :—

"சிவபெருமான் நந்தனாரைக் கோயிலுட்புகுவித்தல் வேண்டித் தில்லைவாழ் அந்தணரைக்கொண்டு தீ வளர்ப்பித்து அதன்கண் நந்தனாரை முழுகுவித்துத் தேவ வடிவாக எழச் செய்து பின்னர்,

உள்ளே ஏற்றுக்கொண்டது என்னையென்றாற், பறைச் சாதி மற்றைச் சாதிகளைப் போல்வ தன்று. மிகவுந் தூயதாய் எல்லாத் தேவர்களும் தன்கண் அமையப் பெற்றதென்று சிவதருமோத் தரத்திற் பாராட்டப்பட்டதாய்ச் சிவபெருமா னுக்குப் பால் — தயிர்—நெய்—நீர்—சாணகம் என்னும் அய்ந்தினைக் கொடுப்பதாய் உள்ள ஆவினை அச்சாதியார் கொன்று அவற்றின் இறைச்சியை உண்ணும் புலைத்தொழிலிற் பழகியவராவர். இங்ஙனம் மிகக் கொடியதான புலையொழுக்கத்திற் பயின்றது பற்றியே பறைச் சாதி ஏனை எல்லாச் சாதிகளிலும் இழிவடைய லாயிற்று. இங்ஙனம் இது தாழ்வடையலானதும் ஒழுக்கத் தாழ்வினாலேதான். மற்றைச் சாதியா ரெல்லாம் ஒன்றுகூடி உறையும் நாடு நகரங் களுக்குப் புறத்தே விலக்கமாகப் பறைச்சேரி அமைக்கப்பட்டிருத்தலும் இந்த ஏதுவினாலே தான். இத்தன்மையதான அறிவில்லாப் புலைச் சாதியில் நந்தனார் பிறந்தமையினாலே இவரது பெருமையைப் பிறர் அறியார் என்றெண்ணி அதனை அறிவிக்கும் பொருட்டே சிவபெருமான் அங்ஙனஞ் செய்தனர் என்றுணர்க. அல்லதூஉம், சிவத்தொண்டின் மேன்மையை அறிவித்தற்கும், சிவநேயம் உண்டானாற் புலையுடம்பும் புனித வுடம்பாம் என்பதனை உலகத்திலுள்ள எல்லார்க் குந் தெளிவித்தற்குமே சிவபெருமான் நந்தனாரை நெருப்பில் முழுகுவித்து எழச்செய்தார் என்க"

என்பதாகும். இதில், பறைச்சாதி மற்றைச் சாதிகளைப் போலல்லாமல், தேவர்கள் எல்லாரும் ஒருங்கே குடியிருக் கும் இடம் பசுவின் உடம்பு என்பதனையும், சிவபெருமா னுக்குப் பால், தயிர், நெய், நீர், சாணாகம் என்னும் அய்ந்து பொருள்களையும் பசுவினிடத்திலிருந்து பெறுவதென்ப தனையும் எண்ணிப்பாராது அதனைக் கொன்று தின்னு கின்றார்கள் என்ற குற்றச்சாட்டை அடிகளார் பறையர் மீது ஏற்றுகின்றார்கள்

எனவே, தேவர் எனப்படுவார் யாவர் என்று அடிகளார் எடுத்துக்காட்டவில்லையாயினும், ஆரியர் வேதங்களிற் பேசப்படும் முப்பத்து முக்கோடி தேவர்களையே அடிகளார் குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஏனென்றால், தமிழ்நாட்டில் தேவர்கள் என்ற ஒரு பிரிவினர் இருப்பதாகக் கொள்வதற்குக் கருவி யாதுமில்லை. தமிழ்நாட்டிலுள்ள கள்ளர்—மறவர்—அகம்படியர் என்ற பிரிவினருட் சிலர் தங்களைத் 'தேவர்' என்று சொல்லிக்கொள்கின்றனர். ஆனால், அவர்கள் எவரும் பசு மாட்டைத் தங்கள் குடியிருக்கும் வீடாகப் பயன்படுத்தாமல், மற்றை மக்களைப் போலவே அவர்களும் நிலத்தின் மீது வீடுகள் அமைத்து அவற்றிலேயே குடியிருக்கிறார்கள். ஆதலால், அடிகளார் கூறும் தேவர்கள் ஆரியர் நூல்களிற் காணப்படும் தேவர்களையே என்பது பெறப்படும். படவே, அச்சொல்லப்பட்ட தேவர்கள் இச்சொல்லப்பட்ட பசுவில் எந்த முறையிற் குடிகொண்டுள்ளார்கள் என்பது தெரியவில்லை. முப்பத்து முக்கோடி தேவர்கள் எல்லாரும் ஒரு பசுவின் உடம்பில் இடம்பெற்றுள்ளனரா? அல்லது பகுதி பகுதியாகப் பிரிந்து ஆசியா—அய்ரோப்பா—அமெரிக்கா முதல் இந்நிலவுலகிலுள்ள பசுக்கள் எல்லாவற்றிலும் இடம்பெற்றுள்ளனரா? அன்றித் தனித்தனி ஒவ்வொரு பசுவிலும் இத்தனை இத்தனை தேவர் விழுக்காடு இடம் பெற்றுள்ளனர் என்று கணக்கிடப்பட்டுள்ளதா? இங்ஙனம் பசுவின் உடம்பில் குடியிருக்குந் தேவர்கள், எந்த முறையில் அதன்கண் வாழ்கின்றனர்? அவர்களுக்கு உணவு எப்படிக் கிடைக்கிறது? அவர்களின் படுக்கையறை முதலியன எந்த முறையில் பசுக்களின் உடம்பில் அமைந்துள்ளன? என்பன போன்ற அய்யப்பாடுகள் எம்மால் தெளிந்தறியுமாறில்லை. இவற்றை அக்கதையை நம்பும் அடிகளார் போன்றாரே விளக்குதல் நலம்.

இனி, பசுவின் பால், தயிர், நெய், நீர், சாணாகம் என்னும் அய்ந்துஞ் சிவனுக்குப் பயன்படுவதாக ஆராய்ச்சி அறிவு நிரம்பிய அடிகளாரே ஒப்புக்கொள்கிறார் என்றால், அதைக்கண்டு நாம் வியப்படையாமல் இருக்கமுடியவில்லை. கோயில்களிற் காணப்படுஞ் சிவ வடிவம், கல் செம்பு

முதலியவற்றால் அமைக்கப்பெற்ற வடிவங்களேயாதலால், அவை, அவற்றை சாப்பிடுகின்றன என்று சொல்லுதற்கில்லை. ஒருவேளை சிவனை வழிபடும் அடியவர்களின் அன்பு வலையிற் சிக்கிப் பால் முதலான பொருட்களைச் சாப்பிடும் வடிவத்தை உடையவராகி, அவற்றைச் சாப்பிட்டு அடியவர்களை மகிழ்விக்கிறார் சிவன் என்று வைத்துக் கொண்டாலும், பால், தயிர், நெய் என்னும் மூன்றையுஞ் சாப்பிடுவரே யன்றி, சிறுநீரை (மூத்திரத்தை) யுஞ் சாணியையும், அடியவர்கள் எவ்வளவு அன்பு காட்டிக் கொடுத்தாலும் அவற்றைச் சாப்பிடுவாரா? அல்லது சாப்பிடத்தான் முடியுமா? அன்றி, அங்ஙனஞ் சாப்பிடும்படி வற்புறுத்துவது சிவ அடியவர்களின் அன்புடைமைக்குத் தான் ஏற்றதாகுமா? என்பனவற்றை நம்மவர் எண்ணிப் பார்த்தல் வேண்டுமன்றோ! அற்றன்று, கடவுள் அவற்றை உட்கொள்வதில்லை; அவை அவருக்குக் குளிப்பாட்டுதற் (அபிஷேகத்திற்) குத்தான் பயன்படுகின்றன என்று சிறிது மதிப்பாகச் சொன்னாலுங்கூட, சாணியுஞ் சிறுநீரும் அங்ஙனம் குளிப்பதற்குப் பயன்படும் பொருள்கள் அல்லவே. ஆனால், இப்போதுள்ள கோயிற் பூசாரிகள் கோயில்களில் இருக்கும் கடவுளரின் வடிவங்களாகிய செம்பின்மீதும் கல்லின்மீதும் பால், தயிர், நெய் முதலான பொருள்களைப் பெய்து, அவை யாருக்கும் பயன்படாமற் சாக்கடையிற் போய் விழுந்து முடைநாற்றம் வீசுவதையே காண்கின்றோம். சில பூசாரிகள், கடவுளின் சிலைக்குப் பின்னால் ஏதாவதொரு ஏனத்தை முன்னதாகவே வைத்து அச்சிலைகளின்மீது ஊற்றப்படும் பால் முதலியன அந்த ஏனத்தில் விழும்படி செய்து, அவற்றைத் தம் வீட்டுக்குப் பிறர் அறியாதபடி எடுத்துச் சென்று தங்கள் தேவைக்குப் பயன்படுத்துவதும், சிற்றுண்டி நிலையங்களுக்கு விற்றுப் பணந்திரட்டுவதுமான முறைகளைக் கையாளுகின்றார்கள். அன்றியும், கடவுளின் முழுக்கு (அபிஷேக) ப் பொருள் களாகிய பால், தயிர், நெய், சிறுநீர், சாணாகம் என்னும் அய்ந்து பொருள்களிலும் பால், தயிர், நெய் ஆகிய மூன்று பொருள்களை மட்டுமே கோயிற் பார்ப்பனர்கள் பெரிதும் விரும்புகிறார்கள் என்பதும், சிறுநீர் சாணி ஆகிய

இரண்டையும் பூசாரிகள் விரும்புவதில்லை என்பதும் அவர்களால் நடத்தப்படும் முழுக்கு (அபிஷேக) நிகழ்ச்சி களால் நாம் அடிக்கடி அறிகின்றோம். கடவுளுக்கு உகந்த பொருள்களாகிய அய்ந்தில் முதல் மூன்றை மட்டும் மிகுதி யாகப் பயன்படுத்த விரும்புவதும், சிறுநீரையுஞ் சாணியை யும் முற்றிலும் வெறுப்பதும் ஏன் என்று பால், தயிர், நெய் முதலியவற்றைக் குடங்குடமாகக் கொட்டிப் பாழாக்கக் கொடுக்கும் அடியார் குழாங்களாவது அப்பார்ப்பனப் பூசாரிகளைக் கேட்பதில்லை.

இனி, ஒரு சாரார், பசுவின் கழிபொருளாகிய சிறு நீருஞ் சாணியும் கடவுளுக்கு உகந்த பொருள்களல்ல வென்றும், அங்ஙனஞ் செய்வது ஆரியர் கொள்கை என்றும், பசுவின் பால், தயிர், நெய், வெண்ணெய், மோர் ஆகிய அய்ந்துமே கடவுளுக்கு உகந்த பொருள்கள் என்றும், இங்ஙனஞ் செய்வதே தமிழர் கொள்கையென்றும் கூறிக் கடவுளுக்கும் அவரை வழிபடுந் தமிழ் மக்களுக்கும் உயர்வு தேட முயல்கின்றனர். இது எப்படியிருக்கிறதென்றால், 'அவன் கெட்டான் குடிகாரன், எனக்குப் போடு பூப்போட்ட கோப்பையிலே இரண்டு' என்று சொல்லுவதுபோலவே இருக்கிறது. ஏனென்றால், பார்ப்பனர்கள் பால், தயிர், நெய் ஆகிய மூன்றையுமே கல்லிலுஞ் செம்பிலுங் கொட்டிப் பாழாக்குகின்றார்கள் என்று எண்ணி, அதிற் சீர்திருத்தம் காண வந்த தமிழறிஞர், சிறிதளவு எஞ்சியுள்ள வெண்ணெ யையும் மோரையும் கொண்டுபோய்க் கல்லிலுஞ் செம்பிலுங் கொட்டி, பசுவுக்குத் தீனிபோட்டு வளர்த்த மக்கள் அவற்றை அருந்தவிடாமல் தடுத்து, 'அறவடித்த சோறு காடிப் பானையில் விழுந்தது' போலப் பசுவிலிருந்து பெறக் கூடிய எதனையுமே மக்கள் தமக்குப் பயன்படுத்திக் கொள்ளவிடாமல், அவற்றையெல்லாம் பாழாக்குவதிலேயே தம் ஆராய்ச்சியைப் பயன்படுத்தியுள்ளார். இயற்கைக்கும் தமிழர் கொள்கைக்கும் மாறாகக் கடவுள் வடிவம் முதலியன வற்றைத் தம் பிழைப்புக்காகக் கற்பித்த ஆரியர்களின் சூழ்ச்சியை மெய்யென நம்பி அக்கொள்கையைத் தழுவியது மன்றி, அதிற் சீர்திருத்தங் காண முயன்று தமக்குத் தாமே கேடு தேடிக்கொண்ட தமிழறிஞரின் போக்கைக்கண்டு,

நாம் இரங்குவதைவிட வேறென்ன செய்யமுடியும்! எனவே, பால், தயிர், நெய், சிறுநீர், சாணாகம் என்னும் ஐந்து பொருள்களும் கடவுளுக்குப் பயன்படுவன என்று கூறிய அடிகளார் கூற்றும், சாணியுஞ் சிறுநீரும் கழிபொருள் களென நீக்கி மோரும் வெண்ணெயுஞ் சேர்த்துக் கொள்ளுதலே முறையாம் என்ற இன்னொரு தமிழறிஞரின் கூற்றும் அறிவுக்குப் பொருந்தாதென்பது இதுகாறும் கூறியதுகொண்டு தெளியப்படும்.

இனி, பசுவினிடத்துக் கிடைக்கப் பெறும் பால், தயிர், நெய், வெண்ணெய், மோர் ஆகிய நல்ல பொருள்கள் எல்லாம் மககளின் உணவுக்கும், பசுவின் கழிபொருள் களாகிய சிறுநீருஞ் சாணியும் நன்செய் புன்செய் நிலங் களுக்கு உரமாக இடுவதற்கும் பயன்படுவனவேயன்றி, கடவுள் பேரைச் சொல்லிக் கல்லிலுஞ் செம்பிலுங் கொட்டிப் பாழாக்குவதற்குப் பயன்படுவனவல்ல என்பதனைக் கடவுளிடத்தும் அவருடைய தரகர்களான பார்ப்பன ரிடத்தும் அன்பும் அடிமையும் பூண்டொழுகுந் தமிழ் மக்கள் உணர்தல்வேண்டும். இனி, நறுமணமுள்ள மலர்களையும் பச்சிலைகளையும் பறித்து மாலைகள் தொடுத்துக் கடவுளரின் சிலைகள்மீது அணிவதும் இயற்கைக்கு மாறான ஒரு செயலாகும். எப்படியென்றால், மலர்கள் பச்சிலைகள் முதலானவற்றினின்றும் இயற்கையாக உண்டாகும் நறுமணமானது, காற்றோடு கலந்து துர்நாற் றங்களைப் போக்குவதற்கும், மக்களும் பிற உயிர்களும் தூய்மையான காற்றை ஏற்று நோய் உண்டாகாமல் தடுப்பதற்குமே பயன்படுவனவாகும். இவ்வுண்மை, குடி யிருக்கும் வீடுகளைச் சுற்றிலும் நறுமணமுள்ள மலர்ச் செடிகளை வைப்பதாலும், ஊருக்குப் பொதுவான ஒரு பூம்பொழில் (Park) ஏற்படுத்துவதாலும் நன்குத் தெளியப் படும். எனவே, இயற்கைக்கு மாறாக, மணமுள்ள மலர் களைப் பறித்துக் கடவுளரின் சிலைகள்மீது போட்டுப் பாழாக்கும் பகுத்தறிவுக்கொவ்வாச் செயலையும் மக்கள் கைவிடுதல் வேண்டும்.

இனி, கடவுளுக்குப் பால் முதலியன தந்து பயன் படுவதும், தேவர்களுக்கு உறைவிடமாய் உள்ளதுமான

பசுக்களின் இறைச்சியைப் பறையர் உண்பதனாலேதான் அவர்கள் நகருக்குப் புறத்தே சேரிகளில் இருந்து வாழும் நிலை ஏற்பட்டதென அடிகளார் கூறுகின்றார். மக்கள் பசுவின் இறைச்சியைத் தின்பது இழிந்த செயல் என்பதை நாமும் ஒப்புக்கொள்கின்றோம். ஆனால், பசுவைக் கொன்று அதன் தோலை உரித்தெடுத்துப் பதஞ் செய்து, அதனாற் செய்யப்பட்ட தோற் கருவி—துளைக் கருவி—நரம்புக் கருவி முதலான பேரிகைகளைக் கடவுளின் பூசைக் காலங்களிலும் திருவிழாக் காலங்களிலும் பயன்படுத்தி மகிழ்வதும், பசுவின் தோலைக்கொண்டு செருப்புச் சப்பாத்து முதலியன செய்து உயர்சாதியினர் என்று சொல்லிக்கொள்பவர்கள் தங்கள் கால்களில் இட்டு நடந்து மதிப்புத் தேடிக்கொள்வதும் ஏற்புடைச் செயல்கள்தாமா என்பதனை, பசுவின் இறைச்சியைத் தின்பதால்தான் பறையர் சேரிப்புறங்களுக்கு ஒதுக்கப்பட்டனர் என்று வாய் கூசாது கூறும் அன்பர்கள் எண்ணிப்பார்த்தல் வேண்டு மன்றோ! பறையர் முதலான பழந் தமிழ் மக்கள் நம்மி னின்றும் விலகிச் சேரிப்புறங்களில் வாழுங் காரணத்தையும் ஈண்டு விளக்கிக் காட்டுதல் பெரிதும் இன்றியமையாத தாகும்.

---

## தீண்டப்படாதவர் யார்?

நமது நாடு தமிழ்வேந்தர் ஆளுகையின்கீழ் இருந்த காலத்தில், பஞ்சம் பிழைக்க வந்த ஆரியப் பார்ப்பனர் தம் பிழைப்புக்கு ஏற்ற ஒரு சூழ்ச்சி செய்துகொண்டு, அரசரை அணுகி, தாம் நான்முகன் (பிரமதேவன்) தலையினின்றும் பிறந்துவந்த 'பிராமணர்' என்றும், தாமே உலகுக்கெல்லாம் குருமாரென்றும், தம்மவரல்லாத ஏனையோரெல்லாம் தம் அடிபணிந்து தாம் இட்ட ஏவலைச் செய்தலே முறையா மென்றும், மக்கள், பிரம்ம—க்ஷத்திரிய—வைசிய—சூத்திரர் என நான்கு வகையிற் பிரிக்கப்படவேண்டுவது கடவுளின் ஆணை என்றும், அந்நால்வகையினருள்ளும் தாமே உயர்ந்த

சாதி என்றும், ஏனைய மூன்று பிரிவினரும் படிப்படியாக ஒருவருக்கொருவர் தாழ்ந்தவரென்றும், க்ஷத்திரியர் வைசியர் ஆகிய இருபாலருக்கு வேதங்களைக் காதினாற் கேட்பதற்கே யன்றிக் கற்பதற்கு உரிமையில்லை என்றும், கடைக்குலத்தவராகக் கூறப்பட்ட தமிழ்மக்கள் (சூத்திரர்) வேதங்களைக் காதினாற் கேட்டலும் கூடாதென்றும், மீறிக் கற்றாலும் அல்லது கேட்டாலும் கற்ற நாவை அறுத்தும், கேட்ட செவியில் உருக்கிய ஈயத்தை உகுத்தும் சண்டாளர்களாகக் கருதப்படவேண்டுமென்றும், இதற்குச் சான்றாக,

"உச்சாரணே ஜிஹ்வாச்சேதா தாரணே சரீரபேத:" (மனு)

இதன் பொருள் : **சூத்திரன் வேதத்தை வாயினாற் சொன்னால், நாக்கை அறுக்க வேண்டும்; உணர்ந்து வைத்திருந் தால், நெஞ்சைப் பிளக்கவேண்டும்.**

என்றும், இன்னும் நாவினாற் சொல்லுதற்கும் கையினால் எழுதுதற்கும் தகாத பொய்யும் புரளியும் புளுகும் புனைந்து எழுதப்பட்ட 'மனுஸ்மிருதி' என்ற குழறுபடைச் சுவடி ஒன்றைக் காண்பித்து, இவ்வரிய நூல் எங்களுக்கு (வயிற்றுப் பிழைப்புக்காக) த் தரப்பட்டதென்றும், இந் நூலிற் காணப்படும் நெறிகளுக்கு மாறாக நடப்பவர்கள் சண்டாளர் — அவர்களைச் சாதியினின்றும் விலக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லி, காலவேறுபாட்டாலோ அல்லது வேறு காரணத்தாலோ கள்ளங் கவடற்ற அவ்வரசர் பெருமக்களை ஏமாற்றி மயக்கி, அப்பார்ப்பனர்கள் தம் வழியில் திருப்பிவிட்டனர்.

இங்ஙனமாக, அவ்வாரியப் பார்ப்பனர் வீசிய வலையில் அகப்பட்ட நந் தமிழ்வேந்தர், அப்பார்ப்பனர் போடுந் தாளத்திற்கெல்லாம் ஆடத் துவங்கினார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அவர்களையே தங்கள் குல குருமாராகக் கொண்டனர்! அவர்களைக்கொண்டே தாஞ் செய்யுஞ் சடங்குகள் எல்லாஞ் செய்விக்கத் தொடங்கினர்!

**கடவுளைப்பற்றிய கவலையே இல்லாதிருந்த 'தமிழ் மக்களிடத்தில்,** பற்பல கடவுளரையும்—அக்கடவுளருள்ளும் ஒரு கடவுளை உயர்த்தியும் ஒரு கடவுளைத் தாழ்த்தியும் மக்களிடையே பகைமையும் பிளவும் உண்டாகும்படி செய்தும், அக்கடவுளருக்கெல்லாம் பெருந்தொகைப் பொருட் செலவில் கோயில்கள் எடுப்பித்து, அக்கோயில் களின் பேரால் பல நிலங்களை எழுதி வைக்கும்படி செய்தும், பசு படம், தேவார பாடசாலை முதலியன அமைக்கும்படி செய்தும் தம் பிழைக்கு வழிதேடிக்கொண்ட தல்லாமல், தாமே அக்கோயில்களின் பூசாரிகளாகவும் ஆகி, அவ்வரசர் பெருமக்களைக் கையிற் பம்பரம்போல் ஆடச் செய்தனர். அம்மட்டோடா! அப்பார்ப்பனர் தம் கால்களில் பொற்காசுகளையும் வெள்ளிக்காசுகளையுங் குவியல் குவியலாகக் கொட்டிக் கும்பிடும்படியுஞ் செய்தனர்.

இனி, **'வடதிசைப் பார்ப்பான் தென்திசைக்கேகின் நடையது கோணிப் புலையனாவான்'** என்றபடி, ஒழுக்க வழக்க நாகரிகங்களிற் பெரிதும் இழிந்த நிலையையுடைய வர்களும், புலால் உணவும் கட்குடித்தலும் கொலைத் தொழிலுமுடையவர்களுமான ஆரியப் பார்ப்பனர் தமிழ் நாட்டில் வந்து குடியேறிய பின்னரே, தமிழ்நாட்டிலுள்ள சிலரும் அவர்களின் தீய பழக்க வழக்கங்களைக் கையாள் பவராயினர். இங்ஙனம் பார்ப்பனரின் தீய பழக்கவழக்கங் களைத் தமிழ்மக்களிற் சிலர் மேற்கொண்டராயினும், அவ் வாரியப் பார்ப்பனர்களாற் கொண்டுவந்து புகுத்தப்பட்ட மதக் கோட்பாடுகளையும் அவற்றிற்கு அடிப்படையாக வுள்ள சட்ட திட்டங்களையும் தமிழ்மக்களிற் சிலர் ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டனர். எனவே, இப்போது **தீண்டப் படாதவர்கள் என்று ஒதுக்கப்பட்டுச் சேரிப்புறங்களிலும் மலைப்புறங்களிலும் வாழ்ந்துவரும் ஏழைத் தமிழ் மக்கள் எல்லாரும், இந்துமதக் கோட்பாட்டுக்கு மாறாகக் கல்வி கற்க முயன்றவர்களும்—வேதங்களைப் படிக்கவும் கேட்கவும் முயன்றவர்களும்—பார்ப்பனர் களை மதியாது நடந்தவர்களும்—இந்துமதக் கடவுளரை வழிபட மறுத்தவர்களும் ஆன வீரத் தமிழ்ப் பெரு மக்களே** என்பதை ஒவ்வொருவருந் தங்கள் கருத்திற்

பதித்தல்வேண்டும். இவ்வாறாக, ஆரியப் பார்ப்பனர் செய்த கொடுமைகளினால் நம்மவருள் ஒரு சாரார் தீண்டப் படாதவர் என்று ஒதுக்கப்பட்டதற்குக் காரணம், அக் காலத்திலிருந்த தமிழ் வேந்தரும் தமிழ்ச் செல்வரும் பார்ப்பனரின் எடுப்பார் கைப்பிள்ளைகளாய் இருந்து, அவர்கள் சொன்னவற்றை எல்லாம் கண்மூடித்தனமாக நம்பி இருந்ததுமாகும். இங்ஙனமன்றி, பசுவின் இறைச்சி யைத் தின்பதனாலேதான் பறையர் முதலானோர் சேரிப் புறங்களுக்கு ஒதுக்கப்பட்டுத் தீண்டப்படாதவராகக் கருதப்பட்டனர் என்று சிலர் கூறுவது, தாம் இந்துமதத் திற்கு அடிமை என்பதைக் காண்பிக்குங் கோழை மதியாம் என்று உணர்க. அன்றியும், பசு முதலான விலங்குகளைக் கடவுளரின் பேரைச் சொல்லிச் செய்யப்படும் யாகத்திற் கொன்று, அவற்றின் இறைச்சியைத் தின்பவர் பார்ப்பனரே என்பதை உணர்ந்திருந்தும், அடிகளார் பறையர்மீது இக் குற்றத்தை ஏற்றுவதும், அதனாலேயே அவர்கள் சேரிப் புறங்களுக்கு ஒதுக்கப்பட்டனர் என்று கூறுவதும் எத்துணை அறியாமை என்பதை எண்ணிப் பாருங்கள், அன்பர்களே.

---

# பார்ப்பனர் உயர்வுந் தமிழர் தாழ்வும்

இக்காலத்தில் மட்டும் இந்துமதக் கொடுமைகள் முற்றிலும் ஒழிந்துவிட்டதாகக் கருதமுடியாது. என்றாலும், இக்காலத்தில் இந்துமதக் கொடுமைக்கு அஞ்சியவர்கள் வேறு வகையாகத் தப்பித்துக் கொள்ளுகிறார்கள். இப்போது எம்மை ஆளும் ஆங்கில அரசினர் ஓரளவு பகுத் தறிவோடும் நெறிமுறையோடும் அரசியலை நடாத்தி வருவதால், ஆரியர்களின் 'மனுஸ்மிருதி' முதலான இந்து மதச் சட்டங்களில் மிகக் கொடுமையான பகுதிகள் நடை முறையில் கையாள்வதற்கு இடமில்லாது போயிற்று. போகவே, பார்ப்பனர்கள் தங்கள் பிழைப்புக் குறைந்து வருதலைக் கண்டார்கள். அதனால் தங்கள் பிழைப்புக்கு

வேறு வழி தேடிக்கொண்டார்கள். அதாவது, தங்கள் மதக் கோட்பாட்டுக்கு மாறாக ஆங்கில மொழியில் நல்ல பயிற்சியடைந்து பட்டங்கள் பெற்று, அரசியல் துறையிலும் பிறதொழில் நிலையங்களிலும் வேலைக்கமர்ந்து பெரும் ஊதியந் தேடத் துவங்கிவிட்டார்கள். இதனால் தமிழ் மக்கள் பெரும்பாலாருக்குப் பிழைப்புக் கிடைப்பதரிதாயிற்று. காற்படி அரிசிக்குக் காதவழி நடந்து வயிறு கழுவும் பார்ப்பனர் கால் நீட்டிக்கொண்டிருந்து விலாப்புடைக்கத் தின்னும் நிலையை அடைந்ததால், தமிழ்மக்கள் பெரும் பாலாருக்குப் பிழைப்பில்லாமற் போயிற்று. போகவே, அவர்களிற் பெரும்பாலார் இலங்கை—ஆப்பிரிக்கா—மலாய் நாடு முதலான அயல்நாடுகளுக்குச் சென்று பிழைக்க வேண்டியவர்களானார்கள். இனி, ஒரு சிலர் இந்துமதக் கொடுமையையும் அதனால் ஏற்பட்ட வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பொறுக்கமுடியாமல் கிறித்தவ முகம்மதிய மதங்களைத் தழுவி அவற்றின் வாயிலாகத் தங்களுக்குப் பிழைப்புத் தேடிகொண்டார்கள். கிறித்தவ மதத்தைத் தழுவியவர்களிற் பெரும்பாலாருக்குக் குடியிருக்கவும் பயிர்த்தொழில் செய்யவும் நிலங்கள் கிடைத்த தோடு, கல்வி கற்று உயர்நிலையை அடையும் உரிமையும் கிடைத்தது. எடுத்துக்காட்டாக, முனியனோ—சங்கிலியோ என்ற பெயருடன் தீண்டப்படாதவனாக இருந்த ஒரு தமிழன், கிறித்தவ மதத்திற் சேர்ந்த காரணத்தால் கல்வி கற்றுப் பட்டம் பெற்று அந்தோணியோ—டேவிட்டோ என்ற பெயருடன் தாசில்தார் கலெக்டர் போன்ற பெரிய பெரிய பதவிகளைப் பெற்றுப் பார்ப்பான் முதல் அனைவரும் கைகட்டி நின்று மதிக்கும்படியான உயர்நிலையை அடைந்திருப்பதை நாம் இன்று கண்கூடாகக் காண்கின்றோ மன்றோ! எனவே, நேற்றுத் தீண்டப்படாதவனாய்க் கருதப்பட்ட ஒருவன் இன்று பார்ப்பானைப் பார்க்கிலும் உயர்ந்த நிலையை அடைந்த முறையை அறிந்து, இனியாவது தீண்டப்படாதவர்களாக விலக்கி வைத்திருப்பவர்களைத் தம்முடன் சேர்த்துக்கொள்ள உயர்சாதியினர் என்று சொல்லிக்கொள்பவர்கள் முயல்வார்களாக. இனி, முசல்மான் மதத்தைத் தழுவியவர்களிற் பெரும்பாலார் வாணிகத் துறையில் நல்ல தேர்ச்சியடைந்து அதன்

வாயிலாகத் தங்கள் பிழைப்புக்கு வழி தேடிக்கொண்டது மன்றிப் பார்ப்பான் முதல் அனைவரும் மதிக்கும்படியான உயர்நிலையையும் அடைந்துவிட்டார்கள்.

இனி, பார்ப்பனர்கள் நூற்றுக்கு நூறு பேரும் படித்துப் பதவிகளில் இருப்பதற்கும் பார்ப்பனரல்லாதார் அங்ஙனம் இல்லாததற்கும் காரணம் என்னவென்றால், ஆரியப் பார்ப்பனர் மானத்தை விற்றேனும் உயிர்வாழ வேண்டுமென்ற கொள்கையும், தமிழ் மக்கள் உயிரைக் கொடுத்தேனும் மானத்தைக் காப்பாற்றுதல் வேண்டும் என்ற கொள்கையும் உடையவர்களாய் இருத்தலேயாம். அன்றியும், பார்ப்பனர் கல்வி கற்பதற்குப் பொருள் வசதியும் பிறவழிகளும் இருப்பதாலும், பார்ப்பனரிலும் பொருள் வசதியில்லாதார் சத்திரங்களிலுங் கோயில் களிலுஞ் சாப்பிட்டுக்கொண்டே கல்வி கற்க வசதி இருப்ப தாலும், அங்ஙனம் கற்றபின் வேலை கொடுப்பதற்குப் பார்ப்பனர்களே அரசியல் துறையிலும் பிற இடங்களிலும் உயர்ந்த பதவிகளில் இருப்பதாலும், தமிழ்மக்களைப் பார்க்கிலும் பார்ப்பனர்களே எல்லாத் துறையிலும் முன்னேற்றமடைந்து வருகிறார்கள். எனவே, இதுகாறும் கூறியதுகொண்டு, பார்ப்பனர்கள் உயர் நிலையை அடைந்ததற்கும், தமிழ் மக்களில் ஒரு சாரார் தீண்டப் படாதவர்களாகச் சேரிப்புறங்களில் வாழ்வதற்கும் உரிய காரணங்களை எடுத்துக்காட்டினோம். இனி, எடுத்துக் கொண்ட பொருண்மேற் தொடர்ந்து செல்வோம்.

இனி, பசுவினுங் கீழான ஆடு, பன்றி, கோழி முதலான விலங்குகளையும் பறவைகளையும் கொன்று, அவற்றின் இறைச்சியைத் தின்பவர் உயர்சாதியினராய் நகரில் வாழ்வதும், பசுவின் இறைச்சியைத் தின்னும் பழந் தமிழ்மக்கள் சேரிகளில் வாழ்வதும் வியப்பாகவே இருக் கிறது. இதுபற்றி யன்றோ,

" பறையரைப் பறையர் என்று பறைந்திடும் மனிதர் கேளீர்
பறையர் தம் மலத்தைத் தின்னும் பன்றியைப்
புசிப்பதென்னோ

கறையதேயாகும் அந்தக் கறிதனைக் கலத்திலிட்டு.
மறையவே வைத்துத் தின்னும் மனிதரே பறையர் கண்டீர்''

என்ற ஆன்றோர் பொன்மொழியும் எழுந்ததாகும். இனி, பசுவைக் கொன்றன்றி அதன் தோலை எடுத்தலும், அதனால் கடவுளுக்கும் அவரை வழிபடும் உயர்சாதியினர் என்று சொல்லிக்கொள்பவர்க்கும் பயன்படுவனவான பேரிகைகளுஞ் செருப்பு முதலியனவும் ஆக்கிக்கொள்ளுதலும் முடியாதாகையால், பசுத்தோலின் ஒரு பகுதியான இறைச்சியைத் தின்பதால் மட்டும் ஒரு சாரார் ஒதுக்கப் பட்டுள்ளனர் என்ற மறைமலையடிகளார் தணிவு ஒரு சிறிதும் ஏற்றுக்கொள்ளக்கூடியதன்று. ஏனென்றால், பசுவின் தோல் கடவுளுக்கும் உயர் சாதியினருக்கும் பயன் படும்போது, அதன் இறைச்சி பழந்தமிழ் மக்களாகிய பறையருக்குப் பயன்படுவதில் இழுக்கொன்றும் இல்லையன்றோ ! அன்றியும், கடவுளுக்கும் உயர்சாதி மக்களுக்கும் பயன்படும் பொருள்களான கோரோசனையும் கத்தூரியும் முறையே காளைமாட்டையும் மானையுங் கொன்று எடுப்பது வழக்கமாய் இருக்கும்போது, ஆவுரித்துத் தின்னும் புலையர்மீது மட்டும் இத்தகைய பெருங்குற்றத்தைச் சுமத்தி, அவர்களை இழிந்தவர்களாகக் கருதுவது எவ்வளவு அறியாமையுஞ் செருக்குமான செயல் என்பதை எண்ணிப் பாருங்கள், அன்பர்களே.

இனி, சிவத்தொண்டின் மேன்மையை அறிவித்தற் பொருட்டு நந்தனாரை நெருப்பில் முழுகும்படி கடவுள் கட்டளையிட்டார் என்று அடிகளார் கூறுவது வெறுஞ் சைவ அமைவே (சமாதானமே) அன்றி, அதனாற் பெறப் படும் உண்மை யாதும் இல்லை. இனி, 'சிவநேயம் உண்டானாற் புலையுடம்பும் புனிதவுடம்பாம்' என்று அடிகளார் கூறுவதும் அறிவுக்குப் பொருந்தாக் கூற்றாம். ஏனென்றால், பேரருட் பிழம்பென்று சைவர்களாற் கொண்டாடப்படுஞ் சிவனிடத்து உண்மையாகவே நேயம் அல்லது அன்பு ஒருவனுக்கு எழுந்ததென்றால், அத்தகைய அன்பின் காரணமாக அந்தச் சிவன் அவனுடைய உடம்பைத் தாமாகவே புனிதமாக்கி இருக்கவேண்டும். அங்ஙனமன்றி,

பார்ப்பனர் நந்தனாரை நெருப்பிலிட்டுப் பொசுக்குவதன் வாயிலாகவே அவர் புனிதமாக்கப்பட்டார் என்று கூறுவது, அன்பே ஒரு வடிவாய் உள்ள சிவனுக்கு ஏற்ற செயலாகாது. ஒருவனை உயிருடன் நெருப்பிலிட்டுப் பொசுக்குவது இரக்கமும் அன்புமற்ற கொடியவர்களின் செயலேயன்றி, பேரிரக்கமும் பேரன்பும் வாய்ந்தவர்களின் செயலுமாகாது. எனவே, நந்தனாரை நெருப்பிலிட்டுக் கொளுத்திய அன்பும் இரக்கமுமற்ற கொடியவர்களான ஆரியப் பார்ப்பனரின் வன்னெஞ்சம் படைத்த செயலுக்கு எவ்வளவு சைவ முலாம் பூசித் தணிவு (சமாதானம்) கூறினாலும், அதனைப் பகுத்தறிவுடைய உலகம் ஒருபோதும் ஒப்புக் கொள்ளாது. இனி, அடிகளார் இங்ஙனம் கூறியன வெல்லாம், அவர், சைவ மதத்தினிடத்தும் சிவனடியார் களிடத்தும் வைத்துள்ள ஒரு பற்றுதலினாலேயாம் என்பதனையும் அடிகளார் நீண்டகாலமாகச் சைவ மதத் தைத் தழுவி, அதுவே மெய்ச் சமயம் என்ற நம்பிக்கை யோடு சைவ மதக் கொள்கைகள் விரவிய நூல்கள் பல எழுதி வெளியிட்டிருப்பதால், உண்மைக்கும் பகுத்தறிவுக் கும் மாறான நந்தனார் நிகழ்ச்சியை விளக்கி, அதன் உண்மை வரலாறு இதுவெனக் காட்டத் துணிவு உண்டாக வில்லை என்பதனையும் நாம் அறிவோம். ஆகவே' **அறிவாராய்ச்சியிற் சிறந்து விளங்குபவர்களைக்கூட மத மெனும் பேய் தன்வயப்படுத்தி விடுகின்றதென்பது இதனால் நன்குத் தெளிவாகின்றது** என்று இதுகாறும் கூறியதுகொண்டும், நந்தனாரின் உண்மை வரலாறு இது வென்பதும், பார்ப்பனர் சைவமதத்தின் பேரால் தமிழ் மக்களை எவ்வளவு இழிவுபடுத்தும் கொடுஞ் செயல்களைக் கையாண்டார்கள்—கையாளுகின்றனர் என்பதும் யாதொரு அய்யுறவுக்கும் இடமின்றித் தெளியப்படும் என்க.

# முடிப்புரை

ஆகவே, இத்தகைய அறிவுக்குப் பொருந்தாக் கதைகளைக் கடவுள் பேராலும், அவரடியார்கள் என்று சொல்லப்படுபவர் பேராலும் எழுதித் தமிழ்மக்களை இழிவுபடுத்த எண்ணிய ஆரியச் சூழ்ச்சியை உணர்ந்து, வேத புராண இதிகாச மூடநம்பிக்கையையும், கடவுளிடத்து வைத்துள்ள அடிமை மனப்பான்மையையும் ஒழித்து, மக்கட் பண்போடு வாழ்வது இனித் தமிழ்மக்களுடைய முன்னேற்றத்திற்கு அறிகுறியாகும். நம்மவரிற் பெரும்பாலார் தாம் கடவுளிடத்து அன்பு செலுத்துவதாகச் சொல்லி அவருக்கு அடிமையாகின்றனர். அன்புக்கும் அடிமைக்கும் உள்ள வேறுபாட்டை அவர்கள் உணர்வதில்லை. அன்பு—நட்பையும், அடிமை—அச்சத்தையுமே உண்டாக்குவன என்பதை உள்ளபடியே உணர்கின்றவர்கள், தாம் கடவுளிடத்துக் கொண்டுள்ள அடிமை உணர்ச்சியை உடனே விட்டுவிடுவர். கடவுள் என்ற சொல்லின் பொருளை அறியாத பலர், தாம் புரிகின்ற தீய செயல்களைப் பிறர் அறிந்துகொள்ளாதபடி மறைப்பதற்காகக் கடவுள் வழிபாடு செய்வதாகப் பாசாங்கு செய்கின்றனர். இதனாற் பலர் ஏமாற்றமடைந்து தங்கள் பொருள் முதலியனவற்றைப் பறிகொடுத்து வாழ்க்கையைக் கெடுத்துக்கொள்கின்றனர். நம்பிக்கை மோசமுந் திருட்டுத் தொழிலும் பொய்யுங் கடவுள் பேரைச் சொல்லியே நடைபெறுகின்றனவென்பது கண்கூடு. ஆதலால், கடவுளுக்காகப் பரிந்து பேசுகின்றவர்களிடம் மக்கள் விழிப்பாய் இருத்தல்வேண்டும்.

இனி, கடவுள் என்ற ஒரு தனிப்பொருள் எவ்விடத்தும் எக்காலத்தும் எவ்விதத்தும் இல்லை என்பதை ஒவ்வொருவரும் உறுதியாகக் கொள்ளுதல் வேண்டும். கடவுள் என்ற சொல்லுக்கு எல்லாவற்றையுங் கடந்து நிற்கும் ஒரு மெய்ப்பொருள் அல்லது மெய்யுணர்வு என்பதே பொருளாகும். இத்தகைய சிறந்த கருத்தமைந்த 'கடவுள்' என்ற சொல் தமிழைத் தவிர, வேறெம்மொழியினும் அமைய

வில்லை. வேறு மொழியாளர் எல்லாரும் இம்மெய்யுணர்வைக் குறிக்குஞ் சொல்லுக்கு வழங்கிவரும் பெயர்கள் அப்பொருளைக் குறியாது வேறுவகையிற் பொருள் தந்து நிற்கின்றன. அவையெல்லாந் தனிப்பட்ட ஒருவனையோ ஒருத்தியையோ குறிப்பிட்டு நிற்கின்றனவேயன்றித் தமிழிற் காணப்படுவதுபோல மக்களனைவர்க்கும் பொதுவான மெய்யுணர்வைக் குறித்து நிற்பனவாயில்லை. எடுத்துக்காட்டாக, 'சிவன்' என்ற சொல் சிவப்பு நிறமுடைய ஒருவனை; (சிவப்பு நிறம் சிறப்பாக ஆரியர்க்கே உரியது) அல்லது செந்நிறமான நெருப்பைக் குறித்து, செந்நிறமுள்ள ஒருவன் அல்லது ஒன்றன் பெயராகப் பொருள் தந்து நிற்கின்றதேயன்றி, கடவுள் என்ற சொல்லுக்கு அமைந்திருக்கும் மெய்ப்பொருள் அல்லது மெய்யுணர்வு என்ற பொருளில் அது அமையவில்லை. இனி, 'சிவன்' என்ற சொல்லுக்குச் செம்பொருள் அதாவது, செம்மையான பொருள் எனக் கொள்வது வலிந்து கொள்ளும் பொருளாகுமேயன்றி, அதன் உண்மையான பொருளாகாது. திருவள்ளுவர் மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தில் கூறியுள்ள,

> " பிறப்பினும் பேதைமை நீங்கிச் சிறப்பீனுஞ்
> செம்பொருள் காண்ப தறிவு "

என்ற இக்குறள் வெண்பாவில் வரும் 'செம்பொருள்' என்ற சொல்லைச் சிவனுக்கு ஏற்றி அவனைச் செம்மையான பொருளில் வைத்து வழங்குவாரும் உளர். ஈண்டுத் திருவள்ளுவர் கூறிய செம்பொருள் சிவனைக் குறித்ததன்று. மற்று, பிறப்பினால் உண்டாகும் அறியாமையினின்றும் நீங்கிச் சிறப்பைத் தருகின்ற செவ்விய பொருளை அதாவது, பகுத்தறிவைக் கண்டு அதன்படி நடப்பதே அறிவு எனப்படும் என்பதே இக்குறளிற் போந்த உண்மையாகும். ஒருவன் பிறக்கும்போது அறியாமையோடு பிறக்கின்றான். பின்னர், அவனுக்குப் படிப்படியாக அறிவு உண்டாகின்றது. அதன் பின்னர், தான் அறிந்தவற்றை உணரும் பகுத்தறிவு உண்டாகின்றது. இப்பகுத்தறிவு அறிவுக்கு அறிவாய் நின்று அவனை நல்வழியிற் செலுத்து

கின்றது. ஆகையால், ஒருவனுடைய பொது அறிவுக்குச் சிறப்புத் தந்து அவனை நல்வழியிற் செலுத்தும் பகுத்தறிவின்படி நடப்பதே அறிவெனப்படும் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். இதன் பொருள் அறியாதார் சிலர் தத்தம் கொள்கைகட்கு ஏற்பப் பொருள்கொண்டு மயங்குவர். அன்றியும், 'சிவன்' என்ற சொல், 'கந்தன்,' 'இராமன்' என்ற சொற்களிற்போல ஒரு ஆண்பாலைக் குறித்து நின்கின்றதேயன்றி, 'கடவுள்' என்ற சொல்லிற்போல ஆண் பெண் என்ற இருபாலையுங் குறித்து நின்று அவர்களின் மெய்யுணர்வை விளக்கும் ஒரு பொதுச் சொல்லாயும் அது அமையவில்லை. இவ்வாறே மெய்யுணர்வைக் குறிக்கும் வேறு மொழியாளர் சொற்களும் அதனதன் கருத்தில் மாறுபட்டு நிற்கின்றனவென்றுணர்க.

இனி, சிவன் என்னுஞ் சொல் ஒரு கடவுளைக் குறித்த பெயரன்று என்பதற்கு இன்னுமொரு வலிய சான்று காட்டுவோம். இக்காலத்தில் போலன்றிப் பண்டைக் காலத் தமிழ்மக்கள் நீண்ட நாட்கள் உயிர்வாழ்ந்திருந்தனர் என்றும், அங்ஙனம் இருப்பதற்கு அவர்கள் பல உடற்பயிற்சி முறைகளைக் கையாண்டு வந்தனர் என்றும் பண்டைய தமிழ்ச் சான்றோரின் வரலாறுகளால் அறியக் கிடக்கின்றது. அங்ஙனமுள்ள உடற்பயிற்சிகளுள் வளிநிலை (பிராணாயாமம்) என்பதும் ஒன்றாகும். அதாவது, உள்மூச்சு வெளிமூச்சு என்னும் இருவகை மூச்சுக்களையும் முறையே உயிர்ப்பது. இவற்றுள் உள்மூச்சு ஒரு மடங்கும் வெளிமூச்சு ஒன்றரை மடங்குமாகும். எனவே, உள்மூச்சினும் பார்க்க வெளிமூச்சு அதிகஞ் செலவாவதால், ஒருவனுடைய வாழ்நாட்களின் அளவும் குறைந்து போகின்றது. ஆகையால், இவ்விரு மூச்சுக்களையும் சமமாக்கிவிட்டால் வாழ்நாள் நீடிக்கும் என்பதைப் பண்டைத் தமிழ்மக்கள் அறிந்திருந்தனர். அங்ஙனம் இரு மூச்சுக்களையுஞ் சமப்படுத்துவதற்காகவே 'சிவ' என்னும் இரண்டெழுத்துக்களையும் கருவியாக வைத்து ஒலித்துக் கொள்ளும்படியான முறையையும் கண்டுபிடித்தார்கள். இயல்பாகவே குறுகியும் நீண்டுமுள்ள உள்மூச்சு வெளிமூச்சுக்கள், குறிலும் நெடிலுமாகவுள்ள 'சிவா' என்னும்

ஈரெழுத்துச் சொல் போன்றனவென்றும், இச்‘சிவா’ என்னுஞ் சொல்லிலுள்ள கடையெழுத்தான ‘வா’ என்னும் நெடிலை ‘வ’ என்று குறிலாக மாற்றிச் ‘சிவ’ என ஒலித்தால் இருவகை மூச்சுக்களும் சமப்பட்டுவிடுமென்றும், அங்ஙனம் இருவகை மூச்சுக்களையுஞ் சமப்படுத்தி ஒலிப்பதால் உடல் உரமும் ஆயுள் நீடிப்பும் பேணப்படுமென்றும் அறிந்த முன்னோர் அங்ஙனம் செய்துவந்தனர். இவ்வரிய முறையை முதன்முதல் கண்டுபிடித்தவர் தலைச் சங்கத் திற்குத் தலைவனாய் இருந்த ஒரு தமிழ்ப் புலவர் என்பதும், அவர் வளிநிலைப் பயிற்சி (பிராணாயாமம்) செய்யும்போதெல்லாம் ‘சிவ’ என்னும் ஈரெழுத்துக்களையும் ஒலித்துக்கொண்டிருந்த காரணத்தாலேயே அவர் ‘சிவன்’ என அழைக்கப்பட்டார் என்பதும் அய்யுறவின்றித் துணியப்படும். சடை வைத்திருப்பவரைச் ‘சடைச்சாமி’ என்றும், ‘ஓம்’ என்று ஓயாமற் சொல்லிக்கொண்டு திரிபவரை ‘ஓம்சாமி’ என்றும் மக்கள் அழைப்பதுபோலவே, ‘சிவ’ ‘சிவ’ என்று ஒலித்துக்கொண்டிருந்த தலைச் சங்கத்தின் தலைவனையுஞ் ‘சிவன்’ என்ற பெயரால் அக்கால மக்கள் அழைத்தனர் என்றுணர்க. இனி, இங்ஙனம் இருவகை மூச்சுக்களையுஞ் சமப்படுத்திக் கொள்வதால் ஆயுள் நீடிக்கும் என்ற உண்மையினைத் திருமூலர்,

“ வளியினை வாங்கி வயத்தில் அடக்கிற்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம் ”

என்ற பாடலால் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்.

இனி, இஞ்ஞான்றைச் சைவர்களால் ஒலிக்கப்பட்டு வருஞ் ‘சிவாயநம’ என்னும் அய்ந்தெழுத்துக் கொண்ட சொல் தமிழுக்கும் தமிழர்க்கும் மாறுபட்டதாம் என்பதும் ஈண்டுக் கருதற்பாலதாம். எப்படியென்றால், ‘சிவ’ என்னுந் தமிழ்ச் சொல்லுக்கு அடுத்து வரும் ‘ஆய’ என்னும் நான்காம் வேற்றுமையுருபும், ‘நம’ என்னும் வழி பாடு குறித்த சொல்லும் வடமொழியாகும். தமிழ் மக்களுக்குச் சிவ வழிபாடும் அதற்குரிய அய்ந்தெழுத்தும்

உண்மையாகவே இருந்திருப்பின், அது 'சிவபோற்றி' என்பது போன்ற தமிழ்ச் சொல்லாயிருக்குமே யன்றிச் 'சிவாயநம' என்ற வடமொழிப்பெயராய் ஒருபோதும் இருக்கவே இருக்காது. எனவே, நாம் முன்னரே எடுத்துக் காட்டியபடி, ஆரியப் பார்ப்பனர் தமிழ்நாட்டுக்கு வந்தபின், தங்கள் பிழைப்பிற்காகச் சங்கப் புலவனாகிய சிவன் பேரால் எடுக்கப்பெற்ற நினைவுக் கற்களைக் கடவுளாக்கிக் கோயில்களும்-வழிபாட்டு முறைகளையும் ஏற்படுத்திய பின்னர்தான், சிவன் ஒரு கடவுள் என்றும், அவன் வணக்கத்திற்குப் பயன்படுத்தும் மந்திரம் 'சிவாயநம' என்றும் கற்பித்துத் தமிழ்மக்களை ஏமாற்றித் தங்கள் பிழைப்பிற்கு வழிதேடிக் கொண்டனர் என்றுமே உணர்ந்து கொள்ளப் படும். படவே, **சிவன் என்னுஞ் சொல் ஒரு கடவுளைக் குறித்த பெயராகாதென்பதும்** யாதொரு அய்யுறவுமின்றித் துணியப்படும் என்க.

இனி, மெய்யுணர்வு எல்லாவற்றையுங் கடந்து நிற்கின்றதென்றால், அதற்கும் நமக்கும் உள்ள தொடர்பு யாதோ என்று அய்யுறவேண்டியதில்லை. ஈண்டுக் கடவுள் என்ற பெயரில் வரும் மெய்யுணர்வு எல்லாவற்றையுந் தன்னுள் அடக்கிக்கொண்டு நிற்கின்றதென்பதே பொருள். அதாவது, ஒருவனுக்கு இயல்பாகவுள்ள மெய்யுணர்வானது, அவனுடைய முயற்சியால் எல்லாவற்றையுஞ் செய்து முடிக்கும் ஆற்றலையுடையது என்பதாகும் இது பற்றியே திருவள்ளுவரும்,

"தெய்வத்தால் ஆகாதெனினும் முயற்சி தன்
மெய்வருந்தக் கூலி தரும்."

என்றுங் கூறிப்போந்தனர். திருவள்ளுவர் காலத்திலேயே கடவுள் என்ற ஒரு தனிப்பொருள் உண்டென்னுங் கொள்கை தோன்றி, அவராலேயே எல்லாச் செயல்களும் நிகழ்கின்றன வென்ற மூடநம்பிக்கை நிலைபெற்று விட்டதாயினும், திருவள்ளுவர் அதனைப் பொருட்படுத்தாது, முயற்சியையே முதன்மையாக வைத்துப் பேசியுள்ளார், இங்ஙனம் ஒருவன் தன்னுடைய முயற்சியால் எல்லா

வற்றையுந் தன மெய்யுணர்வில் அடக்கிச் செய்து முடிக்கும் ஆற்றலுள்ளவன் என்பதைக் குறிக்கும் கடவுள் என்ற சொல்லை, வேத புராண இதிகாசங்களிற் பேசப்படும் போலிக் கடவுளோடு ஒப்பிட்டுத் தங்கள் பகுத்தறிவை இழந்து நிற்கும் ஒரு கூட்டத்தார் தாங்கள் மெய்யுணர் யுள்ளவர் என்று சொல்லித் திரிகுன்றனர். அறிவே கடவுள் ; அன்பே கடவுள் என்று தாயுமானவர், திருமூலர் முதலான தமிழ்ப் பெரியார்கள் கூறியிருப்பதையும் இவர்கள் ஊன்றி உணர்வதில்லை. மக்களாய்ப் பிறந்தார் அனைவரும் ஒரு இனத்தவரே, அவர்களிடம் அமைந்துள்ள அறிவும் ஒரு தன்மையதே என்பதை உணர்த்தவே 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற முதுமொழியும் எழுந்ததாகும். ஆனால், மக்களின் அறிவை மயக்க எழுந்த வேத புராண இதிகாசங்கள் இந்த உண்மையை மறைத்து அதற்கு வேறு பொருள் கொள்ளும் நிலைமையை உண்டாக்கி விட்டன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால், வேத புராண இதிகாசங்களே மக்களின் மெய்யுணர்வை அழித்து, அவர்களுக்கு மூட நம்பிக்கையையும் அடிமை உணர்ச்சியையும் உண்டாக்கி விட்டனவாகும். இதனால் அறிவை விளக்குஞ் சங்க நூற்கள் இருக்கும் இடந் தெரியாமற் போயின. இந்த நிலையில் வேத புராண இதிகாசங்களின் சாரமாய் எழுந்த தேவாரம்-திருவாசகம்-திருவாய் மொழி-திருப்புகழ் முதலான நச்சுப்பூண்டுகள் தோன்றித் தொல்காப்பியம், திருக்குறள், பரிபாடல், அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, பத்துப்பாட்டு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து முதலான அறிவுச் செழும் பயிர்களை அவை வளர்ந்தோங்க விடாது முடிப்படர்ந்து விட்டன.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

என்றபடி, அறிவுச் சுடர் கொளுத்தும் பைந்தமிழ்ப் பயிர்களை மூடிப்படர்ந்திருக்கும் இந்நச்சுப்பூண்டுகளைக் களைந்தெறிந்தாலன்றி, அவை வளர்ந்தோங்கி உரிய பயனைத் தரா.

இனி, இங்ஙனந் தேவார-திருவாசக-நாலாயிரப் பிரபந்தங்களையும் நாம் குறை கூற முற்பட்டு விட்டோமே எனச் சிலர் எம்மீது சீற்றங் கொள்வர். ஆனால், நாம் அதற்காக வருந்தமாட்டோம். ஏனென்றால், அவை தமிழ்மக்களுக்குப் புறம்பானவை என்பதற்கு இந்நூலின்கண் பல சான்றுகள் காட்டியுள்ளோம். அவை தம்மால் எல்லாம் அவர்கள் உண்மை அறிந்து அமைதி பெற முடியாதாயின், இன்னு மொரு வலிய சான்று காட்டுவதன் வாயிலாக அத்தகையினருக்கு அமைதி உண்டாக்க முயல்வாம். அதாவது, தேவார-திருவாசக-நாலாயிரப் பிரபந்தங்களே தமிழ் மக்களின் கடவுள் நெறி வேதங்கள் என்றும், அவற்றைத் தமிழ்மக்கள் ஓதாதொழிதல் கூடாதென்றுங் கூறுவோர், தேவார காலத்திற்கு முந்திய தமிழ்மக்களின் கடவுள் நெறி வேதங்கள் எவை என்பதை விளக்க வேண்டுமன்றோ! ஆனால், தேவார காலத்திற்கு முந்திய தமிழ் வேதங்கள் எல்லாம் ஆடிப்பெருக்கில் அழிந்துவிட்டனவென்றும், அவற்றின் சாரமே தேவார-திருவாசக-நாலாயிரப் பிரபந்தங்களாய் உருவெடுத்தன வென்றும் எவரேனும் தணிவு கூறுவரேல், அதனை ஆராய்ச்சியறிவுடைய எவரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஏனென்றால், அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரர் ஆகிய நால்வராலும் பாடப்பெற்றதாகச் சொல்லப்படுந் தேவார திருவாசகங்கள், ஆரிய வேதங்களான இருக்கு—எசுர்—சாமம்—அதர்வம் என்பவற்றின் சாரமே என்று சைவ சித்தாந்தத்திற்குத் தாய் நூலான சிவஞான போதச் சிறப்புரையில் கூறப்பட்டிருக்கின்றது.

அதுவேயுமன்றி, ஆடிப்பெருக்கென்று சொல்லப்படுங் கடற்கோள் ஏற்பட்டு 9000 ஆண்டுகள் ஆய்விட்டனவென்று சிலரும், 5000 ஆண்டுகள்தான் ஆயினவென்று வேறு சிலரும் ஆராய்ந்து கூறியிருக்கின்றனர். எனவே, கடற்கோள் ஏற்பட்டுத் தமிழ்நாட்டின் ஒரு பகுதியும், அங்கே இருந்ததாகச் சொல்லப்படுந் தமிழ் வேதங்களும் வெள்ளப் பெருக்கால் அழிந்து போயினவென்று கூறப்படுங் கால வரையறைகளில், பின்னதாகவுள்ள 5000 ஆண்டுகள்தான் ஆயினவென்பதையே உண்மையெனக் கொண்டு பார்த்தாலும், தேவார காலத்திற்கும் கடற்கோள் ஏற்பட்ட காலத்திற்கும் இடையே 3670 ஆண்டுகள் தொக்கி நிற்கின்றன. எப்படி என்றால், தேவார திருவாசகங்களைப் பாடியவர்களின் காலம் இன்றைக்கு 1330 ஆண்டுகள் ஆகின்றனவென்று அடங்கன்முறை வரலாற்றில் குறிப்பிடப் பட்டிருக்கின்றது.

எனவே, கடற்கோள் காலத்திற்கும் தேவார காலத்திற்கும் இடைப்பட்ட 3670 ஆண்டுகளிலும் உயிர்வாழ்ந்து போந்த தமிழ்மக்கள், எந்தப் பாடல்களைக் கொண்டு இவர்கள் கூறுஞ் சிவனையுந் திருமாலையும் பாடி வழுத்தினார்கள் என்பதனைத், தேவார திருவாசகங்களைக் குறைகூறக் கூடாதென்று கூறும் இஞ்ஞான்றைச் சமயத் துறைத் தலைவர்கள் விளக்கிக் காட்டுதல் வேண்டுமன்றோ! அங்ஙனமின்றி, வறிதே ஆரிய மதத்தின் பிரிவுகளான சைவ வைணவ மதங்களையும், அவற்றிற் பேசப் படுங் கடவுளரையும், அக்கடவுளரை வாழ்த்தியும்-போற்றியும் வியந்துங் கூறப்படுந் தேவார-திருவாசக-நாலாயிரப் பிரபந்தங்களையும், அவற்றின் வேறுபடாத புராண இதிகாசங்களையுந் தங்களதென்றும், அவையே தமிழ்மக்களின் கடவுளர்-வேதங்களென்றும் கூறுவது, வால் அறுபட்ட நரியின் கதையோடொக்குமேயன்றி,

அவற்றை ஆராய்ச்சியும் பகுத்தறிவுமுடைய தமிழ் மக்கள் ஒருபோதும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

எனவே, தமிழ் மக்களாகிய நாம் மெய்யுணர்வோடு வாழ வேண்டுமானால், புராண மூட நம்பிக்கையும்-கடவுளிடத்து வைத்துள்ள அடிமைப்புணர்ச்சியும்-தக்களிடையே பிறப்பால் உயர்வுதாழ்வு காணும் இழிந்த மனப்பான்மையும் முற்றும் ஒழிந்து மாய வேண்டும். வேண்டவே அறிவை விளக்கும் பழந்தமிழ் நூற்களோடு பழகும் வாய்ப்பு ஏற்படும். படவே, மெய்ப்பொருளின் உண்மை இதுவென விளங்கி-அடிமைத்தளை அறுபட்டு மேலோங்கிச் செல்லும் நிலையுண்டாகும் என்றுணர்க. ஒழிக புராண மயக்கம்! தழைக தமிழர் நெறி! வாழ்க தமிழ்மக்கள்.

**“வாழ்வாவது மானம்—இது மண்ணாவது பொய்.”**

